# பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள்

(அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்குப் பகுதிநிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு)

ஆய்வாளர்

**மெ. செந்தாமரை**

பதிவுஎண்: 1214

**நெறியாளர்**

முனைவர் **சா.அமுதன்**

தமிழ் உயராய்வு மையம்
சேதுபதி அரசு கலைக்கல்லூரி
இராமநாதபுரம்




**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத்தரமதிப்பீட்டுக்குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் 'A+" தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக் குழுவின் முதல் தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி- 630 003.

தமிழ்நாடு - இந்தியா

செப்டம்பர் - 2018

முனைவர் **சா.அமுதன்**
முன்னாள் உதவிப்பேராசியர்
தமிழ் உயராய்வுமையம்
சேதுபதிஅரசுகலைக்கல்லூரி
இராமநாதபுரம்-623 502

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**'பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள்'** என்னும் தலைப்பில் மெ.செந்தாமரை இராமநாதபுரம் சேதுபதிஅரசுகலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் பகுதிநேர முனைவர் பட்டத்திற்காகச் செய்துள்ள இவ்ஆய்வு, அவர் செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ் ஆய்வுமீது வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

(சா.அமுதன்)
நெறியாளர்

**மெ.செந்தாமரை**
பகுதிநேரமுனைவர் பட்டஆய்வாளர்
தமிழ் உயராய்வுமையம்
சேதுபதிஅரசுகலைக்கல்லூரி
இராமநாதபுரம் - 623 502.

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**'பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள்'** என்னும் தலைப்பில் பிஎச்.டி பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இதற்குமுன் எந்தப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

(மெ.செந்தாமரை)
ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்
முனைவர். **சா. அமுதன்**
உதவிப்பேராசிரியர்
தமிழ் உயராய்வுமையம்
சேதுபதிஅரசுகலைக்கல்லூரி
இராமநாதபுரம்-623502.

## சுருக்கக்குறியீடு – விளக்கம்

| | | |
|---|---|---|
| உ. ஆ. | - | உரையாசிரியர் |
| குறள். | - | திருக்குறள் |
| தொ.ஆ. | - | தொகுப்புஆசிரியர் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| ப.ஆ | - | பதிப்புஆசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மேலது. | - | மேற்கூறிய நூல் |
| மொ.பெ. | - | மொழிபெயர்ப்பாளர் |

## நன்றியுரை

**'பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள்'** என்னும் தலைப்பிலமைந்த இவ்வாய்வேடு சிறந்த முறையில் உருவாவதற்கு அருள்புரிந்த இறைவனுக்கு முதற்கண் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இனியதமிழ் ஆய்வுகள் நாளும் நடைபெற அருந்தொண்டாற்றி வரும் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்ஆய்வுப்பணி செய்ய வாய்ப்பளித்த சேதுபதிஅரசுகலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்திற்கும், கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

ஆய்வு முயற்சிகளை ஊக்குவித்து, உற்சாகப்படுத்தி, உழைக்கத் தூண்டி, அரிய ஆலோசனைகளை வழங்கி ஆய்வு நெறியாளராய் நெறிப்படுத்தியதோடு, ஆய்வுகளை உற்றுநோக்கி திருத்தம் செய்து கொடுத்து, ஆய்வு சிறப்பாக அமைய ஆக்கமும், ஊக்கமும் தந்த அறிஞர் சா.அமுதன் உதவிப்பேராசிரியர், அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி சொல்வதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்.

எனது ஆய்வுப் பணி சிறப்பாக அமைய உதவிய சேதுபதி அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ஆ.நாகராசன் அவர்களுக்கும், உதவிபேராசிரியர்கள் முனைவர் அ.துரைப்பாண்டியன், முனைவர் ர.அதிசயம் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்வுப்பணிக்காக உதவிசெய்த தமிழ்த்துறையின் அனைத்துப் பேராசிரியர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் கல்விப் பயணம் செம்மையுற அமைய ஊக்கம் தந்த எனது வளர்ப்புத் தந்தையான எனது மாமாவிற்கும், எனது குடும்பத்தாருக்கும் எனது நன்றியைக் கூற எந்நாளும் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கி உதவிய எம் கல்லூரி தமிழ்த்துறை நூலகத்திற்கு என் நன்றி என்றும் உரியது.

அச்சாக்க முயற்சியில் உதவிசெய்து கணினி அச்சு செய்து தந்துள்ள குரு ஆப்செட் பிரிண்டர்ஸ், திரு.இரா.குருநாதன் அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மெ.செந்தாமரை

## பொருளடக்கம்

# முன்னுரை

ஆங்கிலேயரின் வரவு, கல்விப் பரவல், ஆங்கில மொழியின் ஆதிக்கம், நவீனத்துவத்தின் வரவு, இயந்திரங்களின் பெருக்கம், விஞ்ஞான வளர்ச்சி, ஊடகங்களின் தாக்கம், மொழிபெயர்ப்பின் செல்வாக்கு ஆகிய காரணங்களால் தமிழ்ச்சிந்தனைப் போக்கில் மாற்றம் ஏற்பட்டது. அமைப்பியல், பின் அமைப்பியல், நவீனத்துவம், பின் நவீனத்துவம், இருத்தலியல், பெண்ணியம், தலித்தியம் போன்ற இலக்கியக் கோட்பாடுகள் எழுத்துலகில் ஆதிக்கம் செலுத்தின. மேலை நாட்டில் பெண்ணியம் என்ற கோட்பாடு தோன்றுவதற்கு முன்னரே தமிழ்ச்சூழலில் வேதநாயகம் பிள்ளை, பாரதியார், பாரதிதாசன், திரு.வி.க, பெரியார் போன்றோர் பெண்விடுதலைச் சிந்தனைகளை விதைத்துச் சென்றனர். எனவே மேலை நாட்டில் தோன்றிய பெண்ணியக் கோட்பாடுகள் இந்தியக் கலாச்சாரத்திற்கேற்ற வகையில் இங்கு புரிந்து கொள்வதற்கான வாய்ப்பு ஏற்பட்டது. சமூகத்திலும், வேலைத்தளத்திலும், குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறைகளை மாற்ற வேண்டும் என்ற சிந்தனைப் போக்கு உருவாயிற்று. தாராளவாதப் பெண்ணியம், சோஷலிசப்பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம் ஆகிய கோட்பாடுகள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வந்தபின் தமிழ் படைப்புகளின் அகமும் முகமும் மாற்றம் காணத் தொடங்கின. ஆண்களின் துணையால்தான் பெண் விடுதலையை மீட்டெடுக்க முடியும் என்ற மரபார்ந்த சிந்தனைப் போக்கும் மாறியது. பெண்களின் சிக்கல்களைப் பெண்களின் கண்களால் பார்த்து வெளியிடும் ‘பெண் எழுத்து’ முறையும் உருவானது. கிரிஜாதேவி, மூவலூர் இராமாமிர்தம் அம்மையார்,

டி.பி.இராஜலெட்சுமி, கௌரி அம்மாள், சரஸ்வதிஅம்மாள், கிருத்திகா, சியாமளா, சரோஜா ராமமூர்த்தி, ஹெப்சிபா ஜேசுதாசன், கு.ப.சேதுஅம்மாள், அநுத்தமா, லெட்சுமி, சூடாமணி, சிவசங்கரி, இந்துமதி, வாசந்தி, கோமகள், அனுராதாரமணன், உஷா சுப்பிரமணியன், லட்சுமி, ஜோதிர்லதாகிரிஜா, இராஜம்கிருஷ்ணன் போன்றோர் பல்வேறு உள்ளடக்கத்தினிடையே பெண்களின் வாழ்வியல் சிக்கல்களையும் புனைகதைகளுக்குள் பதிவு செய்தனர். பெண் எழுத்தாளர்களின் வரிசையில் இராஜம் கிருஷ்ணனை வைத்தாலும் அவரது எழுத்து தனித்துவமாக நிற்பதைக் காணமுடிகிறது. ஆங்கிலப்புலமை, பெண்ணியக் கோட்பாட்டு அறிவு, இந்திய மரபு சார்ந்த புலமை, எழுத்தாளுமைத்திறன் ஆகியவற்றால் இராஜம்கிருஷ்ணன் பெண்ணியப் புனைகதை ஆசிரியர்களில் முக்கியமானவராகத் திகழ்கிறார். பெண் எழுத்து பற்றிய தேடல் மிகுந்த நவீன இலக்கியச் சூழலில் இராஜம்கிருஷ்ணனின் நாவல்களை ஆராய்வது காலத்தின் தேவையாக உள்ளது. எனவே பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணனின் நாவல்கள் ஆய்விற்கு உட்படுத்தப்படுகின்றன.

**ஆய்வுத்தலைப்பு**

**பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள்** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**முன் ஆய்வுகள்**

திரு கு.நடராசன் **இராஜம்கிருஷ்ணன் புதினங்களில் பெண்மைக்கோட்பாடு** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு செய்துள்ளார்.

கெ.எ.இந்திராணி **இராஜம்கிருஷ்ணனின் பெண்குரல் ஓர் ஆய்வு** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் இளமுனைவர் பட்ட ஆய்வு செய்துள்ளார். வி.கினோ **இராஜம்கிருஷ்ணனின் குறிஞ்சித்தேன் ஒரு திறனாய்வு** எனும் தலைப்பில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இளமுனைவர் பட்டஆய்வு செய்துள்ளார். கா.சு.வத்சலாதேவி **வேருக்குநீர், அக்னிசாட்சி (மலையாளம்) ஓர் ஒப்பீடு** என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். ஏ.எஸ்.நெல்லையப்பன் **இராஜம்கிருஷ்ணனின் வேருக்கு நீர் குறிஞ்சித்தேன் ஓர் ஆய்வு** என்னும் தலைப்பில் ஆய்வு செய்துள்ளார். நா.நளினிதேவி **இராஜம்கிருஷ்ணன் புதினங்களில் சமுதாய மாற்றம்** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு செய்துள்ளார். இராஜம்கிருஷ்ணனின் நாவல்களைப் பிற நாவலாசிரியர்களுடன் ஒப்பீடு செய்தும் ஆய்வுகள் வெளிவந்துள்ளன.

**ஆய்வு நோக்கம்**

**‘இராஜம்கிருஷ்ணன் படைப்புகளில் பெண்ணியம்’** எனும் இவ்வாய்வானது பெண்ணியக் கோட்பாடுகளை இராஜம்கிருஷ்ணனது படைப்புகளோடு பொருத்தி ஆராய்வதை முதன்மை நோக்கமாகக் கொண்டது. மேலும் இவ்வாய்வு கீழ்க்காணும் குறிக்கோள்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது.

- இராஜம்கிருஷ்ணனின் பன்முகப்படைப்பாற்றலை மதிப்பிடுதல்
- இராஜம்கிருஷ்ணனின் பெண்ணியத்திறனாய்வுப் போக்கையும் பெண்ணியப் படைப்பு நோக்கையும் வெளிக்கொணர்தல்
- குடும்பம், சமூகம், தொழிற்களம், நிறுவனங்கள் ஆகியவற்றில் பெண்கள் சந்திக்கும் சிக்கல்களை இராஜம்கிருஷ்ணனின் படைப்பு வழி ஆராய்தல்

- சாதி மத இன வேறுபாடுகளை அகற்றிப் பெண் எனும் ஒற்றை அடையாளத்தில் உலகப் பெண்களை ஒன்றிணைத்தல்
- பெண்கள் சந்திக்கும் சிக்கல்களுக்கு இலக்கியப் பிரதிகளிலிருந்து தீர்வுகளைக் கண்டறிந்து சமூகத்திற்கு அறிவித்தல்

ஆகிய நோக்கங்களை இவ்வாய்வு தன்னகத்தே கொண்டுள்ளது.

**கருதுகோள்**

இவ்வாய்வானது கீழ்க்காணும் கருதுகோள்களுடன் செய்யப்பட்டுள்ளது.

- இராஜம்கிருஷ்ணனின் திறனாய்வுக் கட்டுரைகள் வெளிப்படையாகப் பெண்ணியத்தைப் பேசினாலும் அவரது புனைகதைகள் கலைத்தன்மையுடன் பெண்ணியத்தை மறைமுகமாகப் பதிவு செய்கின்றன.
- இராஜம்கிருஷ்ணனின் தொடக்கக் கால நாவல்களை விட பிற்கால நாவல்கள் கலை நேர்த்தியுடன் முழுமையுற்றுத் திகழ்கின்றன.

- இராஜம்கிருஷ்ணன் மேற்கத்தியப் பெண்ணியத்துடன் அப்படியே இயைந்து செல்லாமல், இந்தியக் கலாச்சாரத்துக்கேற்ப பெண்ணியக் கோட்பாட்டைப் படைப்பு வழி உருவாக்க முனைகிறாா் என்பது இறுதி கருதுகோளாகும்.

மேற்காட்டிய கருதுகோள்களுடன் இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

**ஆய்வு மூலமும் எல்லையும்**

இராஜம்கிருஷ்ணனின் பெண்ணிய உள்ளடக்கத்தை மிகுதியாகக் கொண்ட நாவல்கள் ஆய்வு மூலங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. 1949 முதல் 1998 வரையிலான கால கட்டம் ஆய்வு எல்லையாக அமைக்கப்பட்டுள்ளது.

**<u>சான்றாதாரங்கள்</u>**

**அ. முதன்மைஆதாரங்கள்**

இராஜம்கிருஷ்ணன் எழுதிய பெண்குரல், சோலைக்கிளி, மாயச்சுழல், நிழற்கோலம், புயலின் மையம், கூடுகள், காக்கானி, சலனங்கள், அலைவாய்கரையில், சேற்றில் மனிதர்கள், மானுடத்தின் மகரந்தகங்கள், சுழலில் மிதக்கும் தீபங்கள், மண்ணகத்துப் பூந்துளிகள், தோட்டக்காரி, அமுக்கு, கோபுரபொம்மைகள், இடிபாடுகள், மாறிமாறிப்பின்னும், கோடுகளும் கோலங்களும், விலங்குகள், வீடு, ஓசைகள் அடங்கிய பிறகு, கரிப்புமணிகள், கூட்டுக்குஞ்சுகள் ஆகியவை முதன்மை ஆதாரங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆ. துணைமை ஆதாரங்கள்**

இராஜம்கிருஷ்ணனின் சிறுகதைகள், திறனாய்வு நூல்கள், பெண்ணியத்திறனாய்வு நூல்கள், சமூகம் சார்ந்த திறனாய்வுக் கட்டுரைகள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

**‘இராஜம்கிருஷ்ணனின் படைப்புகளில் பெண்ணியம்’** என்ற ஆய்வில் பல்வேறு ஆய்வுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. சமூகச் சிக்கல்களை மையமாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுவதால் சமூகவியல் ஆய்வு பெரிதும் பின்பற்றப்படுகிறது. பெண்ணியக் கோட்பாட்டடிப்படையிலும் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. இராஜம்கிருஷ்ணனின் பெண்ணியச் சிந்தனைகளுக்கு நிகரான பெண்ணிய அறிஞர்களின் கருத்தை விளக்குமிடத்து ஒப்பீட்டு முறைத் திறனாய்வுப் பின்பற்றப்பட்டுள்ளது. கருத்துக்களைத் தொகுத்தறிய தொகுப்பாய்வு முறையும் அவற்றைப் பல்வேறு வகைகளுக்குள் அடக்கி ஆராய பகுப்பாய்வு முறையும் சில இடங்களில் விளக்க முறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வுப் பகுப்பு**

முன்னுரை, முடிவுரை நீங்கலாக இந்த ஆய்வேடு ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஆய்வின் குறிக்கோளுக்கு ஏற்ப இயல்கள் ஒவ்வொன்றும் அமைக்கப்பட்டுள்ளன. அவை:

**இயல் ஒன்று: பெண்ணிய கோட்பாடுகளும் வரலாறும்**

**‘பெண்ணிய கோட்பாடுகளும் வரலாறும்’** என்ற இவ்வியலில் பெண்ணியம் சொற்பொருள் விளக்கம் - பெண்ணியம் பற்றிய தமிழ்ப் பெண்ணியவாதிகளின் விளக்கங்கள் - ஆண் அறிஞர்களின் பெண்ணியம் பற்றிய கருத்துக்கள்-பெண்ணிய வகைகள் - மிதவாதப்பெண்ணியம் - சோஷலிசப்பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம் - பெண்ணிய வரலாறு-இந்தியப் பெண்ணிய வரலாறு-சங்ககாலப் பெண்கள்நிலை - சுதந்திரத்துக்கு முந்தைய பெண்விடுதலை முயற்சிகள்-பெண் விடுதலைச்

சிந்தனையாளர்கள் - பெரியாரும் பெண்விடுதலையும் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

**இயல்இரண்டு: படைப்புலகம்**

**'படைப்புலகம்'** என்ற இவ்வியலில் இராஜம்கிருஷ்ணனின் வாழ்க்கைக்குறிப்பு-அவர்பெற்றபரிசுகள் - பாராட்டுக்கள் - வாழ்க்கை -படைப்புக்கள் - சிறுகதை - நாடகம் - பயணக்கட்டுரை - வாழ்க்கைவரலாறு - திறனாய்வு - மொழிபெயர்ப்பு - நாவல்கள் - அடிக்கருத்து ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

**இயல் மூன்று: பெண்ணியத்திறனாய்வு**

**'பெண்ணியத்திறனாய்வு'** என்ற இவ்வியலில் பெண்ணியத்திறனாய்வாளர்கள் - பெண்ணியத்திறனாய்வின் நோக்கங்கள் - இராஜம்கிருஷ்ணனின் பெண்ணியத்திறனாய்வுப் போக்குகள் - தாய்வழிச் சமூகத்தைக் கொண்டாடுதல் - தந்தை வழிச் சமூக அநீதிகளை விமர்சித்தல் - வேத காலத்தைப் பொற்காலமாகக் காட்டுதல் - பெண் தேவதைகளுக்குத் தனித்துவமான உயர்ந்த இடம் வழங்கப்பட்டமை - பெண்கல்வி சிறப்புற்றிருந்தமை -கவிதைப் படைப்பாளியாக பெண்கள் இயங்கியமை - போரிடும் உரிமை பெற்றிருந்தமை - சமத்துவச்சிந்தனைகள் ஆக்கம் பெற்றிருந்தமை - ஆணாதிக்க அநீதிகள் உருப்பெறாமை -இலக்கியத்தில் காணப்படும் ஆணாதிக்கச் சிந்தனைகளைத் தகர்த்தல் - பெண் படைப்பாளிகளின் இலக்கியப் படைப்புகளை ஆராய்தல் - தொன்மங்களில் ஊடாடிக்கிடக்கும் ஆண்மையப் புனைவுகளை மறு பார்வை செய்தல் - பண்பாட்டு விழுமியங்களைக்

கேள்விக்குட்படுத்துதல் - கற்புக்கோட்பாட்டை ஆய்ந்து விமர்சித்தல் -கற்பு எனும் சொல்லாட்சி பற்றிய ஆய்வு - கற்பு நெறி தோன்றியமைக்கான காரண ஆய்வு - தொல்காப்பியரின் கற்புக்கோட்பாடு - சங்க இலக்கியத்தில் கற்புக்கோட்பாடு பற்றிய ஆய்வு -ஊடகங்கள் காட்டும் கற்புக்கோட்பாட்டாய்வு - ஆணுக்கு அதீத சுதந்திரங்களை வழங்குதல் - சமூக அமைப்புக்குள் பெண் எதிர்கொள்ளும் சிக்கல்களை வெளிக்கொணர்தல் - பெண் சக்தியை ஒன்றிணைத்தல் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

**இயல் நான்கு: குடும்பச்சிக்கல்கள்**

**'குடும்பச்சிக்கல்கள்'** என்ற இவ்வியலில் திருமணத்திற்கு முன் பெண் சந்திக்கும் சிக்கல்கள் - பெண் குழந்தை பிறப்பிற்கு வரவேற்பின்மை - பெண்ணாகப் பிறப்பதால் வரும் சிக்கல்கள் வளர்ப்பு முறையில் வேறுபாடு - சாதனைகள் புகழப்படாமை - முதிர்கன்னிகள் இகழப்படுதல் - ஆணுடன் பழகும் உரிமையின்மை - காதலிக்கும் உரிமையின்மை - சுதந்திரமின்மை - காலம் கட்டுப்படுத்தப்படுதல் - புழங்குவெளி சுருக்கப்படுதல் - வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமையின்மை-கருப்பு நிறப்பெண் புறக்கணிக்கப்படுதல் - திருமணத்திற்குப்பின் குடும்பத்துக்குள் பெண் சந்திக்கும் சிக்கல்கள் - வேலைக்காரியாக்கப்படுதல் - பாலியல் கருவியாக்கப்படுதல் - பேச்சுரிமையின்மை - அடக்கப்படுதல் -தொன்மக்கதைகளைச் சொல்லி அடக்குதல் - இலக்கிய மேற்கோள்களைச் சொல்லி

அடக்குதல் - வன்முறைவழி அடக்குதல் - காலம் கட்டுப்படுத்தப்படுதல் - அடித்துத் துன்புறுத்தப்படுதல் - பொருள்கேட்டு அடிக்கப்படுதல் - நடத்தையின் மீது ஐயுறல் - சொற்களால் துன்புறுத்தப்படுதல் - மனைவியையும் தாயையும் தாக்குதல் - பொதுவாகப் பெண்களை இழிவு படுத்துதல் - மேலாண்மைத்திறன் அங்கீகரிக்கப்படாமை - வேலைக்குச் செல்லத்தடை - பிறந்த வீட்டோடு உறவு பாராட்டத்தடை - விருப்பு வெறுப்புகள் புரிந்து கொள்ளப்படாமை - நம்பிக்கையின்மை -திருமணவிலக்கம் ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.

**இயல் ஐந்து: சமுதாயச்சிக்கல்கள்**

**‘சமுதாயச்சிக்கல்கள்’** என்ற இவ்வியலில் பெண் சிசுக்கொலை - வரதட்சணை போன்ற சமூகக் கொடுமைகள் - பெண் குழந்தையை வெறுக்கும் தாய்-கணவனின் எதிர்ப்பு-குழந்தைத் தொழிலாளர்கள் பிரச்சினை-குழந்தைத்திருமணம்-பெண்கல்வி மறுக்கப்படுதல் வரதட்சணை - இம்சைக்கலாச்சாரம்-பெண்களைக் குற்றம்சுமத்துவோர்- ராகிங்கொடுமை-பாலியல்சுரண்டல்-திருமண ஆசை காட்டி ஏமாற்றுதல்-திருமணம் செய்து ஏமாற்றுதல்-நம்பிக்கைத் துரோகம் செய்தல்-வன்புணர்வு-வன்புணர்வு அச்சம்-வன்புணர்வின் விளைவு - பரத்தமை-கைம்பெண் சிக்கல்கள் - வேலைக்குச் செல்லும் பெண்களின் சிக்கல்கள்-பாலியல் சுரண்டல்-கூலிவேறுபாடு –ஊடகச் சீர்கேடுகள்-அதிகார வன்முறை-சட்டங்களின் ஒருசார் தன்மை-வெளிப்படையாக விவரிக்க இயலாமை-சாட்சிகள் இன்மை-கலாச்சார நெருக்கடி - மதத்தில் பெண்ணடிமைத்தனம்-இலக்கியப் பிற்போக்குத்தனம் - கலையுலகப் பிற்போக்குத்தனம் - தொன்மப்பழமை - விழுமியங்களின் இறுக்கம் ஆகியவை ஆராயப்படுகின்றன.

**இயல் ஆறு: தீர்வுகள்**

**‘தீர்வுகள்’** என்ற இவ்வியலில் இராஜம்கிருஷ்ணனின் புனைகதைகள் வழியாகப் பெறப்படும் தீர்வுகள் ஆராயப்பட்டுள்ளன. கல்வி உரிமை-பொருளாதாரச் சுதந்திரம்-தொழில் சார்ந்த விடுதலை-மரபுகளில் மாற்றம்-பண்பியல் மாறுதல்கள்-விழிப்புணர்வு-பெண் சக்தியை ஒன்றிணைத்தல் - போராட்டம் - புரட்சி - பொதுவுடைமை போன்றவை ஆராயப்பட்டுள்ளன.

ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் ஆய்வு முடிவுரையில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

ஆய்விற்குப் பயன்பட்ட நூற்கள் துணை நூற்பட்டியலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## இயல் -1

## பெண்ணியக் கோட்பாடுகளும் வரலாறும்

நவீன தமிழ் இலக்கியங்களை மேற்கத்திய இலக்கியங்களும் கோட்பாடுகளும் பெரிதும் பாதித்துள்ளன. மார்க்சியம், உளவியல், இருத்தலியல், மீமெய்ம்மையியல், அமைப்பியல், பின்னை அமைப்பியல், நவீனத்துவம், பின் நவீனத்துவம், பெண்ணியம் போன்ற இலக்கிய சமூகக் கோட்பாடுகள் தமிழிலக்கியத்திற்குள் பெரிதும் ஆதிக்கம் செலுத்தின. இவற்றுள் பெண்ணியமானது சமூகம், பாலினம், இலக்கியம், வாழ்வியல் எனப் பரந்த தளத்தில் தாக்கத்தை நிகழ்த்திய கோட்பாடாகும். இலக்கியத் துறையில் புதுக்கவிதை, நாவல், சிறுகதை, நாடகம், திறனாய்வு ஆகிய வகைமைகளுக்குள் பெண்ணியக் கோட்பாட்டின் சாதனை குறிப்பிடத்தகுந்தது. இராஜம்கிருஷ்ணனின் நாவல்களோடு பெண்ணியக்கோட்பாடுகள் பொருந்திச் செல்வதால் அக்கோட்பாடுகளை விளக்கி அதன் வரலாற்றை இவ்வியல் ஆய்கிறது. இவ்வியலில் ஆராயப்படும் பொருண்மைகளாவன:

1.1 பெண்ணியம் விளக்கம்

1.2 வகைகள்

1.3 வரலாறு

என்பனவாகும்.

### 1.1. பெண்ணியம் - விளக்கம்:

பெண்ணியம் என்பது மகளிரியம், பெண்ணிலைவாதம், பெண்ணுரிமை, பெண்ணியல் எனப் பல்வேறு பெயர்களில் தொடக்க காலத்தில் அழைக்கப்பட்டது. தற்காலத்தில் பெண்ணியம் என்ற பெயரே நிலை நிற்கிறது. பெண்ணியம் என்பதற்கு நிகரான 'Feminism' என்ற ஆங்கிலச் சொல், ‘பெமினா’, (Femina) என்ற இலத்தீன்

ஆய்வில் கண்டறிந்த உண்மைகள் ஆய்வு முடிவுரையில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

ஆய்விற்குப் பயன்பட்ட நூற்கள் துணை நூற்பட்டியலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## இயல் -1

## பெண்ணியக் கோட்பாடுகளும் வரலாறும்

நவீன தமிழ் இலக்கியங்களை மேற்கத்திய இலக்கியங்களும் கோட்பாடுகளும் பெரிதும் பாதித்துள்ளன. மார்க்சியம், உளவியல், இருத்தலியல், மீமெய்ம்மையியல், அமைப்பியல், பின்னை அமைப்பியல், நவீனத்துவம், பின் நவீனத்துவம், பெண்ணியம் போன்ற இலக்கிய சமூகக் கோட்பாடுகள் தமிழிலக்கியத்திற்குள் பெரிதும் ஆதிக்கம் செலுத்தின. இவற்றுள் பெண்ணியமானது சமூகம், பாலினம், இலக்கியம், வாழ்வியல் எனப் பரந்த தளத்தில் தாக்கத்தை நிகழ்த்திய கோட்பாடாகும். இலக்கியத் துறையில் புதுக்கவிதை, நாவல், சிறுகதை, நாடகம், திறனாய்வு ஆகிய வகைமைகளுக்குள் பெண்ணியக் கோட்பாட்டின் சாதனை குறிப்பிடத்தகுந்தது. இராஜம்கிருஷ்ணனின் நாவல்களோடு பெண்ணியக்கோட்பாடுகள் பொருந்திச் செல்வதால் அக்கோட்பாடுகளை விளக்கி அதன் வரலாற்றை இவ்வியல் ஆய்கிறது. இவ்வியலில் ஆராயப்படும் பொருண்மைகளாவன:

1.1 பெண்ணியம் விளக்கம்

1.2 வகைகள்

1.3 வரலாறு

என்பனவாகும்.

### 1.1. பெண்ணியம் - விளக்கம்:

பெண்ணியம் என்பது மகளிரியம், பெண்ணிலைவாதம், பெண்ணுரிமை, பெண்ணியல் எனப் பல்வேறு பெயர்களில் தொடக்க காலத்தில் அழைக்கப்பட்டது. தற்காலத்தில் பெண்ணியம் என்ற பெயரே நிலை நிற்கிறது. பெண்ணியம் என்பதற்கு நிகரான 'Feminism' என்ற ஆங்கிலச் சொல், ‘பெமினா’, (Femina) என்ற இலத்தீன்

வார்த்தையிலிருந்து தோன்றியதாகும். பெமினா (Femina) என்ற சொல்லுக்கு 'பெண்ணின் குணநலன்களைக் கொண்டுள்ள' என்பது பொருளாகும்.

> "பெமினா என்ற சொல் முதலில் பெண்களின் பாலியல் குணாம்சங்களைக் குறிப்பிட பயன்படுத்தப்பட்டதாகும். பின்னரே பெண்ணியத்தின் உரிமைகளை எடுத்தோதக் கையாளப்பட்டதாகவும் கருதப்படுகிறது."[1]

பிரிட்டானியா கலைக் களஞ்சியம் பெண்ணியம் என்பதனைப் பெண்களின் தனிப்பட்ட, குடும்ப, சமுதாய, அரசியல், பொருளாதார சூழ்நிலைகளில் செயல்படும் சமத்துவ நெறியாக விளக்குகிறது.

> "பெண்ணின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையிலும், சமுதாய, அரசியல், பொருளாதாரச் சூழ்நிலையிலும் அவள் ஆண்களுக்குச் சமமானவர் என்னும் உயர்நெறியை நிலைநாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டு இயங்குகிறது."[2]

பெண்ணியத்தின் தொடக்க காலத்தில் கூறப்பட்ட இவ்விளக்கம் இக்காலத்துக்கும் பொருந்துவதாகவே அமைந்துள்ளது.

குடும்பம், சமூகம், தொழிற்களம் ஆகியவற்றில் ஆணுக்குச் சமமானவளாய்ப் பெண் மதிக்கப்படுவதற்கு எடுக்கப்படும் ஆரோக்கியமான நடவடிக்கைகளைப் பெண்ணியமாகக் கருதமுடிகிறது.

> "சமூகத்திலும் வேலைத்தளத்திலும் குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளும், இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப் பூர்வமான நடவடிக்கைகளும் பெண்ணியத்தின் பரந்துப்பட்ட வரையறையாக இப்போதைய நிலையில் கொள்ளலாம்"[3]

மேற்கண்ட விளக்கம் பெண் விடுதலைக்கான போராட்டத்தில் ஆண்களையும் உள்ளடக்கியுள்ளது.

மேரிவுல்ஸ்டன் கிரா.ஃ.ப்ட் என்னும் பெண்ணியவாதி ஆணாதிக்கத்துக்கெதிரான உணர்வுநிலையாகப் பெண்ணியத்தைக் காட்டுகிறார்.

> "பெண்களுக்கு எதிராகக் குடும்பச் சமூக நிறுவனங்களில் அரசியல் (Politics) ஆகிவரும் ஆண் ஆதிக்கத்தை (Power) ஆளுகையை (Domination) எதிர்த்துச் செயல்படும் உணர்வு நிலையைச் சுட்டி நிற்கிறது."[4]

என்பர் மேரிவுல்ஸ்டன்

சார்லட்பன்ச் (Charlotte Bunch) எனும் பெண்ணியவாதி அரசியல், பண்பாடு, பொருளாதாரம், ஆன்மிகம் ஆகிய துறைகளில் பெண்ணுக்குச் சார்பான மாற்றங்களை உருவாக்குவது பெண்ணியம் என்று விளக்கம் தருகிறார்.

> "பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு, அவற்றை நீக்க முயல்வதாகும். அதன் மூலம், உலகளவில் அரசியலிலும், பண்பாட்டிலும், பொருளாதாரத்திலும், ஆன்மீகத்திலும் பெருத்த மாற்றத்தை ஏற்படுத்த முடியும்"[5]

இதில் சார்லட் பன்ச் வேறுபட்ட விரிந்த தளங்களில் பெண்ணுக்கு ஆதரவாக நிகழ்த்தப்பட வேண்டிய மாற்றங்களைக் குறித்துப் பேசுகிறார்.

பார்பரா ஸ்மித் எனும் பெண்ணியலாளர் பல்வேறு வகைப்பட்ட பெண்களின் பட்டியலைத் தந்து அவர்கள் வாழ்வில் விடுதலை பெற்றுத்தரும் கொள்கையாகப் பெண்ணியத்தை அடையாளப்படுத்துகிறார்.

> "இளம்பெண்கள், தொழிலில் ஈடுபட்டுள்ள பெண்கள், ஏழைப்பெண்கள், தன்னினச் சேர்க்கையுடைய பெண்கள் (Lesbians), வயதான மூதாட்டிகள், மற்றும் பொருளாதார நிலையிலும், மரபு மன நிலையிலும் துன்புறும் பெண்கள், இவர்கள் அனைவருக்கும் விடுதலை பெற்றுத்தருவதே இதன் இலக்காகும்"[6]

எனப் பெண்ணியத்தின் இலக்கை வரையறுக்கிறார்.

ஜெயின் என்பவர் அனைத்துப் பெண்களின் சக்தியையும் ஒன்றிணைத்து ஆண்களுக்கு நிகரானவர்களாகப் பெண்களை நிறுவும் முயற்சியாகப் பெண்ணியத்தை விளக்குகிறார்.

> "பெண்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்து ஒரு ஆற்றலை உருவாக்கி, பெண்மை அதன் தன்மையில் ஆண்களோடு மாறுபட்டிருப்பினும் அது ஆண்மைக்கு நிகரானது என ஏற்றுக் கொள்ளவைப்பது"[7]

என்கிறார்.

### 1.1.2 பெண்ணியம் பற்றிய தமிழ்ப் பெண்ணியவாதிகளின் விளக்கங்கள்:

மேலை நாட்டார் வரவு, ஆங்கிலக் கல்வியின் தாக்கம், மேற்கத்தியக் கோட்பாடுகளின் செல்வாக்கு ஆகியவற்றால் அறிவுப்புலம் சார்ந்தவர்களது சிந்தனைப் போக்கிலும், எழுத்து முறையிலும் மாற்றம் நிகழ்ந்தன. இந்தியப் பெண்விடுதலைச் சிந்தனையாளர்களின் கருத்துக்களும் தமிழ்ப் படைப்பாளிகளால் உள்வாங்கப்பட்டன. பாரதி, பாரதிதாசன், பெரியார், வேதநாயகம்பிள்ளை போன்ற அறிஞர்களின் கருத்தியல்களும் அடுத்த தலைமுறை எழுத்தாளர்களிடம் தொடர்ந்தன. தமிழ்ச் சூழலில் பெண்ணியம் என்பது பெண்களால் மட்டுமின்றி ஆண்களாலும் பேசப்படும் முற்போக்குக் கோட்பாடாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. அரங்க மல்லிகா, பிரேமா, தேவதத்தா, பரிமளம், மாரியம்மாள், மங்கை, மைதிலி சிவராமன், மொலினா தேன்மொழி, அபர்ணா மகந்தா, வேலம்மாள், முத்துச்சிதம்பரம், செல்வி, ஸ்ரீவித்யா, சிவகாமி உள்ளிட்ட பல பெண் திறனாய்வாளர்கள் பெண்ணியம் பேசி வருகின்றனர். பெண்ணியம் பேசும் ஆண்களில் ராஜ்கவுதமன், அ.மார்க்ஸ், சித்து மா.சாலமன், ஜெயக்குமார், க.பஞ்சாங்கம் போன்றோரைக் குறிப்பிட்டுச் சொல்லமுடியும். இவர்களில்

பெண்ணியத்தைப் பெண்ணின் விடுதலைக்கான கோட்பாடாக முன்வைக்கும் பெண் திறனாய்வாளர்களின் கருத்துக்கள் மட்டும் சுட்டப்படுகின்றன.

ஸ்ரீவித்யா எனும் தமிழ்ப் பெண்ணியத் திறனாய்வாளர் மேற்கத்திய பெண்ணியவாதிகளின் கொள்கைச் சுருக்கத்தைக் கீழ்க்காணுமாறு தருகிறார்.

> "பெண்ணியம் என்பது சமூகத்தின் அனைத்துத் தளங்களிலும் உள்ள பெண் ஒடுக்குமுறைக்கான காரணங்களைக் கண்டறிந்து அவற்றுக்கான தீர்வுகளை முன்வைத்து பெண் - ஆண் சமத்துவத்திற்கு வழிகோலுவது"[8]

என்று கூறுமிடத்து, ஸ்ரீவித்யா பெண்ணியம் என்பது பெண்ணின் வாழ்வியல் சிக்கல்கள், காரணங்கள், தீர்வுகள் ஆகியவற்றோடு தொடர்புடையதாகக் காட்டுகிறார். அவர் ஆண் - பெண் சமத்துவம் என்ற வழக்கமான ஆண் எண்ண ஓட்டத்திலமைந்த சொல்லாடலைத் தவிர்த்து பெண் - ஆண் சமத்துவம் என்ற சொல்லைப் பெய்தளிக்கிறார்.

நா.வேலம்மாள் சமத்துவம், பாலின வேறுபாடு, தனிமனித உயிரிக்கான முக்கியத்துவம் என்ற மூன்று செய்திகளைப் பெண்ணியத்தோடு தொடர்பு படுத்திப் பேசுகிறார்.

> "தந்தையாதிக்கச் சமூகத்தின் ஆணாதிக்க கருத்துருவங்களிலிருந்து விடுபட சமத்துவம் முதன்மைப்படுத்தப்படுகிறது. கலாச்சாரப் பண்பாட்டு விழுமியங்களில் பெண் ஒடுக்கப்படுவதற்கும் அடக்கப்படுவதற்கும் காரணமான பாலின வேறுபாடு முதன்மைப்படுத்தப்படுகிறது. முதலாளித்துவத்தையும், ஆண் ஆதிக்கத்தையும் உள்ளிட்ட உற்பத்தி மற்றும் மறுஉற்பத்திப் பணியில் 'பெண் ஒரு தனிமனித உயிரி' என்ற சிந்தனையோடு அணுக வேண்டியவள் என்பதை எடுத்துக்கூறுகின்றது"[9]

எனப் பெண்ணியம் முதன்மைப்படுத்தும் மூன்று பொருண்மைகளைச் சுட்டிச் செல்கிறார்.

பெண்ணியம் என்பதனைச் சமூக அநீதிகளுக்கெதிரான போராட்டமாக அபர்ணா மகந்தா பார்க்கிறார்.

> "குடும்ப அமைப்பினால் பெண்கள் சுரண்டப்படுதல், தொழிலிலும், சமூகத்திலும் நாட்டின் கலாச்சாரத்திலும் பெண்கள் தொடர்ந்து இரண்டாம் நிலையாகவே மதிக்கப்படுதல், பெண்கள் உற்பத்தியிலும், இனமறு உற்பத்தியிலும் ஈடுபடுவதால் ஏற்படும் இரட்டைச்சுமை ஆகியவற்றிற்கு எதிரான போராட்டங்களை உள்ளடக்கியதாக இன்றைய பெண்ணியம் அமைந்திருக்கிறது"[10]

என்று பெண்ணியம் எதிர்கொள்ளும் போராட்டங்களை அபர்ணா மகந்தா முன்வைக்கிறார்.

> "பெண்ணியம் என்ற சொல் எந்தக் காலத்திலும் அவள் அடக்கி வைக்கப்படக்கூடாது, தனிமைப்படுத்தி வைக்கப்படக்கூடாது, சார்புநிலைப் படுத்தப்படக்கூடாது என்று பொருள் படுகிறது"[11]

என்கிறார். இதில் 'படக்கூடாது' என்ற சொல் பெண்ணின் வாழ்வானது சூழல்களால் இயக்கப்படுவதை உணர்த்த பன்முறை எடுத்தாளப்பட்டுள்ளது.

செல்வி எனும் பெண்ணிய அறிஞர் தாய்வழிச் சமூதாயத்தில் நிலவிய 'மூலப்பிரகிருதி' என்னும் பெண்மையத்தத்துவத்தை இன்றைய பெண்ணியத்தின் மூலவேராகக் காட்டுகிறார். இவ்வறிஞர் பெண்ணியத்தைப் பெண் இயக்கங்களுக்கான உலகத்தத்துவமாகப் பார்க்கிறார்.

> "பெண்ணியம் என்பது பெண் விடுதலை இயக்கங்களை நெறிப்படுத்திச் செல்வதற்காக உருவாக்கப்பட்ட உலகத் தத்துவம்"[12]

எனப் பெண்ணியத்தை உயர்ந்த தத்துவமாக அடையாளப் படுத்துகிறார்.

அரங்க மல்லிகா பெண்ணியப் பயன்பாடுகளை எடுத்துரைக்கிறார்.

> "பாலினப் பாகுபாடு (Sex Discrimination) தொடர்பான சமூகப் பண்பாட்டு வேர்களை இனம் கண்டுகொள்ளவும், குறிப்பாகப் பெண்களுக்கு எதிரான அடக்குமுறை, சுரண்டல் முறைகளை உணர்ந்து கொள்ளவும் பெண்ணியம் தெளிவான வரையறையை முன்வைக்கிறது"[13]

என்றுரைக்கும் அரங்கமல்லிகா பெண்ணிய அளவீடுகள் மரபுகளை மதிப்பிட உதவுவதை உணர்த்துகிறார்.

சிவகாமி பெண்ணியத்தின் விரிந்த பொருட்தளத்தைக் கண்முன் வைக்கிறார்.

> "ஆணாதிக்கத்தினின்று விடுதலை, சமுதாயத்தில் ஆணுக்கு இணையான உரிமை, எக்காலத்தும் எவ்விடத்தும் எச்சூழலிலும் எப்பருவத்தும் ஆணுக்கு நிகரான மதிப்பு, பெண் தன்னம்பிக்கையுடன் தன் காலில் நின்று எதிர் நிற்கும் சிக்கல்களைத் துணிந்து எதிர்கொண்டு தன் இழிவகற்றி முன்னேறுதல், வாழ்வில் தன் இன்றியமையாமையை உணர்தல், உணர்த்துதல், பெண்ணை இழிவுபடுத்தும் அனைத்தையும் புறக்கணித்து அவற்றை வேரோடு களைதல் ஆகியவற்றை மையமிட்டுப் பெண்ணியம் இயங்குவதாகக் கொள்ளலாம்"[14]

என்கிறார். ச.முத்துச்சிதம்பரம் பெண்ணியத்தைக் கோட்பாட்டு முறையாக மட்டுமின்றி செயல்பாட்டு முறையாகவும் பார்க்கிறார்.

> "பெண்ணியம் பெண்கள் அனுபவிக்கும் எல்லாவிதமான அடக்குமுறைகளையும் எதிர்ப்பது மட்டுமின்றி பெண்களின் மேம்பாட்டிற்குரிய வழிமுறைகளையும் செயற்படுத்துகிறது"[15]

என்கிறார்.

பெண்ணியவாதிகளின் பெண்ணியம் பற்றிய கருத்துக்களைத் தொகுத்துப் பார்க்கும் போது கீழ்க்காணும் உண்மைகள் புலப்படுகின்றன. குடும்பம், சமூகம், அரசியல், பொருளாதாரம், சமயம்,

பண்பாடு ஆகியவற்றில் பெண்களை ஆண்களுக்குச் சமமாக உயர்த்த எடுக்கப்படும் ஆரோக்கியமான நடவடிக்கையே பெண்ணியம் எனப் புரிந்து கொள்ளமுடிகிறது.

ஆண் அரசியல், ஆண் ஆதிக்கம், ஆண் ஆளுகை, ஆண் அதிகாரம் ஆகியவற்றை எதிர்த்துச் செயல்படும் இலக்கிய மற்றும் இயக்கப் போராட்டமாகப் பெண்ணியம் தோற்றமளிக்கிறது. மேட்டுக்குடி பெண்கள். பாட்டாளிவர்க்கப் பெண்கள் என்ற எந்தப் பேதமுமின்றி அனைத்து வகைப் பெண்களின் வாழ்விலும் செயற்படும் விடுதலைக் கோட்பாடாகப் பெண்ணியத்தை மதிப்பிட முடிகிறது.

பெண் விடுதலைக்கான போராட்டத்திற்காகப் பெண்ணியம் பெண் சக்தியை ஒன்றிணைப்பதனையும் கண்டுரைக்க முடிகிறது.

மரபார்ந்த ஆணாதிக்கச்சிந்தனைப் போக்குகளைக் கேள்விக்குட் படுத்துவதோடு சிக்கல்களுக்கான தீர்வுகளையும், பெண்ணியம் பரிந்துரைப்பதை அறிய முடிகிறது.

### 1.1.3 ஆண் அறிஞர்களின் பெண்ணியம் பற்றிய கருத்துக்கள்:

பெண்ணின் வாழ்வில் ஆக்கப்பூர்வமான மாற்றம் நிகழ்வது குறித்து முற்போக்கான ஆண் சிந்தனையாளர்கள் தங்கள் கருத்துக்களைப் பகிர்ந்தளித்துள்ளனர். பெண்ணியம் பெண்விடுதலையை உருவாக்குவதால், அதற்கு வெளியே நிற்கும் பொறுப்பின்மை இவர்களிடம் இல்லை. ஆணின் அதிகாரத்தை விமர்சிப்பதனால் பெண்ணியத்தை எதிர்க்கும் மனோபாவமும் இவர்களிடம் இல்லை. பெண்ணியம் பேசும் ஆண்களின் சொந்த வாழ்வு பெண்ணுக்குச் சார்பானதாக அமைந்துள்ளதா? என்பது குறித்து ஆய்வுகள் எதுவும் செய்யப்படாத நிலையில் அவ்வறிஞர்களின் கருத்துக்கள் பெண்ணியத்துக்கு வலுசேர்ப்பதாகக் கருதி அப்படியே எடுத்தாளப்படுகின்றன.

பெண்ணியச் சிந்தனை, மனித சமூகத்தின் கலாச்சார தளத்தில் பெண்ணின் உரிமை மற்றும் பங்களிப்பு என்ன என்பதைப் பற்றிக் கவலைப்படுவதாகப் பா.வெங்கடேசன் குறிப்பிடுகிறார். மேலும் அவர் பெண்ணியம் பெண் முன்னேற்றம்

சார்ந்த முற்போக்குச் சிந்தனைகளை முன்னிறுத்தி தன் வாதத்தை எடுத்துச் செல்கிறது என்றும் உரைக்கிறார்.[16]

பெண்ணியம் பற்றி விளக்கும் இராமமூர்த்தி

"பெண்களுக்கு சமூகத்தில் உரிய இடம் மறுக்கப்பட்டதை வெளிப்படுத்தி விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது பெண்ணியச் சிந்தனை"[17]

என்கிறார்.

"சமூகத்தின் சரிபாதியான பெண்ணின் இருத்தலைப் பற்றிப் பேசுவது பெண்ணியம்"[18]

என்ற இரா.சம்பத் பெண்ணியத்தின் சாராம்சத்தைச் சுருக்கியுரைக்கிறார். அவர்,

"பெண்ணியம் என்பது இக்காலச் சமூகத்தில் நிலவுகின்ற சமூகப் பண்பாட்டுக்கு எதிரான மாற்றுப் பண்பாட்டை உருவாக்கும் ஒரு சமூக மாற்ற முயற்சி"[19]

என்ற விளக்கமொன்றைத் தருகிறார். சமூகச் சிந்தனையைப் புத்தாக்கம் செய்து, புதிய கலாச்சாரத்தை அமைக்கும் செயல்பாட்டை அவர் பெண்ணியமாகப் பார்க்கிறார்.

பெண்ணின் நலன்கள் குறித்துப் பெண்கள் பேசுவதே பெண்ணியம் என்கிறார் மு.சுதர்சன்.

"தங்களைப் பற்றியும் தங்களுக்கான அரசியல் உட்பட்ட எல்லா நலன்களைப் பற்றியும், தங்களுக்கான மொழியில் பெண்களே பேசுவதுதான் பெண்ணியம் எனப்படுகிறது"[20]

என்று சுதர்சன் உரைக்கிறார்.

## 1:2 பெண்ணிய வகைகள்:

பெண்ணை அடிமைத்தனத்திலிருந்து விடுதலை செய்யும் பெண்ணியக் கோட்பாடானது உலகம் முழுவதும் பரவியபோது அது பல்வேறு வகைப்பட்டதாய்த் தன்னை விரிவாக்கம் செய்து கொண்டது. இடம், இனம், மொழி, சார்புநிலை, கோட்பாட்டுப்பிடிப்பு

ஆகியவற்றுக்கேற்ப பெண்ணிய அறிஞர்கள் பல்வேறு வகைப்பட்ட பெண்ணியக் கோட்பாடுகளை வார்த்தெடுத்தனர்.

1. மிதவாதப் பெண்ணியம்
2. சோஷலிசப் பெண்ணியம்
3. தீவிரப் பெண்ணியம்

ஆகிய மூன்று பெரும் பிரிவுகளில் மொத்தப் பெண்ணியத்தையும் அடக்கிவிட முடியும். முதலாம் அலைப் பெண்ணியம், இரண்டாம் அலைப் பெண்ணியம், பின்னைப் பெண்ணியம் என்ற பெயர்களாலும் மேற்கூறிய மூன்று பிரிவு பெண்ணியங்களும் அழைக்கப்படுவதுண்டு. இரா.ஸ்ரீவித்யா முப்பது பெண்ணிய வகைகளைத் தொகுத்து விளக்கியுள்ளார்.

| | | |
|---|---|---|
| 1. | மிதவாத (அல்லது) தாராளவாதப் பெண்ணியம் | Liberal Feminism |
| 2. | தீவிரவாதப் பெண்ணியம் | Radical Feminism |
| 3. | சமதர்மப் பெண்ணியம் | Socialist Feminism |
| 4. | பொருள்முதல் பெண்ணியம் | Materialist Feminism |
| 5. | மார்க்சியப் பெண்ணியம் | Marxist Feminism |
| 6. | ஓரினக்கலவிப் பெண்ணியம் | Lesbian Feminism |
| 7. | ஆன்மிகப் பெண்ணியம் | Spiritual Feminism |
| 8. | கிறிஸ்துவப் பெண்ணியம் | Christian Feminism |
| 9. | மனைப் பெண்ணியம் | Domestic Feminism |
| 10. | தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம் | Anarcha Feminism |
| 11. | தூயப் பெண்ணியம் | Pure Feminism |
| 12. | கருப்புப் பெண்ணியம் | Black Feminism |
| 13. | சூழல் பெண்ணியம் | Eco Feminism |
| 14. | மரபுநிலைப் பெண்ணியம் | Conservative Feminism |
| 15. | நடுத்தர வகுப்புப் பெண்ணியம் | Bourgeois Feminism |

| | | |
|---|---|---|
| 16. | கூட்டுச்சேராப் பெண்ணியம் | Non oligneds Feminism |
| 17. | மகளிர் முன்னேற்றப் பெண்ணியம் | career Feminism |
| 18. | மனித இன மேம்பாட்டுப் பெண்ணியம் | Eugenic Feminism |
| 19. | உளப்பகுப்பாய்வுப் பெண்ணியம் | Psychoanalytic Feminism |
| 20. | இருத்தலியல் பெண்ணியம் | Existentialist Feminism |
| 21. | அதிநவீனப் பெண்ணியம் | Postmodern Feminism |
| 22. | கல்விநெறிப் பெண்ணியம் | Academic Feminism |
| 23. | மானுடநேயப்பெண்ணியம் | Humanist Feminism |
| 24. | பண்பாட்டுப் பெண்ணியம் | Cultural Feminism |
| 25. | ஏகாதிபத்தியப் பெண்ணியம் | Imperial Feminism |
| 26. | தனிமனிதப் பெண்ணியம் | Individual Feminism |
| 27. | புரட்சிப் பெண்ணியம் | Revloutionary Feminism |
| 28. | ஆண் பெண்ணியம் | Male Feminism |
| 29. | இந்தியப் பெண்ணியம் | Indian Feminism |
| 30. | தலித்பெண்ணியம் | Dalith Feminism |

என முப்பது வகை பெண்ணியங்களை இரா.ஶ்ரீவித்யா பட்டியலிடுகிறார்[21]. இவற்றுள் பெண்ணிய வரலாற்றோடு தொடர்புடையதும். மிக முக்கியத்துவம் வாய்ந்ததுமான மிதவாதப்பெண்ணியம், சோஷலிசப்பெண்ணியம், தீவிரப்பெண்ணியம் ஆகிய வகைகளின் கோட்பாடுகள் மட்டும் விளக்கப்படுகின்றன.

### 1:2.1 மிதவாதப் பெண்ணியம்:

மிதவாதப்பெண்ணியம் அல்லது முதலாம் அலைப்பெண்ணியம் மேரி உல்ஸ்டோன் கிரா∴ப்ட், மேரி அஸ்டெல், பெட்டி∴பிரைடன், ஜான்ஸ்டுவர்ட்மில், ஹேரியட் டெய்லர் போன்றோரது கொள்கைகளைக் கொண்டு மாற்றத்தை உருவாக்கியது. 1792-இல் உல்ஸ்டோன் கிரா∴ப்ட் எழுதிய ‘விண்டிகேசன் ஆப் தி ரைட்ஸ் ஆப் உமன்’ (பெண் உரிமைகளின் நியாயம்) என்ற நூல் மிதவாதப் பெண்ணியத்தின் தோற்றுவாயாக அமைந்தது. மேரி உல்ஸ்டோன்

கிராப்ட் ஆங்கிலக் கவிஞர் ஷெல்லியின் மாமியார் ஆவார். பெண்களுக்குச் சமுதாயத்தில் சமஉரிமை, எல்லா நிலைகளிலும் சமவாய்ப்புகள் என்ற கொள்கைகள் மேரி உல்ஸ்டோன் கிராப்∴ட்டால் வலியுறுத்தப்பட்டன. இவர் ஆண்கள் தங்கள் உரிமையைப் பெண்களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்தினார். ஜான் ஸ்டுவர்ட்மில் பெண்கள் சமூகத்தில் பற்பல பணிகளை ஏற்றல், சொத்தில் பங்கு பெறுதல், வாக்குரிமை பெறுதல் ஆகியவற்றின் அவசியத்தை உணர்த்தினார். 1869-இல் ஜான் ஸ்டுவர்ட் மில் எழுதிய 'அடிமைத்தனம்' (Subjection of woman) என்ற நூல் மிதவாதப் பெண்ணியக் கோட்பாடுகள் அடங்கிய நூலாகும். இவ்வறிஞர் அடிமைத்தனத்திலிருந்து வெளியே வர பெண்கல்வியைத் தீர்வாக முன்வைக்கிறார். மேலும் பெண்கள் வேலைக்குச் சென்று குடும்ப ஆளுகையில் ஆணுக்கு நிகரான சமத்துவத்தை நிலைநாட்ட வேண்டும் என்றும் பெண்களுக்கு அறிவுறுத்தினார்.

பெண்ணியத்தின் தாய் என்று அழைக்கப்படும் பெட்டி∴பிரைடன் எழுதிய 'பெண்மையின் மாயை' (Feminine Mystique) எனும் நூல் வழியாகவும் மிதவாதப் பெண்ணியக் கருத்துக்களை அறியமுடிகிறது. இவர் மிதவாதப் பெண்ணியத்தை ஆதாரப் பெண்ணியம் (Mainstreams Feminism) என்ற பெயரில் அழைக்கிறார். இவரே இரண்டாம் அலைப் பெண்ணியத்துக்கு வித்திட்டவர் என்றும் கருதப்படுகிறார். உல்ஸ்டோன் கிரா∴ப்ட் பெண்கல்விதான் சமூகத்தின் மகிழ்ச்சியை உருவாக்கும் என்று கருத்துரைத்தார்.

> "பெண்கள் படிப்பறிவு பெறுவதினால் தகுதியானவர்களாகிறார்கள்; தகுதியானவர்களாவதால் நற்குணமுடையவர்களாகிறார்கள்; எனவே, சமூகம் அனைத்துமே மகிழ்ச்சியாக நிறைவாக வாழமுடியும்; சமூகத்தில் போராட்டத்திற்கு இடம் இருக்காது"[22]

எனப் பெண்கல்வியிலிருந்து முகிழ்க்கும் சமூக வளர்ச்சியை அவர் எடுத்துக் காட்டுகிறார். இவரது முதல் நூலாகப் 'பெண்ணியல்பு

புதிர்நிலை’ என்ற நூல் அறியப்படுகிறது. இந்நூலில் அவர் பெண்கல்வி ஒரு பெண்ணை முழுமைப்படுத்தும் என்ற கருத்தை முன்வைத்தார். பெட்டி ஃபிரைடன்,

> “பெண்கள் ஒரு மனைவியாகவும் தாயாகவும் மட்டுமே வாழ்ந்து விடக்கூடாது; கல்வியறிவு மூலம் தங்களை ஒரு முழுமையான மனிதராக உருவாக்கிக் கொண்டு முன்னேற வேண்டும்”[23]

என்று எடுத்துரைத்தார்.

மிதவாதப் பெண்ணியவாதிகளின் கோட்பாடுகளிலிருந்து மிதவாதப் பெண்ணியத்தின் நோக்கைக் கீழ்க்காணும் பொருண்மைகளாய்ச் சுருக்கிப் பார்க்க முடிகிறது. அவை:

- ஆணிற்குரிய அனைத்து உரிமைகளையும் பெண்களும் பெறுதல்
- தம் வாழ்வைத் தாமே தீர்மானித்தல்
- குடும்ப அமைப்புக்குள்ளிருந்தே குடும்பத்தைச் சீர்திருத்துதல்
- சட்டங்களின் துணையால் சமூகத்தை மாற்றுதல்
- தனிநபர் சுதந்திரத்தைக் காப்பாற்றும் பொறுப்பை அரசே ஏற்றல்
- மகளிருக்கு உரிமைகளும், சந்தர்ப்பங்களும் சமமாக வழங்கப்படுதல்
- மரபுகளை உடைக்காமல் செப்பனிடுதல்
- வேலை வாய்ப்புரிமை, வாக்குரிமை, சொத்துரிமை, ஆகிய உரிமைகளைப் பெறுதல்
- பெண் கல்விக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தல்
- ஆண் நாயகப் போக்குகளை அகற்றுதல், செயலூக்கத்தோடும், சுயஅறிவோடும், பொறுப்புணர்வோடும் பெண்கள் செயல்படுதல்

- பெண்பால் என்ற தனித்துவத்தைக் கடந்து பெண் ஒரு மனித உயிரியாக அங்கீகரிக்கப்படுதல்
- மருத்துவம், உயர்தொழில், மக்கள் தொடர்பு ஊடகங்கள், அரசாளுகை போன்ற உயர்ந்த இடங்களுக்குப் பெண்கள் வருதல்
- ஒருபால் மற்றப் பாலைச் சட்ட ரீதியாக அடிமைப் படுத்தியதை மாற்றுதல்
- ஆண்கள் தங்கள் உரிமைகளைப் பெண்களுக்கு விட்டுக் கொடுத்தல்
- சமூகத்தில் நியாயமான வாய்ப்புகள் பெண்களுக்கு வழங்கப்படுதல்
- புரட்சியின்றி பொருளாதாரத்திலும், சட்டத்திலும் மாறுதல்களைக் கொண்டு வருதல்
- சமஉரிமை, சம ஊதியம், பாலியலில் சமபங்கு போன்ற சமத்துவங்களை உருவாக்குதல்

இவ்வாறு மிதவாதப் பெண்ணியமானது பெண் விடுதலைக்கு அடித்தளமிட்டது. இப்பெண்ணியம் பெண்களுக்கிடையே விழிப்புணர்வை உருவாக்கி, பரந்த தளங்களில் பெண்ணுரிமைக்கான தேடல்களை விதைத்தது. பெண்ணியம் பிற்காலத்தில் பல்வேறு வகைப்பட்ட பெண்களின் சிக்கல்களுக்கான தீர்வுகளில் பங்கு பெறுவதற்கான தோற்றுவாயாக இக்கோட்பாடு அமைந்தது. மிதவாதப் பெண்ணியத்தைத் தொடர்ந்து சோஷலிசப் பெண்ணியம் பெண்களின் வாழ்விற்கும் புதிய மறுமலர்ச்சிகளுக்கும் கால்கோளிட்டது.

### 1.2.2 சோஷலிசப் பெண்ணியம்:

பெண்ணியத்தையும், மார்க்சியத்தையும் இணைத்து சோஷலிசப் பெண்ணியவாதிகள் பெண்ணடிமைக்கான காரணங்களைப் பெண்ணியக் கருத்துக்களிலிருந்தும், மார்க்சியக் கருத்துக்களிலிருந்தும் எடுத்து ஆராய்ந்தனர். 1973 களில் மார்க்சியத்தில் ஈடுபாடு கொண்ட

அமெரிக்கப் பெண்ணியவாதிகள் இத்தகைய முயற்சிகளில் ஈடுபட்டனர். ச.முத்துச்சிதம்பரம் சோஷலிசப் பெண்ணியத் தோற்றம் குறித்து ஆராயும் போது

> "1973களில் மார்க்சிசக் கோட்பாட்டில் நம்பிக்கை உள்ள அமெரிக்கப் பெண்ணியவாதிகள் மார்க்சிசம், பெண்ணியம் ஆகிய இரண்டு கோட்பாடுகளுக்கும் இடையில் காணப்படும் கருத்து வேறுபாடுகளை ஒழுங்குபடுத்தவும், பெண்கள் அனுபவிக்கும் எல்லாவிதமான நசுக்குதலின் காரணங்களையும் அறிந்து அவற்றை நீக்கும் முறைகளை ஆராயவும் பெண்ணியக்குழுக்களை ஏற்படுத்தினர். தனித்தியங்கிய பெண்ணியவாதிகளும் மார்க்சிசவாதிகளும் கூட இம்முயற்சியில் ஈடுபட்டனர்"[24]

என்று குறிப்பிடுகிறார்.

குடும்பம், தனிச்சொத்து, வாரிசுருவாக்கம் ஆகியவற்றால் பெண்களை ஒடுக்கும் தந்தை மேலாதிக்கச் சமூகத்தை எதிர்த்து இந்த சோஷலிசப் பெண்ணியம் எழுந்ததாக அரங்க மல்லிகா குறிப்பிடுகிறார்[25]

உற்பத்தி, மனிதமறுஉற்பத்தி, பாலியல், குழந்தைவளர்ப்பு ஆகியவற்றில் பெண்கள் நசுக்கப்படுவதாக சோஷலிசப் பெண்ணியவாதிகள் கருதினர். இவ்வகையினர் குடும்பஅமைப்பை உடைப்பதற்குத் துணைபோகவில்லை. குடும்ப அமைப்பைத் தகுந்த நடவடிக்கைகள் வழியே சரியாகக் கையாள வலியுறுத்தினர். பாலினப்பாகுபாடு மட்டுமே பெண் ஒடுக்குதலுக்குக் காரணமானது என்ற தட்டையான புரிதல் இவர்களிடம் இல்லை. நாடுகள், இனம், வயது, அறிவுத்திறன், மதம், வர்க்கம் ஆகியவையும் பெண் ஒடுக்குதலில் முக்கியப் பங்காற்றுவதாய் இவர்கள் கருதினர். சோஷலிசப் பெண்ணியவாதிகள் ஆண்களைப் போலவே பெண்களும் பொது வேலைகளில் ஈடுபடவேண்டும் என்ற கருத்தைப் பரப்பினர். குடும்ப வாழ்க்கையின் சுமையானது பெண்கள் பொது வேலைக்குச் செல்வதைத் தடை செய்துவிடக்கூடாது என்றும் அறிவுறுத்தினர். குடும்பம் அல்லாத வேறுவகையான வாழ்க்கை முறைகள்

பரிசீலிக்கப்படவேண்டும் என்றும் சோஷலிசப் பெண்ணியவாதிகள் விரும்பினர். கூட்டுவாழ்க்கை, சுதந்திரமான மணஉறவுகள், கருத்தடைசாதனங்கள் பரவலாக்கப்படுதல், தந்தைபெயர் தெரியாத குழந்தைகளும் சமூக மரியாதையோடு நடத்தப்படுதல் ஆகியவற்றையும் இவர்கள் பரிந்துரைத்தனர். மிதவாதப் பெண்ணியமானது முதலாளித்துவ ஒடுக்குமுறைகளுக்கான தீர்வுகளை முன்வைக்க முடியாமற் போனதால் சோஷலிசப் பெண்ணியம் தோன்றியது. பெண் தொழிலாளர்களுக்குக் குறைந்த கூலி வழங்கப்படுதல், வீட்டு வேலை போன்ற பொருளாதார மேம்பாட்டுக்கு உதவாத சாதாரண வேலைகளில் ஈடுபடுத்தப்படுதல், சம்பளமும், மரியாதையுமின்றி தனது சொந்த வீட்டிலே வேலை செய்யக் கட்டாயப் படுத்தப்படுதல் போன்ற இழிநிலைகளை மாற்ற சோஷலிசப் பெண்ணியம் ஆக்கப்பூர்வமான வழிமுறைகளை முன்னெடுத்துச் சென்றது.

முதலாளித்துவப் பொருளாதாரக் கட்டமைப்புகளில் தோற்றம் பெற்ற மிதவாதப் பெண்ணியம் பாட்டாளி வர்க்கத்துப் பெண்களைச் சென்றடையாமல் மத்தியதர மேல்தட்டுவர்க்கத்துப் பெண்களின் விடுதலையை மட்டும் கருத்தில் கொண்டதால் சோஷலிசப் பெண்ணியம் தோன்ற வேண்டிய சூழல் ஐரோப்பாவில் 19 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டதாக இரா.செல்வி குறிப்பிடுகிறார்.[26]

சோஷலிசப் பெண்ணியம் வர்க்க வேறுபாடு, பால்வேறுபாடு இரண்டையும் ஒழிப்பதில் கவனம் கொண்டது. மார்க்சியப் பிடிப்புடையவர்கள், பொதுவுடைமையாளர்கள், மனித உரிமை கோருபவர்கள் போன்றோர் இவ்வகைப் பெண்ணியம் உருவாகக் காரணமாக அமைந்தவர்கள், கிளாரா ஜெட்கிண், அலெக்சாந்தரா, கொல்லென்டாய், ஏஞ்சல் பேபோப் போன்றோர் முக்கியமான சோஷலிசப் பெண்ணியவாதிகள் ஆவர்.

பொருளாதாரப் புரட்சியின் மூலம் சமூக அமைப்பை மாற்றுவதை இவ்வகைப் பெண்ணியவாதிகள் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். பொருளாதாரவிடுதலை பெண்ணைத் தன்னுரிமை உள்ளவர்களாக வார்த்தெடுக்கும் என இவர்கள் நம்பினர். தனிநபர் சொத்துரிமையை

இவர்கள் எதிர்த்தனர். மேலும் போராட்டம் மற்றும் புரட்சியைத் தீர்வாகக் கருதும் போக்கும் இவர்களிடம் உள்ளது. வேலை பார்க்கும் பெண்களின் மேம்பாட்டுக் கோட்பாடாக இப்பெண்ணியம் அமைந்தது. முதலாளித்துவத்தின் சுரண்டல், ஊதியப் பிரச்சினை, தொழிற்சங்கப் பிரச்சினை போன்றவற்றிற்குத் தீர்வு காண்பதாக இக்கொள்கை விளங்கியது. சிமோன் திபவார், பெட்டி.ஃ.பிரைடன், கேட்மில்லட், ஜீலியட்மிட்சல் போன்றோர் சிறந்த சோஷலிசப் பெண்ணியக் கோட்பாட்டாளர்களாக விளங்கினர்.

சோஷலிசப் பெண்ணியத்தைச் சமதர்ம பெண்ணியம் எனப் பெயர்க்கும் இரா.பிரேமா, அதன் மூன்று அடிப்படைக் கொள்கைகளைச் சுட்டுகிறார்.

1. கூலிவேலை (Wage Labour)
2. குடும்பம் (The Family)
3. கருத்துருவம் (Idealogy)

தொழிற்களங்களில் பெண்கள் வேலை பார்க்கும் போது வேலையில் நிச்சயமற்ற தன்மை, சமஊதியமின்மை, சுரண்டல் போன்ற பிரச்சினைகளை எதிர்கொள்ளுகின்றனர். கூலிவேலை பற்றிய கொள்கைகள் மேற்கூறிய சிக்கல்களைக் கவனத்தில் கொண்டன. குடும்பம் என்ற கொள்கையானது குடும்பத்துவம் என்ற போலியான மரபுக் கருத்தாக்கத்தை உடைத்து, குடும்ப அமைப்பில் மாறுபாட்டை ஏற்படுத்தி, பெண்ணுக்கு விடுதலை பெற்றுத் தரவேண்டும் என்பதை வலியுறுத்தியது. கருத்துருவம் என்ற கொள்கையானது மதம், அரசியல், பண்பாடு என்ற தளங்களில் பெண் பற்றிய ஆணின் மரபார்ந்த கருத்தாக்கங்களை மாற்ற உதவியது.

சோஷலிசப் பெண்ணியக் கோட்பாடுகளின் சுருக்கத்தைக் கீழ்க்காணுமாறு தொகுத்துரைக்கலாம்.

- குடும்பம், தனிச்சொத்து, வாரிசுருவாக்கம் ஆகியவற்றில் செயற்படும் ஆண் அதிகாரத்தை எதிர்த்தல்
- குடும்பம், நிலவுடைமை, அரசு ஆகியவற்றால் ஆண் பெண்ணை அடக்கியாளும் நிலையைப் போற்றுதல்

- பெண்ணின் உழைப்புச் சுரண்டப்படுவதை எதிர்த்தல்
- மார்க்சியத்தோடு பெண்ணியத்தை இணைத்து பெண்ணடிமைத் தனத்திற்கான காரணங்களை ஆராய்தல்
- உற்பத்தி, மனிதமறுஉற்பத்தி, பாலியல், குழந்தை வளர்ப்பு ஆகியவற்றோடு பெண்ணின் வாழ்வு சுருக்கப்படாமல் செயலாற்றுதல்
- நாடுகள், இனம், வயது, அறிவுத்திறன், மதம், வர்க்கம் ஆகியவையும் பாலினப் பாகுபாடுகளினூடே செயல்படுவதை உணர்தல்
- பெண்களின் பிரச்சனைகளுக்காகப் பெண்ணிய குழுக்களோடு இணைந்து போராடுதல்
- சமுதாயத்தின் எல்லாவித சுரண்டல்களையும் நீக்கி, பாலினப் பாகுபாடற்ற சமுதாயத்தை நிறுவுதல்
- சமூக அமைப்பைப் புரட்சியின் மூலம் மாற்றுதல்
- குடும்பப் பணியானது வெளியில் வேலைக்குச் செல்வதைத் தடை செய்யாதவாறு பார்த்துக் கொள்ளுதல்
- சம கல்வி வாய்ப்பும், வேலைவாய்ப்பும் வழங்கப்படுதல்
- கருத்தடை சாதனங்களைப் பரவலாக்கி அங்கீகரித்தல்
- வேலைபார்க்கும் பெண்களின் வாழ்வியல் முன்னேற்றங்களுக்கு வழிவகுத்தல்
- கூலி வேலை, குடும்பம், கருத்துருவம் ஆகியவற்றில் உள்ள பெண்களுக்கெதிரான அம்சங்களை மாற்றுதல்
- தந்தைவழி சமூகத்தின் மூலத்தைக் கண்டறிந்து தகர்த்தல்
- முதலாளித்துவ, பொருளாதார பண்பாட்டு அடித்தளங்களைக் கண்டனம் செய்தல்
- முதலாளிகளாலும், கணவனாலும் சுரண்டப்படாமல் வாழப்பழகுதல்
- பொருளாதார விடுதலையைப் பெண்களின் தன்னுரிமைக்கான தீர்வாகக் கொள்ளுதல்

- பாட்டாளி வர்க்கப் பெண்களின் விடுதலையை முதன்மைப்படுத்துதல்

இந்த சோஷலிச பெண்ணியக் கோட்பாட்டை உழைக்கும் வர்க்கத்திலுள்ள பெண்களின் விடுதலைக்கான போர்க்குரல் என்று மதிப்பிட முடிகிறது.

### 1.2.3 தீவிரப் பெண்ணியம்:

மிதவாதப் பெண்ணியம் செல்வாக்கை இழந்த கால கட்டத்தில் தீவிரப் பெண்ணியம் தோன்றியது. 1960-ஆம் ஆண்டிலிருந்து தீவிரப் பெண்ணியம் தீவிரமாகச் செயல்பட்டது. அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி போன்ற நாடுகளில் இந்த இரண்டாம் அலைப் பெண்ணியம் வேகமாக வளர்ச்சி கண்டது.

Radical என்ற ஆங்கிலச் சொல்லானது வேர் (root) என்னும் பொருளை உணர்த்துவது. சமூகத்திலுள்ள பெண்களின் பிரச்சினைகளுக்கான காரணங்களை வேரிலிருந்து ஆராய்வது என்ற பொருளிலேயே Radical Feminism என்ற சொல் உருவாக்கப்பட்டது. தமிழில் இச்சொல் தீவிரவாதப் பெண்ணியம் என மொழி பெயர்க்கப்பட்டது.

கேரல் ஹெனிஷ், சுலாமித் ஃபயர்ஸ்டேன், சிமோன் தி பவார், கேட்மில்லட், செலஸ்டின்வேர், ஆனிகூட், ஜெர்மெய்ன்கிரீர் போன்றோர் தீவிரவாதப் பெண்ணியம் பேசியோர் ஆவர். இவர்களது கோட்பாடுகள் தீவிரத்தன்மையுடையதாக இருந்தது.

தீவிரவாதப் பெண்ணியவாதிகள் ஆண்களை எதிரிகளாகப் பாவித்து இயங்கினர். ஆண்கள் சுயதன்மையும் தன்னிலையும் தங்கள் இனத்துக்கு மட்டுமே உரியது என நினைத்தனர். பெண்களைப் ‘பிறர்’ என்ற நிலைக்குத் தாழ்த்தி ஒதுக்கினர். ஒரு பெண் தன் சுயத்தன்மையோடு வாழ முடியாமல் ஆணுக்கென உருமாற்றப்படும் நிலையை சிமோன் தி பவார் சுட்டிக்காட்டினார்.

> “உண்மையான சரியான பெண் எனப்படுகிற ஒரு பெண் ஆணுக்காகத் தன்னைப் ‘பிறர்’ ஆக ஏற்கத்

தேவைப்படுகிறாள். அவள் தன்னையொரு பொருளாக ஆக்க வேண்டும்…. தன்னுடைய தன்னாட்சியைத் துறக்க வேண்டும்”[27]

என ஆணுக்காக, ஆண் விரும்பும் உயிராக மாற்றப்படும் அன்றைய பெண்களின் நிலையைச் சிமோன் திபவார் எடுத்துக்காட்டினார்.

கேட் மில்லட் ‘தந்தை வழிச் சமூகம்’ ‘பாலியல் அரசியல்’ ஆகிய தொடர்களைப் பிரபலப்படுத்தியவர் ஆவார். இவர் தந்தை வழிச் சமூகம் என்பதற்கு ஒரு புதிய விளக்கத்தைத் தந்தார்.

“எல்லா ஆண்களும் நிறுவனமயமான ஒடுக்குமுறையை எல்லாப் பெண்கள் மீதும் செலுத்துகின்ற ஆட்சிமுறை”[28]

என்று விளக்கம் தந்தார். மனித ஒடுக்குமுறையின் முதன்மை வடிவமான தந்தை வழிச் சமூகத்தை அகற்றாமல் இனம், அரசியல், பொருளாதார ஒடுக்கு முறைகளை அகற்ற இயலாது எனத் தீவிரவாதப் பெண்ணியவாதிகள் கருதினர்.

தீவிரவாதப் பெண்ணியம் நான்கு முக்கிய கோட்பாடுகளை உள்ளடக்கியது.

1. ஆண் நாயகம் (Patriarchy)
2. குடும்பம் (The Family)
3. பாலியல் (Sexuality)
4. பெண்ணின் வரலாறு (Womens History)

என்ற நான்கு பொருண்மைகளைத் தீவிரவாதப் பெண்ணியவாதிகள் விவாதித்தனர். இந்நான்கு முக்கியக் கோட்பாடுகள் தீவிரவாதப் பெண்ணியத்தில் முக்கியத்துவம் பெறுவதன் அடிப்படையை ச.முத்துச்சிதம்பரம் விளக்குகிறார்.

“ஆண் நாயகக் கூறுகள் சமூகத்தின் ஒவ்வொரு பகுதியிலும் அடங்கியுள்ளன. இதை வலியுறுத்த எழுந்த நிறுவனம்தான் குடும்பம். இங்கு ஆண், பெண் இருபாலருக்கிடையே வேறுபடுத்தப்பட்ட வேலைப்பங்கீடுகள் உள்ளன. இங்குதான் ஆண்களும் பெண்களும் ஆண்நாயகச் சமூகத்திற்கியைந்தவாறு உருவாக்கப்பட்டு ஆண்நாயகத்தைப் பலப்படுத்துகின்றனர். இது

ஆணாதிக்கத்தின் அடித்தளம். அடுத்தது பாலியல் உறவுகள். ஒரு நபர்மணம் என்ற விதிமுறை பெண்ணுக்கு மட்டும்தான், ஆண்களுக்குக் கிடையாது. இதுவும் ஆண், பெண்ணின் பாலியல் மீது கொள்ளும் ஆதிக்கத்தைக் குறிக்கின்றது. இந்நிலையை மாற்ற பெண்களின் வரலாற்றை ஆராய்வது முக்கியம்"[29]

என்று முத்துச்சிதம்பரம் குறிப்பிடுகிறார்.

தீவிரவாதப் பெண்ணியம் திருமணம், குடும்ப அமைப்பு, தாய்மைப் பேறு ஆகியவை பெண்ணின் அடிமைத்தனத்திற்கு மூலகாரணமாய் விளங்குவதை எடுத்துக்காட்டியது. குடும்ப அமைப்பை ஒழித்தல், தந்தைவழிச்சமூக மரபுகளைத் தகர்த்தல், பாலியல்சுதந்திரம், பெண்ஓரினச்சேர்க்கை, கருப்பைக்குவெளியே குழந்தைப்பேறு, தாய்மைப்புறக்கணிப்பு போன்ற தீர்வுகளைப் பெண்ணடிமைத்தனத்திலிருந்து மீளுவதற்குத் தீவிரவாதப் பெண்ணியம் முன்வைக்கிறது. தீவிரவாதப் பெண்ணியக் கொள்கைகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

- பெண்களின் சிக்கல்களுக்கான மூலகாரணமாய் ஆண் விளங்குவதை வெளிக்கொணர்தல்
- பெண்கள் அடிமைகளாக நடத்தப்படாமல் உயிரியாக நடத்தப்பட வலியுறுத்தல்
- பெண்களின் சிக்கல்களுக்கான வேர்களைக் கண்டறிந்து, அவற்றை வேரறுத்தல்
- மரபார்ந்த திருமண முறைகள், குடும்ப அமைப்பு முதலியவற்றைத் தகர்த்தல்
- ஆண்களை எதிரியாகக் கருதுதல்
- பெண் ஓரினச் சேர்கையை ஆதரித்தல்
- பெண் மேலாண்மைச் சமூகத்தை உருவாக்குதல்
- பெண்களின் முன்னேற்றத்துக்கான வழிமுறைப் பணிகளில் ஆண்களின் துணையின்றியே பெண்கள் ஈடுபடுதல்

- அந்தரங்கம் பகிரங்கம் என்று கூறி பெண் மன உணர்வுகளை வெளிப்படையாகப் பேசுதல்
- தந்தை வழிச் சமூகத்தை அழித்தல்
- தாய்வழிச் சமூகத்தை நிறுவுதல்
- தந்தை வழிச் சமூகம், குடும்ப அமைப்பு, பாலியல், பெண்களின் வரலாறு ஆகியவற்றில் உள்ள ஆணின் அடக்குமுறைகளை ஆராய்தல்
- குழந்தைப் பேற்றைத் தவிர்த்தல்
- பெண்கள் ஆண்களுக்குச் சமமானவர்கள் என்பதையும் தாண்டி ஆண்களை விடவும் மேலானவர்கள் என நிறுவுதல்
- தற்சார்பு கொண்டவர்களாகவும், தன்னிலை மாந்தராகவும் பெண்களை வார்த்தெடுத்தல்
- பெண்ணை இயற்கையின் களமாகக் காட்டுதல்
- ஆண்களை முழுமையாக ஒதுக்கிய சமூதாயத்தை உருவாக்குதல்
- தனிமனித அனுபவமும் ஒரு அரசியல்தான் என்ற கொள்கையை முன்வைத்தல்

ஆகிய கோட்பாடுகளையும், நோக்கங்களையும் தீவிரவாதப் பெண்ணியம் உள்ளடக்கியுள்ளது. மேலைநாடுகளில் பெண்ணியம் உருப்பெற்று கோட்பாடுகளாக மலர்ந்தமை குறித்து இதுகாறும் கூறப்பட்டது. இந்தியப் பெண் விடுதலைக் கோட்பாடுகள் நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்டது. இந்தியப் பெண்விடுதலைச் சிந்தனைகளும் இயக்கங்களும் குறித்து இனி ஆராயப்படுகிறது.

## 1.3 பெண்ணிய வரலாறு

வரலாற்றியல் நோக்கில் பெண்ணியம் கடந்து வந்த பாதை இனி ஆராயப்படுகின்றது.

1.3.1 இந்தியப் பெண்ணிய வரலாறு

1.3.2 சங்ககாலப் பெண்கள் நிலை

1.3.3 சுதந்திரத்துக்கு முந்தைய பெண் விடுதலை முயற்சிகள்

1.3.4 பெண் விடுதலைச் சிந்தனையாளர்கள்

1.3.5 பெரியாரும் பெண் விடுதலையும்

ஆகியவை ஆராயப்படுகின்றன.

### 1.3.1 இந்தியப் பெண்ணிய வரலாறு

வேதகாலத்தில் பெண்களின் வாழ்வு உயர்வானதாக விளங்கியது. பெண்கள் பல்வேறு உரிமைகளும் திறன்களும் பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். ரிக் வேதத்தில் பெண்கள் இயற்றிய இருபது பாடல்கள் காணப்படுகின்றன. இந்தியப் பெண்களின் வரலாறு மொகஞ்சதரோ, ஹரப்பா நாகரிக காலத்திலிருந்து தொடங்குகிறது. அக்காலத்தில் தாயாளுமைச் சமூகமே இந்தியாவில் நிலை பெற்றிருந்தது. அக்கால வழிபாட்டுப் பிரதிமைகளில் பெண் உருவும் அதிலிருந்து கிளைத்து வரும் செடி போன்ற வடிவமும் காணப்படுகின்றன.

ருக்வேதப் பாடல்கள் பெண்களை உயர்வானவர்களாகச் சித்திரிக்கிறது. பெண்களின் நல்லியல்புகள் மகள், சகோதரி, அன்னை என்ற உறவு நிலைகளில் பொருந்துவதையே இவை காட்டுகின்றன. தாயின் முழுவடிவத்தை வெளிப்படுத்தும் அதிதி என்ற தேவதையை ருக்வேதம் காட்டுகிறது. மக்களைப் பேணிப் பாதுகாப்பவளாகவும், ஆளுமைத் திறன் மிக்கவளாகவும், கருணை உள்ளம் கொண்டவளாகவும் அதிதி காட்டப்படுகிறாள்.

வேதகாலத்தில் பெண் தத்துவவாதிகள் வாழ்ந்தனர். அவர்கள் ‘பிரம்மவதனிகள்’ என்று அழைக்கப்பட்டனர். கார்க்கி, வசக்னவி,

மைத்ரேயி போன்ற பெண் தத்துவவாதிகள் பொது விவாதங்களில் பங்கு பெற்றுள்ளனர்.

வேதகாலத்தில் பெண்கள் குருகுல கல்வி பயில அனுமதிக்கப்பட்டனர். பெண்களுக்குப் பதினாறு வயதிற்குப் பின்னரே திருமணங்கள் நடந்தன. கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும் அவர்களுக்கிருந்தது.

பெண்கள் விவசாயம், நெசவுத்தொழில் மட்பாண்டம் வனைதல் போன்ற தொழில்கள் புரிந்ததையும் அறிய முடிகின்றது. வேதகாலப் பெண்கள் ஆண்களுக்கிணையான வாழ்க்கை வாழ்ந்தமையை வேதங்கள் புலப்படுத்துகின்றன.

### 1.3.2 சங்க காலத்தில் பெண்கள்நிலை

தொல்காப்பியம் ஆண்களுக்கென்று தனியான இயல்புகளையும் பெண்களுக்கென்று தனியான இயல்புகளையும் கட்டமைத்துள்ளது. வீரம், தலைமை தாங்கும் பண்பு முதலியவை ஆண்களின் குணங்களாகக் காட்டப்படுகின்றன.

“பெருமையும் உரனும் ஆடுஉ மேன”[30]

எனத் தொல்காப்பியம் ஆணுக்கு வலிமையைக் கற்பித்தது. பெண்களுக்கு அச்சம், மடம், நாணம் ஆகிய பண்புகள் வலியுறுத்தப்பட்டன.

“அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய”[31]

என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

தனது வேட்கையைத் தலைவனிடம் வெளிப்படுத்தக் கூடாது என்ற சட்டமும் பெண்ணுக்கு வகுக்கப்பட்டிருந்தது.

“தன்னுறு வேட்கை கிழவன்முன் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக்கு இல்லை”[32]

எனப் பெண்ணின் அகவேட்கை வெளிப்பாடு முடக்கப்பட்டது.

சங்க காலத்தில் கற்பு பெண்ணின் தனிப்பெருங்குணமாகக் கருதப்பட்டது.

"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றென"[33]

என்பதில் பெண்ணுக்கு நாணமும் கற்பும் உயிரை விட மேலானதாகக் காட்டப்படுகின்றன. சங்ககாலத்தில் தலைவியர் தங்கள் வாழ்க்கைத் துணைவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்றிருந்தனர். பெற்றோர் உடன்படாதபோது அவர்கள் உடன்போக்கைத் தேர்ந்தெடுத்தனர். பெண்கள் சமூகத்தில் உயர்ந்திருந்தனர் என்பதைச் சங்கப் பெண்பாற்புலவர்களின் பங்களிப்பிலிருந்து புரிந்து கொள்ள முடிகிறது. ஔவையார், வெள்ளிவீதியார், ஒக்கூர்மாசாத்தியார் உள்ளிட்ட நாற்பத்தைந்து பெண்பாற்புலவர்கள் கவிதைகள் இயற்றியுள்ளனர். பாடலியற்றும் உரிமை, அரசியலில் தூது செல்லும் உரிமை போன்ற செய்திகளைப் பெண்ணுக்கு ஆதரவான நிலையில் நோக்கமுடிகிறது.

### 1.3.3 சுதந்திரத்திற்கு முந்தைய பெண் விடுதலை முயற்சிகள்

பத்தொன்பது மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில் இந்தியப் பெண்களின் நிலை அடிமைத்தனத்தின் பல்வேறு கூறுகளைக் கொண்டிருந்தது. பெண் சிசுக்கொலை, இளவயதுத்திருமணம், பலதாரமணம், தேவதாசிமுறை, வரதட்சணை, கல்விமறுப்பு, கைம்பெண் கொடுமைகள், உடன்கட்டை ஏறுதல் ஆகிய பெண்ணுக்கெதிரான சமுதாயப் பிரச்சினைகள் தொடர்ந்து வந்தன. பெண்ணுக்குப் போதுமான கல்வி வழங்கப்படாததால் அக்காலப் பெண்கள் தங்களுக்கெதிரான அநீதிகளைப் போராட்ட வடிவில் எதிர்கொள்ளவில்லை. ஆனால் பெண்களின் நிலையை உயர்த்த ஆண்கள் முக்கியப் பங்காற்றினர். இந்திய சமுதாயத்தில் மறுமலர்ச்சியைக் கொண்டுவர பிரம்மசமாஜம், ஆரிய சமாஜம், தியசாபிகல் நிறுவனம், இராமகிருஷ்ணமடம் போன்றவை அத்தகைய மறுமலர்ச்சிப் பணிகளை மேற்கொண்டன. இந்நிறுவனங்களின்

மறுமலர்ச்சிப் பகுதிகளின் ஒருபகுதி பெண்சமத்துவக் குறிக்கோள்களை உள்ளடக்கியிருந்தன.

### 1.3.3.1 பிரம்ம சமாஜம்

பிரம்ம சமாஜம் 1828-ஆம் ஆண்டு கல்கத்தாவில் இராஜாராம் மோகன்ராயால் தோற்றுவிக்கப்பட்டது. இராஜாராம் மோகன்ராயின் முயற்சியால் 1829-ஆம் ஆண்டு உடன்கட்டை ஒழிப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இந்நிறுவனம் கணவனை இழந்த கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்வதற்கு ஆதரவான சிந்தனைகளைச் சமூகத்தில் பரப்பியது. குழந்தைத் திருமணம், பலதாரமணம் ஆகியவற்றையும் இந்நிறுவனம் எதிர்த்தது. பெண்கள் வீடு என்ற எல்லைக் கோட்டைக் கடந்து புறச்செயல்பாடுகளில் பங்கு வகிக்கவும் இந்நிறுவனம் வலியுறுத்தியது. குடும்பம், சமூகம் ஆகியவற்றில் சமத்துவத்தை நிலைநாட்ட இந்நிறுவனம் மக்களிடையே பெரிய அளவில் மறுமலர்ச்சியின் தாக்கத்தை ஏற்படுத்தியது.

### 1.3.3.2 ஆரிய சமாஜம்

சுவாமி தயானந்த சரசுவதி 1875-ஆம் ஆண்டு ஆரிய சமாஜத்தைத் தோற்றுவித்தார். ஆண்-பெண் இருபாலரிடையேயும் சமத்துவத்தை நிலைநாட்டுவது ஆரியசமாஜத்தின் கொள்கைகளில் ஒன்றாக இருந்தது. இந்நிறுவனத்தின் சார்பில் ஆண் குழந்தைகளுக்கும், பெண் குழந்தைகளுக்கும் குருகுலக் கல்வி வழங்க கல்வி நிறுவனங்கள் தொடங்கப்பட்டன. வேதகல்வியும் ஆங்கிலக்கல்வியும் வழங்கப்பட்டன. இளவயது திருமணங்களை இந்நிறுவனங்கள் எதிர்த்தன. சக்தி வழிபாட்டை ஆரிய சமாஜம் முன்னிறுத்தியது. சமூகத்தில் பெண்களின் நிலை உயர இது முக்கியப் பங்களிப்பைச் செய்தது. கைம்பெண்கள் பொருளாதார மேம்பாடடைய பல்வேறு பயிற்சிகளை வழங்கியது. மதம், சமூகம், அரசியல் என அனைத்துத் தளங்களிலும் ஆண்களுக்கிணையாகப் பெண்களும் ஈடுபடுவதை இந்நிறுவனம் வலியுறுத்தியது.

### 1.3.4 பெண் விடுதலைச் சிந்தனையாளர்கள்

விவேகானந்தரின் சிந்தனைகள் ஆன்மீக தளத்தில் பெண் பற்றிய புதிய அறிவுறுத்தல்களைக் கொண்டிருந்தன. அரசியல் துறையில் காந்தி, அம்பேத்கார் போன்றோரது சிந்தனைகள் பெண்களின் உயர்வை நோக்கமாகக் கொண்டிருந்தன. இராஜாராம் மோகன்ராய் உடன்கட்டை ஏறும் கொடுமைக்கெதிராகப் போராடி சமூகத்தில் முக்கிய தாக்கத்தை நிகழ்த்தினார். வேதநாயகம் பிள்ளை, பாரதி, பாரதிதாசன் போன்றோர் தமிழிலக்கிய உலகத்தில் பெண் விடுதலைச் சிந்தனையைத் தொடங்கி வைத்த பெருமைக்குரியவர்களாகத் திகழ்கின்றனர். இந்திய சுதந்திரத்துக்குப் பின்னர் பெண்ணடிமைத் தளைகளுக்கெதிரான சட்டங்களை இயற்றிப் பெண்களைப் பாதுகாக்க அரசு முனைந்தது. பல்வேறு பெண்கள் இயக்கங்கள் தோன்றி பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளுக்கெதிராகக் குரல் கொடுத்தன. அரசியல் தளத்தில் பல்வேறு பெண் ஆளுமைகள் தோன்றி பெண்ணின் ஆற்றலை நிரூபித்தன. கல்வி நிலையங்களில் பெண்கள் கல்வி கற்று உயர் பதவியை எட்டும் நிலையும் ஏற்பட்டது. பெண்கள் பற்றிய மரபான சிந்தனையைக் கலைத்துப் போட்டு புதிய பார்வைகளை உருவாக்கிய பெரியாரின் வீச்சு அதீத விளைவுகளை உருவாக்கியது.

பெண்ணியத்தோடு ஒட்டிச்செல்லும் பெரியாரின் சிந்தனைகளை ஆய்வதன் இன்றியமையாமை கருதி அவை சுருக்கி ஆராயப்படுகின்றன.

### 1.3.5 பெரியாரும், பெண் விடுதலையும்

தமிழகப் பெண் விடுதலைச் சிந்தனையின் முன்னோடிகளாக வேதநாயகம் பிள்ளை, பாரதியார், பாரதிதாசன், திரு.வி.க., பெரியார் ஆகியோரைக் குறிப்பிட முடியும். இவர்களில் பெரியார் பெண் விடுதலை பற்றிய தெளிவான சிந்தனை கொண்டிருந்தவர் ஆவார். பெண்ணியம் கோட்பாடாகாத காலத்தில் தோன்றிய பெரியாரின் சிந்தனைகள் பெண்ணியத்தோடு பெரும்பான்மையும் ஒத்துச் செல்வதைக் காணமுடிகிறது. பெண்கள் பற்றிய பெரியாரின் பார்வை

பொது மக்களின் மரபுசார்ந்த எண்ணவோட்டங்களுக்கு எதிரானது. மதங்கள் கற்பித்த பழமைவாதத்தைப் பிடித்து உலுக்குவது, பெண் சிக்கலுக்கான வேர்களைக் கண்டறிந்து தீர்வுகளைச் சொல்வது போன்ற சிறப்புகளைக் கொண்டது. பெரியாரின் பெண்ணுரிமைக் கோட்பாடுகளைத் தொகுத்தளித்த கி.வீரமணி பெரியாரைப் பெண்ணுரிமைப் போராளியாக அடையாளப்படுத்துகிறார்.

> "தந்தை பெரியார் சுதந்திரமாக எவ்வித ஆசாபாசங்களுக்கும் தன்னை ஆட்படுத்திக் கொள்ளாமல் தான் ஒரு ஆண் குலத்தவர் என்பதைக்கூட புறந்தள்ளி வைத்துவிட்டு, தான் ஓர் சமுதாய விஞ்ஞானி-விஞ்ஞானிகளின் பார்வை விருப்பு வெறுப்புக்கு உட்படக் கூடாத பார்வை என்பதை நெஞ்சில் நிறுத்தி, பெண்ணினத்தின் அடிமைத்தளை அறுபட்டே தீரவேண்டும் என்று உறுதியாய் முழங்கினார். முழங்கியதோடு நிற்காமல் முன்னெடுத்துச் சென்று செயல்வடிவமும் கொடுத்தார்"[34]

என்று பெண் விடுதலைக்கான கோட்பாடு, செயல்பாடு இரண்டையும் கொண்டவராகப் பெரியாரை மதிப்பிடுவது முற்றிலும் பொருத்தமுடையது. மதக்கோட்பாடுகள் இலக்கியங்கள், புராணங்கள் ஆகியவற்றை மறுவாசிப்பு செய்து கட்டுடைத்து, பெண் பற்றிய பழைய மதிப்பீடுகளை மாற்றி புதிய கருத்தாங்கங்களை வழங்கியவர் பெரியார். பெரியாரின் பெண் விடுதலைக் கோட்பாடுகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

- மனைவி உயிருடன் இருக்கும் போது ஒரு ஆண் இன்னொரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது
- திருமணம் என்பது ஒரு பெண்ணை நிபந்தனையற்ற அடிமையாக மாற்றுகிறது
- பலதார மணம் கூடாது
- விதவைகள் மணம் செய்து கொள்ள வேண்டும்

- பெண்களுக்குச் சொத்துரிமை வழங்க வேண்டும்
- பெண்களுக்கு மண விலக்கு உரிமை கொடுக்கப்பட வேண்டும்
- தேவதாசி முறை ஒழிக்கப்பட வேண்டும்
- பெண் அடிமைக்கு மூல காரணம் சாதியங்களும் மதங்களுமே
- பழைய திருமண முறைகள் மனிதர்களை மானமற்றவர்களாக ஆக்குகிறது
- திருமணம் என்பது தேவையற்ற ஒன்றாகும்
- இந்தியத் திருமண முறை சாதியையும் வகுப்பையும் உள் வகுப்பையும் காப்பாற்றி வருகிறது
- ஆண், பெண் சமத்துவம் வேண்டும்
- பெண் என்றால் குடும்பத்துக்கு வேலைக்காரி என்ற நிலை மாற வேண்டும்
- சிக்கனத் திருமணமுறை பின்பற்றப்பட வேண்டும்
- பெண்கள் விடுதலை அடைய வேண்டுமானால் கற்பு என்ற பயம் நீக்கப்பட வேண்டும்
- பிள்ளை பெறுவதை முடிந்தவரை குறைத்துக் கொள்ள வேண்டும்
- ஆணுக்குப் பெண் அடிமை இல்லை. இருவரும் சமமானவர்களே என்ற நிலை உருவாக்கப்பட வேண்டும்.
- ஆண்களுக்குள்ள அனைத்து உரிமைகளும் பெண்களுக்கும் வழங்கப்பட வேண்டும்
- கைம்பெண் கொடுமை ஒழிக்கப்பட வேண்டும்
- பெண்களுக்கு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகியவற்றை வலியுறுத்தும் கருத்துகள் ஒழிக்கப்படவேண்டும்
- திருமணச் சடங்குகள் பொருளற்றவை

- பெண்களை அடிமையாக வைத்திருப்பது சமுதாயத்துக்கு மிகப்பெரிய இழப்பு ஆகும்
- காலம் செல்லச் செல்ல திருமணமே ஆட்டங்கண்டுவிடும்
- பெண்கள் ஆண்களுக்கு எந்த விதத்திலும் அறிவில் குறைந்தவர்களல்ல
- அனைத்துத் துறைகளிலும் பெண்கள் முன்னேறிவிட்டால், அவர்கள் விரும்பும் நபரைத் தாமே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் நிலை உருவாகிவிடும்
- புலவர்கள் பெண்ணை வருணித்து, அவளுக்கான நற்குணங்களைக் கற்பித்து, அவளைக் கீழ்மைப்படுத்தி பெண் இனத்தையே அடிமை இனமாக்கி விட்டனர்
- பெண்களை அடக்கி ஒடுக்கி வைத்திருக்க வேண்டும் என்ற மத சாத்திரக் கருத்துக்கள் மாற்றப்பட வேண்டும்
- வேலை வாய்ப்பில் பெண்களுக்கு ஐம்பது விழுக்காடு ஒதுக்கப்பட வேண்டும்

இவ்வாறு பெரியாரின் கொள்கைகள் பெண்ணியம் தோன்றுவதற்கு முந்தைய காலத்திலேயே பெண்ணியக் கோட்பாட்டுக்கு வழிகாட்டும் வகையில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வியலில் ‘பெண்ணியம்’ என்ற சொல்லின் பொருள் விரிவாக உரைக்கப்பட்டுள்ளது. பெண்ணியம் பற்றிய மேனாட்டுப் பெண்ணியலாளரின் விளக்கங்கள், தமிழ்ப் பெண்ணிய அறிஞர்களின் கருத்துக்கள், பெண்ணியம் பேசும் ஆண்களின் சிந்தனைகள் ஆகியவை தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பெண்ணியத்தின் முப்பது வகைகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. மிதவாதப் பெண்ணியம், சோசலிசப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம் ஆகிய கோட்பாடுகள் சுருக்கியுரைக்கப்பட்டுள்ளன. இந்தியப் பெண் விடுதலைச் சிந்தனையின் தொடக்கமாக வேதகாலம் அமைவது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. சங்ககாலப்பெண்களின் நிலையும்

விளக்கப்பட்டுள்ளது. நாடு விடுதலை அடைவதற்கு முன்னால் பெண் விடுதலைக்காக செயல்பட்ட இயங்கங்கள் பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. பெண் விடுதலைச் சிந்தனையாளர்களின் பெயர்களும் குறிக்கப்பட்டுள்ளன. பெண் பற்றிய பெரியார் கொள்கைகளின் முக்கியத்துவம் கருதி அவையும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## சான்றெண்விளக்கம்

1. சித்து.மா.சாலமன், பெண்ணியம் போட்ட பதியங்கள், ப.9
2. Encyclo Pedia Britanica, Vol 9, 1768.P.154
3. மொலினா தேன்மொழி (மொ.ஆ) “பெண்ணிலைவாதம் அதன் அவசியம் குறித்த சில கேள்விகள்” Kali for woman New Delhi, ப.12
4. தமிழ்த்துறைப் பேராசிரியர்கள், எத்திராஜ் மகளிர் கல்லூரி, பெண்ணும் பெண்மையும். ப.16
5. இரா.பிரேமா, பெண்ணியம், ப.3
6. மேலது, ப.3
7. ச.முத்துச்செல்வம் பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப.11
8. இரா.ஸ்ரீவித்யா, நவீனப் பெண்ணியல் திறனாய்வும் வ.ராவின் புதினங்களும், ப.22
9. நா.வேலம்மாள், பெண்மைய வாதம், ப.2
10. அபர்ணா மகந்தா, மார்க்சியமும் பெண் நிலைவாதமும், பக் 11-12
11. இரா.பிரேமா, பெண்ணியம், ப.2
12. இரா.செல்வி பெண்ணியக் கோட்பாடுகளும் பெண்ணியத்திறனாய்வு அணுகுமுறைகளும், ப.4
13. அரங்க மல்லிகா, தமிழ் இலக்கியமும் பெண்ணியமும், ப.1
14. சிவகாமி, கலைச் சூழலில் பெண், ப.1
15. ச.முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும் ப.11
16. அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.10
17. இராமமூர்த்தி, பெண்ணியமும் மொழி நிர்ணயவாதமும், பெண்ணிய ஆய்வுகள், ப.1
18. இரா.சம்பத், பெண்ணியத் திறனாய்வு பெண்பாற் கவிஞர்களின் புதுக்கவிதைகள் பெண்ணிய ஆய்வுகள், ப.23

19. மேலது, ப.10
20. சுதர்சன், சங்கப் பெண்பாற் புலவர்களின் பெண் அடையாளப் பதிவுகள், பெண்ணிய ஆய்வுகள், ப.51
21. ரா.ஸ்ரீவித்யா, நவீனப் பெண்ணியல் திறனாய்வும் வ.ராவின் புதினங்களும், ப.22
22. இரா.பிரேமா, பெண்ணியம், ப.61
23. மேலது, ப.3
24. ச.முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப.86
25. அரங்க மல்லிகா, தமிழ் இலக்கியமும் பெண்ணியமும், ப.3
26. இரா.செல்வி, பெண்ணியக் கோட்பாடுகளும் பெண்ணியத்திறனாய்வு அணுகு முறைகளும், ப.4
27. ராஜ்கௌதமன், பெண்ணிய வரலாறும் கோட்பாடுகளும், ப.29
28. மேலது, ப.29
29. ச.முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப.94
30. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம், பொருள் நூற்பா.95
31. மேலது, நூற்பா.96
32. மேலது, நூற்பா.116
33. மேலது, நூற்பா.111
34. கி.வீரமணி, பெரியார் பெண்ணுரிமைக் களஞ்சியம், பாகம் 3, ப.2

# இயல் -2

# படைப்புலகம்

பெண் எழுத்தாளர்கள் பெண்களின் வாழ்வியல் சிக்கல்களைத் தொகுத்துத் தீர்வுகளைத் தேடிப் பயணித்தவர்கள். பெண்கல்வி, அறிவியல்வளர்ச்சி, பழைய மரபுகளுடனான போராட்டம், சாதிப்பழக்க வழக்கங்கள், காதல் திருமணச் சிக்கல்கள், பணிக்குச் செல்லும் பெண்கள் சந்திக்கும் இன்னல்கள், குடும்பத்துக்குள் பெண் எதிர் கொள்ளும் பிரச்சினைகள், வறுமைத்துயர், பெண் அடிமைத்தனம் போன்ற பெண்ணுடன் தொடர்புடைய பல்வேறு செய்திகளைப் பெண் எழுத்தாளர்கள் தங்கள் நாவல்களில் வெளிப்படுத்தியுள்ளனர். இத்தகு பெண்எழுத்தாளர்களில் கொள்கைப்பிடிப்பும், இலட்சியநோக்கும், செய்நேர்த்தியும் மிக்கவராக இராஜம் கிருஷ்ணனை மதிப்பிட முடிகிறது. இராஜம் கிருஷ்ணனின் வாழ்க்கையை ஆராய்வதும், அவரது பன்முகப் படைப்பின் திறனை அடையாளப்படுத்துவதும் இவ்வியலின் நோக்கமாகும்.

இவ்வியலில்

2.1 இராஜம் கிருஷ்ணனின் வாழ்க்கைக் குறிப்பு

2.2 படைப்புகள்

2.3 நாவல்களின் அடிக்கருத்து

ஆகியவை ஆராயப்படுகின்றன.

## 2.1 வாழ்க்கைக் குறிப்பு

இராஜம் கிருஷ்ணன் 1925-ஆம் ஆண்டு முசிறி என்ற இடத்தில் பிறந்தார். இவருடைய தந்தை யக்ஞநாராயணன் ஆவார். தாயார் மீனாட்சி அம்மாள் ஆவார். இராஜம் கிருஷ்ணனின் தந்தை தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளில் புலமை மிக்கவராக விளங்கினார். யக்ஞ நாராயணன் உயர் நிலைப்பள்ளியில் கணித ஆசிரியராகப் பணிபுரிந்தார். இராஜம்கிருஷ்ணனது படிக்கும் ஆர்வம் தந்தையின் தூண்டுதலால் விரிவு பெற்றது. மும்மொழி நூற்புலமையும்,

தமிழ் இதழ்களின் வாசிப்பனுபவமும் அவரைப் படைப்பாற்றலுக்குரியவராகத் தகுதிப்படுத்தின.

1946-ஆம் ஆண்டு ‘இந்தியன் விமன் ஆக்ஸிலரி கார்பஸ் ஜர்னல்’ என்ற ஆங்கில இதழில் ‘போனஸ்’ என்ற இராஜம் கிருஷ்ணனின் சிறுகதை வெளிவந்தது. ‘இந்துஸ்தான் டைம்ஸ்’ என்னும் ஆங்கில இதழிலும் இவரது படைப்புகள் வெளிவந்தன. தொடக்கத்தில் லேகினி, காவேரி, கே.மித்ரா ஆகிய புனைப் பெயர்களில் இராஜம் கிருஷ்ணன் எழுதிவந்தார். 1946-ஆம் ஆண்டு வெள்ளி மலர் எனும் வார இதழில் ‘வெள்ளிடம்ளர்’ எனும் முதல் தமிழ்ச் சிறுகதையை எழுதினார். இதே இதழில் 1948-ஆம் ஆண்டு ‘சுதந்திர ஜோதி’ எனும் புதினத்தைத் தொடர்கதையாக எழுதினார். இது 1949-ஆம் அண்டு புதினமாக வெளிவந்தது. இதனைத் தொடர்ந்து ‘பெண் குரல்’ எனும் புதினத்தைப் படைத்தார். பெண்குரல் புதினத்தையே உணர்ந்து எழுதிய முதல் புதினமாக இராஜம் கிருஷ்ணன் கருதுகிறார். ஐம்பதுக்கும் மேற்பட்ட நூற்களைத் தந்துள்ள இராஜம் கிருஷ்ணன் பல்வேறு பரிசுகளைப் பெற்றுள்ளார்.

### 2.1.1 பரிசுகள்

1950-51-இல் இராஜம் கிருஷ்ணன் எழுதிய ‘ஊசியும் உணர்வும்’ என்ற சிறுகதை உலக அளவில் சிறந்த சிறுகதையாகக் கல்கி இதழால் தேர்ந்தெடுக்கப்பட்டு முதல் பரிசு பெற்றது. 1953-ஆம் ஆண்டு ‘பெண்குரல்’ நாவல் கலைமகள் இதழ் நடத்திய போட்டியில் முதல் பரிசு பெற்றது. 1955-ஆம் ஆண்டு ஆனந்தவிகடன் நாவல் போட்டி நடத்தி ‘மலர்கள்’ நாவலை முதல் பரிசுக்குரிய நாவலாகத் தேர்ந்தெடுத்தது. 1973-ஆம் ஆண்டு இராஜம் கிருஷ்ணனின் ‘வேருக்கு நீர்’ நாவல் சாகித்திய அகாதெமி விருது பெற்றது ‘கரிப்பு மணிகள்’ ‘சேற்றில் மனிதர்கள்’ ஆகிய நாவல்கள் இலக்கியச் சிந்தனைப் பரிசைப் பெற்றுள்ளன.

## 2.1.2 பாராட்டுக்கள்

முற்போக்குச் சிந்தனை, சமூக நோக்கு, உறுதியான கொள்கைப் பிடிப்பு, பெண்ணியப்பார்வை, அடித்தட்டு மக்களையும் பாத்திரமாக்கும் திறன், நேர்த்தியான கதை சொல்லல், வேறுபட்ட உள்ளடக்கங்கள், சிறந்த மொழிநடை ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டது இராஜம் கிருஷ்ணனின் எழுத்து என திறனாய்வாளர்களால் பெரிதும் பாராட்டப்படுகிறது.

எம்.ஏ. சுசீலா இராஜம் கிருஷ்ணனைச் சமூக உணர்வு மிக்க எழுத்தாளராக அடையாளப்படுத்துகிறார். ஏனெனில் இராஜம் கிருஷ்ணனின் அனைத்துப் படைப்புகளிலும் சமூகத்தின் பல்வேறு பரிமாணங்கள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. பெண்ணை மையங்கொண்ட சிக்கல்களை மட்டுமின்றி தொழிலாளர்கள், மீனவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், மலையினமக்கள் எனப் பல்வேறு தரப்பினர் சந்திக்கும் சிக்கல்களை அவர் வெளிக்கொணர்ந்துள்ளார். பாலினம் சார்ந்தோ, சாதியம் சார்ந்தோ அவர் ஒருதலைப்பாற்பட்ட நிலைப்பாடுகள் எதனையும் எடுக்காமல் இலக்கியங்களைப் படைத்திருப்பது அவரைப் பொறுப்புணர்வு மிக்க படைப்பாளியாகப் புரிந்து கொள்ள வகை செய்கிறது.

> "சமூகப் பொறுப்புணர்வுடன் இலக்கியம் படைக்கும் பெண் எழுத்தாளர்களின் வரிசையில் குறிப்பிடத்தக்க இடம்பெறுபவர் இராஜம் கிருஷ்ணன்"[1]

என்பது சுசீலாவின் கருத்தாகும்.

தோதாத்ரி என்னும் திறனாய்வாளர் இராஜம் கிருஷ்ணனை 'இயல்பு நெறி யதார்த்தவாதி' என்று மதிப்பீடு செய்கிறார். சமூக நடப்புகளை, அவை நிகழும் சூழலுடன் பொருத்திப்பார்த்துக் காரண, காரிய இயைபுடன் சமூக ஆய்வு செய்வதால் இராஜம் கிருஷ்ணனை இயல்புநெறி யதார்த்தவாதி எனும் பார்வையில் தோதாத்ரி பார்க்கிறார்.[2]

இராஜம் கிருஷ்ணனின் தொடக்க காலப்படைப்புகளுக்கும் பிற்காலப் படைப்புகளுக்கும் இடையில் உள்ளடக்க மாற்றம் காணப்படுவதாக விமர்சகர்கள் கருதுகின்றனர். 'பெண்ணின் இருப்பு' என்பதே அவரது அனைத்து நாவல்களின் உள்ளடக்கமாக உள்ளது.

தொடக்க கால நாவல்களில் குடும்பச் சூழல் மட்டுமே பேசப்பட்டதாகவும், பிற்காலத்தில் வெவ்வேறு கருப்பொருள்களைத் தேர்வு செய்ததாகவும் எம்.ஏ. சுசீலா குறிப்பிடுகிறார்.

> "இராஜம் கிருஷ்ணனின் நாவல்களை மொத்தமாய் எடுத்துக் கொண்டு ஆய்வு செய்கையில் அவர்தம் தொடக்க கால எழுத்துக்களில் குடும்பச் சூழலில் பெண்படும் துன்பங்கள் சித்தரிக்கப் பெறுவதையும், போகப்போக அவரது எழுத்தெல்லை விரிவு பெற்று வளருகையில் கையாளும், கருப்பொருளும் பின்னணியும் படைப்புக்குப் படைப்பு புதிய வீச்சும் பரிமாணமும் பெற்று மாறுபட்டு அமைந்திருப்பதையும் காணமுடிகிறது"[3]

என எம்.ஏ. சுசீலா குறிப்பிடுகிறார்.

எஸ்.வி. சுப்பிரமணியன் இராஜம் கிருஷ்ணனின் 'குறிஞ்சித்தேன்' நாவலைப் பற்றிக் குறிப்பிடும்போது

> "நீலகிரிப் படகர் பண்பாட்டு மாற்றத்தைக் காட்டிலும் மனித அன்பைக் குறிஞ்சித் தேனாகக் காணுகிறோம்"[4]

என்று பாராட்டுகிறார். இராஜம் கிருஷ்ணன் பல்வேறு வட்டாரங்களுக்குப் பயணம் செய்து, தங்கி, அங்குள்ள மக்களைக் களஆய்வு செய்து 'அலைவாய்க்கரையில்' 'கரிப்பு மணிகள்', 'கூட்டுக்குஞ்சுகள்,' 'சேற்றில் மனிதர்கள்' முதலிய நாவல்களை எழுதியுள்ளார். இராஜம் கிருஷ்ணனின் வட்டாரத் தன்மை மிக்க நாவல்களைப் பற்றி நளினிதேவி குறிப்பிடும்போது,

> "வட்டார மொழிகளைப் பயன்படுத்துவதோடு மட்டுமின்றி அவர்களின் வாழ்க்கைச் சிக்கல்களையும், அவற்றைத் தீர்க்கும் வழிகளையும் ஆராய்ந்து கூறுவது இவரது வட்டாரப் புதினங்களின் தனிச்சிறப்பாகக் காணப்படுகிறது"[5]

என்று பாராட்டுகின்றார்.

## 2.2 படைப்புக்கள்

இராஜம்கிருஷ்ணன் நாவல், குறுநாவல், சிறுகதை, நாடகம், பயணக்கட்டுரை, மொழிப்பெயர்ப்பு என நவீன தமிழிலக்கியத்தின் பன்முகப் படைப்புத்தளங்களில் இயங்குபவர். பிற வகைகளை நோக்கும் போது அவரது நாவல்களே எண்ணிக்கையில் மிகுந்தும் வாசகர் கவனம் பெற்றும் விளங்குகின்றன.

### 2.2.1 சிறுகதை

நாவல் உலகில் ஆழமான சுவடுபதித்த இராஜம் கிருஷ்ணன் சிறுகதைத் துறையிலும் தனது பங்களிப்பைச் செய்துள்ளார். வெளிச்சம், கனவு, அல்லி, உயிர்ப்பு, வடிகால், அலைகடலில், ஊசியும் உணர்வும் போன்றவை குறிப்பிடத்தகுந்த சிறுகதைத் தொகுதிகளாகும்.

### 2.2.2 நாடகம்

இராஜம்கிருஷ்ணன் நூற்றுக்கும் மேற்பட்ட நாடகங்கள் எழுதியுள்ளதாக நளினி தேவி குறிப்பிடுகிறார்.[5]

இளம் உள்ளம், சோதனை, கானாற்றின் செல்வத்தில், கதையின் கண்கள் போன்ற நாடகங்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

### 2.2.3 பயணக்கட்டுரை

தற்காலத்தில் பயண இலக்கியம் குறிப்பிடத்தகுந்த இலக்கிய வகையாக உள்ளது. விஞ்ஞான வளர்ச்சி, போக்குவரத்துச் சாதனங்களின் பெருக்கம், சுற்றுலா பற்றிய விழிப்புணர்வு, பயண எளிமை, சுற்றுலா வசதிகள், ஆங்கில மொழியின் செல்வாக்கு ஆகியவற்றால் சுற்றுலா என்பது பரவலாக்கப்பட்டிருக்கிறது. இதழ்களும் பயணக்கட்டுரைகளுக்கு முக்கியத்துவம் வழங்குகின்றன. இராஜம் கிருஷ்ணன் 1980-ஆம் ஆண்டு கலைமகள் இதழில் பன்னிரண்டு பயணக்கட்டுரைகள் எழுதியுள்ளார். சோவியத் யூனியனுக்குச் சென்று கண்டறிந்த அனுபவங்களை ‘நட்புறவின் அழைப்பு’ என்ற நூலாக வெளியிட்டுள்ளார். மேலும் அவர் தனது உருஷ்யப் பயண

அனுபவங்களைப் 'புதிய கீதம் இசைக்கின்றனர்' எனும் நூலிலும் வடித்துள்ளார்.

### 2.2.4 வாழ்க்கை வரலாறு

மருத்துவர் ரங்காச்சாரியின் வரலாறு இராஜம்கிருஷ்ணனால் எழுதப்பட்டுள்ளது. மேலும் பல பெண் ஆளுமைகளின் வரலாற்றை 'யாது மாகி நின்றாய்' எனும் நூலில் சுருக்கியுரைத்துள்ளார். 'காந்தி தரிசனம்' எனும் நூல் காந்தியின் கொள்கைகளை நிகழ்காலத்துக்கான படிப்பினையாக்குகிறது.

### 2.2.5 திறனாய்வு

இராஜம்கிருஷ்ணன் திறனாய்வு உலகுக்கும் முக்கியப் பங்களிப்பை வழங்கியுள்ளார். காலந்தோறும் பெண், காலந்தோறும் பெண்மை, இந்திய சமுதாயம், பெண் விடுதலை, பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி ஆகிய திறனாய்வு நூல்களில் இராஜம் கிருஷ்ணனின் பன்னூற்புலமையும், திறனாய்வுத் திறமையும் வெளிப்படுகின்றன. அவரது திறனாய்வுப் போக்கு 'பெண்ணியத் திறனாய்வு' என்ற தனி இயலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

### 2.2.6 மொழிபெயர்ப்பு

மரபுவழியில் வந்த வடமொழிப்புலமையும், ஆங்கில மொழி ஆளுமையும் தமிழிலக்கண - இலக்கிய நுண்மாண் நுழைபுலமும் இராஜம் கிருஷ்ணனைச் சிறந்த மொழிபெயர்ப்பாளராக உருக்கொள்ளச் செய்தன. 'போக்லோர் ஆப் பீகார்' என்னும் பி.சி.ராய் சௌத்ரியின் நூலைப் 'பீகார் மாநில நாட்டுக்கதைகள்' என்ற தலைப்பில் மொழியாக்கம் செய்துள்ளார். கே.பி. கேசவமேனனின் 'கழிஞ்ஞகாலம்' நூலைத் தமிழ்ப்படுத்தியுள்ளார். சார்லஸ்டிக்கன்ஸ், ஆலிவர் டுவிஸ்டு, வைக்கம் முகமது பசீர், தகழி சிவசங்கரன் பிள்ளை, செருகாட் போன்றோரது படைப்புகளையும் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

## 2.3 நாவல்களின் அடிக்கருத்து

இராஜம் கிருஷ்ணனின் முதல் நாவல் ‘சுந்திர ஜோதி’ 1949-இல் வெளிவந்தது. இராஜம் கிருஷ்ணன் எழுதிய பெண்ணியத் தாக்கம் மிகுந்த 22 நாவல்கள் ஆய்வுக்காக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. அவை:

2.3.1.1 பெண்குரல் (1981)

2.3.1.2 மாயச்சுழல் (1957)

2.3.1.3 நிழற்கோலம் (1967)

2.3.1.4 புயலின் மையம் (1971)

2.3.1.5 கூடுகள் (1972)

2.3.1.6 காக்கனி (1973)

2.3.1.7 சலனங்கள் (1977)

2.3.1.8 அலைவாய்க் கரையில் (1978)

2.3.1.9 கரிப்பு மணிகள் (1979)

2.3.1.10 கூட்டுக்குஞ்சுகள் (1980)

2.3.1.11 சேற்றில் மனிதர்கள் (1982)

2.3.1.12 மானுடத்தின் மகரந்தங்கள் (1984)

2.3.1.13 சுழலில் மிதக்கும் தீபங்கள் (1987)

2.3.1.14 மண்ணகத்துப் பூந்துளிகள் (1988)

2.3.1.15 தோட்டக்காரி (1989)

2.3.1.16 அழுக்கு (1990)

2.3.1.17 கோபுர பொம்மைகள் (1993)

2.3.1.18 இடிபாடுகள் (1994)

2.3.1.19 மாறிமாறிப் பின்னும் (1996)

2.3.1.20 கோடுகளும் கோலங்களும் (1998)

2.3.1.21 விலங்குகள் (1975)

2.3.1.22 ஓசைகள் அடங்கிய பிறகு (1982)

ஆகிய நாவல்களில் பெண்ணியச்சிந்தனைகள் மிகுந்து காணப்படுகின்றன. இவை தவிர வீடு, மாணிக்கக்கங்கை, பவித்ரா, தங்கமுள், மனிதனும் ஜோதியும், இறுதியும் தொடக்கமும், பானுவின் காதலன், விடியுமுன், அலைகள், ஒரு தேவனின் கதை, நினைவுப் பூக்கள் போன்ற நாவல்களையும் படைத்துள்ளார்.

## அடிக்கருத்து

### 2.3.1.1 பெண்குரல்

இராஜம் கிருஷ்ணனின் தொடக்க கால எழுத்து என்பதால் ‘பெண்குரல்’ நாவல் நெகிழ்வுத் தன்மையுடன் காணப்படுகிறது. இந்நாவல் பெண்களின் சிக்கல்களைச் சொல்லியாக வேண்டும் எனும் நோக்கில் பல்வேறு பிரச்சாரங்களை நிகழ்த்துகிறது. சலிப்பூட்டும் அளவுக்குக் கேள்வி வாக்கியங்கள் நாவலில் மிகுந்து காணப்படுகின்றன. பெண்ணுக்குத் திருமணத்தோடு முடிந்து விடுவதல்ல வாழ்வு என்பது நாவல் முன்னிறுத்தும் செய்தியாகும். சுசீலா பல்வேறு தடைகளைத் தாண்டி வானொலிப் பாடகியாக உயர்ந்து புகழ் பெறுவதை நாவல் விரிவுபடப் பேசுகிறது. வரதட்சணைக்கெதிரான கருத்துக்கள் நாவல் முழுக்க விதைக்கப்பட்டுக் கிடக்கின்றன. தீவிரத் தன்மையுடைய உரிமையுணர்வு கொண்ட பெண்ணும், கோழைத்தனம் கொண்ட ஆணும் மணவாழ்க்கையில் இணைவதால் ஏற்படும் சிக்கல்களை இந்நாவல் விவரிக்கிறது.

### 2.3.1.2 மாயச்சுழல்

கட்டுக்கோப்பாக வளர்க்கப்பட்ட ஒரு பெண்ணும், கட்டுப்பாடற்று வளர்ந்த ஒரு பெண்ணும் வாழ்வில் சந்திக்கும் சிக்கல்களை மையமாகக் கொண்டு ‘மாயச்சூழல்’ நாவலின் கதை அமைக்கப்பட்டுள்ளது. காதல் காலத்தில் எதிர்பாலினத்தார் மீது உருவாகும் உயர்ந்த படிமங்கள் திருமணத்துக்குப்பின் சிதைந்து போவதையும் நாவல் உணர்த்துகிறது. தேவையற்ற சந்தேகம் வாழ்வின் இன்பங்களைத் துரத்தி விடுவதையும் மாயச்சூழல் நாவல் கூறுகிறது. கட்டுப்பாடுடன் வளர்க்கப்பட்ட பெண்ணாக யசோதையும் கட்டற்று வாழும் பெண்ணாக ஜயமணியும் வருகின்றனர். ஜயமணி விரும்பிய அருணகிரியை யசோதை மணப்பதும், யசோதையை விரும்பிய நடராஜனை ஜயமணி மணப்பதும் காதல் வாழ்வின் முரண் எதார்த்தங்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

### 2.3.1.3 நிழற்கோலம்

வாழ்வின் ஏமாற்றங்கள் பெண்ணின் வாழ்வில் ஏற்படுத்தும் உளவியல் சிக்கல்களை இந்நாவல் விவரிக்கிறது. ரேவதியின் அமுக்கப்பட்ட உணர்வுகளும் மனச்சிக்கல்களும் கதையை நகர்த்திச் செல்லுகின்றன. இறுதியில் அவள் எழுத்துப்பணியில் தன்னைத் தீவிரமாக ஈடுபடுத்தி துயரங்களுக்கு வடிகால் தேடிக் கொள்வதைப் பற்றிக் கதை சொல்லப்படுகிறது. ரேவதியை ஏமாற்றி பூமாவைத் திருமணம் செய்து கொண்ட வாசு, திருமணமான சில தினங்களிலேயே இறந்து விடுவது பாவமும் பலனும் பற்றிய நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. ஆண் என்பதற்காகச் செல்லமாக வளர்க்கப்பட்ட வாசு இறுதியில் பெற்றோர் நலனில் அக்கறை காட்டாதது பெண்களுக்கான எச்சரிப்பின் செய்தியாகச் சொல்லப்படுகிறது.

ரேவதி, பூமா, சாரு என வேறுபட்ட மனநிலை கொண்ட பெண்களின் கதை நாவலில் சொல்லப்படுகிறது.

### 2.3.1.4 புயலின் மையம்

மனதளவில் முதிர்ச்சியடைந்த அத்தைக்கும் மருமகளான காத்யாயனிக்குமான பாசப்பிணைப்பை நாவல் விளக்கிக்காட்டுகிறது. சிறுவயதிலிருந்தே அத்தையால் வளர்க்கப்பட்ட காத்யாயனி அத்தை மகன் இராஜகோபாலனை மணமுடிக்கிறாள். இராஜகோபாலன் இடதுசாரிச் சிந்தனையுடையவன், முற்போக்குவாதி, அவன் திருமணத்துக்குப்பின் கோவா விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு அரசு வன்முறைக்கு ஆளாகி மனநிலைப் பாதிக்கப்பட்டவனாகிறான். கடந்த கால ஞாபகங்களோ, நிகழ்கால உணர்வுகளோ இல்லாமல் குழந்தை மாதிரி தோற்றமளிக்கும் இராஜகோபாலனோடு உடல், உள்ள இணைவின்றி காத்யாயனி வாழ்க்கை நடத்துகிறாள். இதற்கிடையில் அம்மு என்ற பெண்ணை மணந்து மூன்று குழந்தைகளுக்குத் தந்தையான கேதாரியுடன் காத்யாயனிக்கு நட்பு ஏற்படுகிறது. பயிலும் காலத்தில் தன்னோடு நன்கு பழகி, அரசியல் இயக்கங்களில்

முன்னுக்கு வந்து போராட்டங்களில் கலந்து துன்புறுத்தப்பட்டு மனதளவில் பாதிக்கப்பட்ட இராஜகோபாலனின் மனைவிதான் காத்யாயனி என்பதை கேதாரி அறிந்தபோது இருவரிடமும் அவனுக்குக் கருணை பிறக்கின்றது. கேதாரி அடிக்கடி காத்யாயனி வீட்டுக்கு வரத்தொடங்கினான். இதனை அறிந்து கேதாரியின் மனைவி அம்மு அவனோடு ஊடல் கொள்ளுகிறாள். மனநிலை சரியில்லாத தன் மகனுடன் காத்யாயனி வாழுவதிலிருந்து விடுதலை வழங்க எண்ணிய அத்தை கங்கைக் கரைக்கு மகனுடன் செல்ல விழைகின்றாள். சென்ட்ரல் இரயில் நிலையத்துக்கு இராஜகோபாலனையும், அத்தையையும் வழியனுப்பச் சென்ற காத்யாயனி தானும் உடன் வருவதாகக் கூறுகிறாள். வசந்தி அவளை ஆறுதல் படுத்தி வீட்டுக்கு அழைத்து வருகிறாள். கேதாரி தன் விஞ்ஞான ஆய்வுப்பணி நிமித்தமும் காத்யாயனி தனது ஆசிரியர் பணி நிமித்தமும் இருவேறு இடங்களுக்குப் பிரிந்து செல்வதோடு கதை நிறைவு பெறுகிறது.

### 2.3.1.5 கூடுகள்

'கூடுகள்' நாவல் ஒரு பள்ளி நிர்வாகத்தில் எழும் சிக்கல்களை மையமாகக் கொண்டது. சீனிவாசபுரம் உயர்நிலைப்பள்ளி, சதானந்தம் என்னும் நிர்வாகியின் திறமைக் குறைவால் வீழ்ச்சியடையும் நிலையில், நரசிம்மனின் முயற்சியால் அது எப்படி இயல்பு நிலைக்குத் திரும்பி ஏற்றம் பெற்றது என்பதை எதார்த்தமாக இராஜம் கிருஷ்ணன் சித்திரிக்கின்றார். பள்ளி மாணவர்களின் கிளர்ச்சிகள், அரசியல் தலையீடு, பணமுதலைகளின் ஆதிக்கம், நிர்வாகத் திறமையின்மை ஆகியவற்றால் ஒரு பள்ளியின் இயல்பு வாழ்க்கை பாதிக்கப்படுவதை நாவல் ஆற்றொழுக்கு நடையில் சொல்லிச் செல்லுகிறது. அப்பள்ளியில் வேலை பார்க்கும் நரசிம்மனுக்கு கனகா எனும் ஆசிரியரிடம் தோன்றும் ஈர்ப்பு, கனகாவின் தாய் மேற்கொண்ட எதிர்ப்புநிலை, அதனால் தோன்றிய விரக்தி போன்றவை இன்னொரு இழையாகக் கதையை நகர்த்திச் செல்கின்றன. ஊதியமின்மை என்பது ஆசிரியர்கள் வாழ்வை எப்படிப் பாதிக்கிறது என்பதையும் இக்கதை புலப்படுத்துகிறது.

### 2.3.1.6 காக்கானி

இராஜம் கிருஷ்ணனின் படைப்புகளில் வழக்கமான உள்ளடக்கம் மற்றும் நடையிலிருந்து இந்நாவல் முற்றிலும் மாறுபடுகிறது. குழந்தைகளுக்கேற்ற கதையைப் போலத் தோற்றங்கொண்டிருந்தாலும், பெரியவர்களுக்குத் தேவையான ஏராளமான செய்திகளை இந்நாவல் உள்ளடக்கியுள்ளது. இதில் காகங்கள் குறியீடுகளாகவே இடம் பெற்றுள்ளன. காகங்களின் இடத்தில் மனித முகங்களை ஒட்டி வைத்து நோக்குவதற்கான சாத்தியப்பாடுகளை இந்நாவல் கொண்டுள்ளது. போதும் என்ற மனப்பாங்குடன் நேர்வழியில் செல்லும் காக்கன் என்னும் ஆண் காகத்துக்கும் பேராசையால் தொலைவிற்குச் சென்று அலைவுறும் காக்கானி என்னும் பெண் காகத்துக்குமான நெருக்கமும் இடை வெளியுமாக நாவல் கருக்கொண்டுள்ளது.

> "உயிர் அமுதமானது அதை அனுபவிக்க எக்காலத்திலும், எந்த நிலையிலும் போராடலாம். நம்பிக்கை வாழ்வின் தலையாய இனிமைகளில் ஒன்று, அது தெய்வீகமானது"[6]

என்னும் கருத்து உயிர்கள் அனைத்துக்கும் பொருந்துவது. வட்டார மொழிகளின் தாக்கம் எதுவுமில்லாமல் பொதுவான மொழியில் எழுதப்பட்ட இந்நாவல் தொடக்கநிலை வாசகன் முதல் அறிவுஜீவி வாசகன் வரையிலான அனைத்துத் தரப்பினரையும் ஈர்க்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது.

### 2.3.1.7 சலனங்கள்

நடுத்தரப் பிரிவினரின் மனதில் ஏற்படும் சலனங்கள் குறித்து இந்நாவல் பேசுகிறது. இளவயதில் தோன்றும் எதிர்பாலினக் கவர்ச்சி ஏற்படுத்தும் சலனங்களையும் நாவல் வெளிக்கொணர்கிறது. வாழ்வின் வெற்றி என்பது பணத்தில் இல்லை; குணத்தில் இருக்கிறது என்பது நாவல் உணர்த்தும் முடிவாக உள்ளது. புறமாற்றங்களைத் தேடுவதை விட அகமாற்றங்களை நோக்கிப் பயணிப்பதே உயர்வானது என்பதை நாவல் கற்பிக்கிறது. நாவலின் கதைத் தலைவியான மீனாவைச் சுற்றி புனிதங்கள் எதனையும் கட்டமைக்காமல் அவளது அக விருப்பு வெறுப்புகளை இயல்பான கோணத்திலிருந்து நாவல்

வெளிப்படுத்துகிறது. கதைச்சுவையும், நிகழ்வுத் திருப்பங்களும் நிறைந்து நாவல் வாசகனை ஈர்க்கிற வகையில் எழுதப்பட்டுள்ளது. ஆண்கள் தவறு மட்டுமே செய்பவர்கள் என்றோ, பெண்கள் நல்லது மட்டுமே செய்பவர்கள் என்றோ நாவலாசிரியை முன்முடிவுகள் எதனையும் கொள்ளாமல் இந்நாவலைப் படைத்துள்ளார். இரு தரப்பிலுமே நல்லதும், கெட்டதும் படிந்திருப்பதை நாவல் சார்பின்றி நடுநிலையோடு பேசுகிறது.

### 2.3.1.8 அலைவாய்க்கரையில்

தூத்துக்குடி கடற்கரையை ஒட்டி வாழும் மீனவ கிராம மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்யும் இலக்கியப் பெட்டகமாக ‘அலைவாய்க்கரையில்’ நாவல் திகழ்கிறது.

மீனவர்களின் தொழில்வாழ்வு கல்விநிலை, பொருளாதார நிலை, ஒழுக்கநிலை, சமய நிலை ஆகியவை பற்றி இந்நாவல் விவரிக்கிறது.

கிறித்தவ அதிகார அமைப்பின் ஒடுக்குமுறையை எதிர்த்து மீண்டும் இந்து சமயத்துக்கு மாறும் கடற்கரை மக்களின் எதிர்குரலே நாவலின் ஒலியாகக் கேட்கிறது.

மதம் மக்களின் மேம்பாட்டுக்கு உதவாமல், மக்களின் பொருளாதாரத்தைச் சுரண்ட முயற்சிப்பது கண்டனத்துக்குள்ளாகிறது.

பொருளாதார நிலையில் ஏற்றம் பெறாத மக்கள் பக்கம் நீதி இருந்தாலும் அதிகார அமைப்புகளை எதிர்த்து அதனை நிலை நாட்டுவது கடினமானது என்பதை நாவல் மறைமுகமாகச் சுட்டுகிறது.

கடற்கரை வாழ் மக்களின் தனித்துவமான மொழியை மிகத் துல்லியமாகவும், இயல்பாகவும் இராஜம் கிருஷ்ணன் பதிவு செய்துள்ளமை நாவலின் இயல்புத் தன்மையை நிரூபிக்கிறது.

### 2.3.1.9 கரிப்பு மணிகள்

உப்பளத் தொழிலாளர்கள் தொழிற்களத்தில் சந்திக்கும் பிரச்சனைகளை மையமாகக் கொண்டு இந்த நாவல் எழுதப்பட்டுள்ளது. குடும்பத்தின் பொருளாதாரத் தேவைகளுக்காக உப்பளத்தில் பாடுபாடும் சிறுவர்கள், சிறுமிகள், முதுபெண்டிர், கருவுற்ற பெண்கள்,

கைக்குழந்தைகளை வைத்திருக்கும் பெண்கள் ஆகியோர் சந்திக்கும் சிக்கல்களை இந்நாவல் சமூகப்பார்வையுடன் பதிவு செய்துள்ளது.

ஆண்களுக்கும், பெண்களுக்கும் கூலி வழங்கப்படுவதில் இருக்கும் வேறுபாட்டை இந்நாவல் கண்டிக்கிறது.

பெண்களின் சிக்கல்களுக்காகப் பெண்கள் ஒன்றிணைந்து போராட வேண்டும் என்ற கருத்து மீண்டும் மீண்டும் ஆளப்படுகிறது.

கங்காணி, கான்ட்ராக்டர், தரகர்கள், முதலாளிகள், கணக்கப்பிள்ளை, கூலித் தொழிலாளிகள் ஆகியோரால் அளத்தில் வேலை செய்யும் பெண்கள் பாலியல் சுரண்டலுக்குள்ளாவதை நாவல் உணர்த்துகிறது.

அநீதிகளுக்கெதிராகப் போராடும் தொழிலாளர்கள் அதிகாரத்தின் அடக்குமுறைக்கு ஆளாவார்கள் என்பதை ராமசாமி கதாப்பாத்திரம் வழியாக புரிந்து கொள்ள முடிகிறது.

பெண் தொழிலாளர்களை ஒன்றிணைத்துப் போராடும் செங்கமலத்தாச்சி இறுதியில் அளத்துக்கு வேறு தொழிலாளர்கள் அழைத்துவரப்பட்டபோது தனது சக்தியைத் திரட்டி எதிர்க்கும் இடத்தில் முழுமையான பெண்ணியப் பாத்திரமாக மிளிர்கிறார்கள்.

பொன்னாச்சி வன்புணர்வு செய்யப்பட்ட பின்னரும் அவளை மணக்கும் ராமசாமி கதாப்பாத்திரம் முற்போக்கின் முன்னோடியாகத் திகழ்கிறது.

### 2.3.1.10 கூட்டுக்குஞ்சுகள்

தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் கூலித்தொழிலாளிகளின் கதையை இந்நாவல் எடுத்தியம்புகிறது. குழந்தைத் தொழிலாளர்கள் அடிமைகளைப் போல நடத்தப்படுவதை நாவல் கருணைக்கண்களுடன் நோக்குகிறது. தொழிலாளர்களின் விடுதலையில் ஈடுபாடு காட்டும் பெண் பாத்திரமாக வரும் விஜி துணிச்சலின் அடையாளமாக முன்னிறுத்தப்படுகிறார்.

மயிலேசன் எனும் தீப்பெட்டித் தொழிலக உரிமையாளரை மணந்திருந்தாலும், அவரது தவறுகளோடு ஒத்துச் செல்ல முடியாமல் குடும்பத்திலிருந்து வெளியேறி இலட்சியங்களோடு சமூகத்தில் நடைபோடும் பெண்ணாக விஜி காட்டப்படுகிறாள்.

பொருளாசையினால் குழந்தைகளின் நலனைக் கருத்தில் கொள்ளாத பெற்றோரின் கொடூர முகம் நாவலில் தெரிகிறது.

குடும்பத்தில் செயற்படும் கணவன் வீட்டாரின் அதிகாரத் திணிப்புகளுக்குப் பெண் தலைவணங்கிச் செல்ல வேண்டியதில்லை என்பது நாவல் உணர்த்தும் செய்தியாகும்.

### 2.3.1.11 சேற்றில் மனிதர்கள்

அடித்தட்டிலிருக்கும் மக்கள் உயர்நிலை அடையும் ஆர்வத்தில் மேல்தட்டிலிருப்பவர்களை நம்பி ஏமாந்து போவதே நாவலின் அடிக்கருத்தாகும்.

தொழில் நுட்பக் கல்லூரியில் பயிலும் ஆசையில் மேல்தட்டு வர்க்கத்தைச் சார்ந்த சாலியிடம் தன்னை இழக்கும் காந்திமதி இறுதியில் பெண் விடுதலைப் போராளியாக மாறும் பரிணாம வளர்ச்சியைச் சுற்றிக் கதை சொல்லப்படுகிறது.

தாழ்த்தப்பட்ட சமூகத்தின் வாழ்வை அவர்களது மொழியிலேயே இந்நாவல் பதிவு செய்கிறது.

ஒடுக்கப்பட்ட சமூகத்தை அதிகார வர்க்கம் மேலும் நசுக்குகின்ற கொடுமையை நாவல் கண்முன் நிறுத்துகிறது. தலித் இலக்கியம் என்பது தமிழில் அதிகம் பேசப்படாத காலத்தில் தலித்துகளின் வாழ்வைப் பதிவு செய்வது நாவலின் சிறப்பம்சமாகத் தோற்றம் அளிக்கிறது.

அரசியல்வாதிகளின் சுரண்டல் பண்பை கிள்ளிவளவன் பாத்திரம் எடுத்துக்காட்டுகிறது.

பெண்களும் தம்மைப் போராட்டத்தில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பது நாவல் உணர்த்தும் செய்தியாகும்.

### 2.3.1.12 மானுடத்தின் மகரந்தங்கள்

தேவதாசி மரபில் பிறந்து வளர்ந்த மதுராம்பாள் பாரதியாரின் அறிவுரையால், தேவதாசி வாழ்வை விட்டுப் புதிய வாழ்வு வாழத் தொடங்குவது மானுடத்தின் மகரந்தங்கள் நாவலின் முக்கிய இழையாகும்.

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலிருந்த சமூக நிலையை இந்நாவல் சித்திரிக்கிறது. காந்தியம், பொதுவுடைமை, திராவிட இயக்கக் கோட்பாடுகள் போன்றவற்றின் மீதான நேரான மற்றும் எதிர்மறையான விமர்சனங்களையும் நாவல் முன்வைக்கிறது.

நாகுவின் மகள் பேபி திரைப்படத்தில் திரைப்பட நடிகையாகும் ஆர்வத்தில் வீட்டைவிட்டு வெளியேறி, சென்னைக்குச் சென்று மசாஜ் விடுதியில் வேலை பார்த்து மர்மமான முறையில் கொலை செய்யப்படுகிறாள். திரைப்படத்தில் நடிக்கும் ஆசையில் நாடோறும் சென்னைக்குத் தப்பி வரும் இளம் பெண்களுக்கான எச்சரிப்பின் பாடமாக பேபியின் கதை சொல்லப்பட்டுள்ளது.

இந்நாவலில் வரும் ரேகா சுதந்தரமாகத் திரியும் ஹிப்பிகளின் தோழியாகி கட்டற்றுத் திரிகிறாள். மரபின் கோடுகளைத் தாண்டிச் செல்லும் புதுவகை மாற்றுவாழ்வியலை ரேகாவின் வாழ்வு போதிக்கிறது.

### 2.3.1.13 சுழலில் மிதக்கும் தீபங்கள்

கணவனின் அடக்குமுறைகளால் பாதிக்கப்பட்ட பெண் நீண்ட காலம் பொறுமையாக அனைத்தையும் தாங்கிக் கொண்டு பின்னர் குடும்ப அமைப்பிலிருந்து வெளியேறுவதுதான் ‘சுழலில் மிதக்கும் தீபங்கள்’ கதையின் கருவாகும்.

படிக்காத பெண்கள்தான் கணவனால் மதிக்கப்படுவதில்லை என்ற பிற நாவல்களின் கருத்திநின்று மாறுபட்டு, படித்த பெண்களுக்கும் குடும்பத்துக்குள் மரியாதை இல்லை என்பதை இந்நாவல் பேசுகிறது.

மாமியாருக்கும், கணவன் சாமுவுக்கும் பயந்து அடங்கி வாழ்ந்த கிரிஜா, ரெத்னா என்பவளின் சுதந்திரக் கருத்துக்களைக் கேட்டு குடும்ப அடக்குமுறையினின்று வெளியேறி, கங்கைக் கரையோரம் சென்று மீண்டும் வீட்டுக்கு வந்து ஒழுக்கம் தொடர்பான பழியைக் கேட்டு முழுமையாக வெளியேறுவதைச் சுற்றிக் கதை பின்னப்பட்டுள்ளது.

அறிவாளியாக இருக்கக்கூடிய ஒவ்வொரு மணமான பெண்ணுக்கும், பழைய மரபுகளைப் பின்பற்றும் குடும்ப ஆணுடன் வாழும் வாழ்க்கையில் நியாயம் கிடைப்பதில்லை என்பன போன்ற பெண்ணியச் சிந்தனைகள் இந்நாவலில் நிறைந்து கிடக்கின்றன.

'சூழலில் மிதக்கும் தீபங்கள்' நாவல் அளவில் சிறியதாகத் தோற்றமளித்தாலும் பெண்ணியப் படைப்பு என்ற வகையில் சிறப்புக்குரியதாய் அமைகிறது.

### 2.3.1.14 மண்ணகத்துப்பூந்துளிகள்

மண்ணகத்துப் பூந்துளிகள் நாவலின் முக்கியக் கருப்பொருள் பெண்சிசுக் கொலை என்பதாகும். வரதட்சணையால் வாழ்க்கையைத் தொலைக்கும் பெண்களின் கதைகளையும் இந்நாவல் சொல்லுகின்றது. பெண்ணாகப் பிறந்தால் பெண் எதிர்கொள்ளும் சிக்கல்களை இந்நாவல் கிராமத்துப் பின்னணியில் விளக்கிச் செல்கிறது. பெண்களின் சிக்கல்களுக்கான தீர்வுகளைச் சொல்லும் சுந்தரம் எனும் முற்போக்குப் பாத்திரம் இந்நாவலில் குறிப்பிடத்தக்கது. ஆண் குழந்தைக்கான அதீத வரவேற்பு பற்றியும் நாவல் பேசுகிறது. வரதட்சணை, பெண்சிசுக்கொலை, வன்புணர்வு, கல்வியறிவின்மை, குடிகாரக்கணவர்களின் வன்முறை எனப் பெண்கள் சந்திக்கும் பல்வேறு சமூகப்பிரச்சினைகளை இந்நாவல் பேசுகிறது. இராஜம் கிருஷ்ணனின் தொடக்ககால நாவலாக இது விளங்குவதால் எழுத்தின் முதிர்ச்சியை அடையாளங் காணமுடியவில்லை. பெண்ணுக்கு நேரும் சிக்கல்களை வரிசைப்படுத்தி துன்பியல் கதாப்பாத்திரங்கள் வழி கதை சொல்லப்படுகிறது. சலிப்பூட்டும் அளவுக்குப் பெண்சிசுக்கொலை என்ற

பொருண்மை திரும்பத் திரும்ப விளக்கப்படுகிறது. வரதட்சணை என்ற ஒரே காரணத்தைக்காட்டி பெண்சிசுவைக் கொல்வதாக அமைக்கப்பட்டுள்ள கதை பெண் சிசுக்கொலையின் பிற காரணிகளை ஆராயத்தவறிவிட்டது. அழகாயியின் மூன்று பெண்குழந்தைகளும் தற்கொலை செய்து விடுவதாகக் கதை சொல்லப்படுவது கதையை மிகவும் பலகீனப்படுத்துகிறது. பெண் பற்றிய சமூகத்தின் எதிர்மறைச் சிந்தனைகளால் நாவலின் பக்கங்கள் நிரப்பப்பட்டுள்ளன.

### 2.3.1.15 தோட்டக்காரி

பெரும்பான்மையான தனது படைப்புகளில் மனைவியோடு ஒத்துச் செல்லாத கணவன்களைக் கதாப்பாத்திரமாக்கியிருக்கும் இராஜம் கிருஷ்ணன் ‘தோட்டக்காரி’ நாவலில் இதற்கு மாறான ஒரு கதையைப் படைத்தளித்துள்ளார். கணவனுக்கு உதவி செய்பவள் மனைவி என்ற கருத்தோட்டத்திற்கு மாற்றாய், மனைவிக்கு உதவி செய்பவன் கணவன் என்னும் கருத்தை இதில் நிலை நிறுத்துகிறார். சரயுவின் கணவனாக வரும் சடகோபன் எனும் கதாப்பாத்திரமே வாசகனின் மனதில் மாதிரியாக ஒட்டிக் கொள்ளுகிறது. சடகோபன் சமையல்வேலை மற்றும் பிற வீட்டு வேலைகளில் மனைவிக்கு உறுதுணையாக இருப்பதை நாவல் கவனப்படுத்துகிறது. மனைவியின் கல்வி மேம்பாடு, ஆளுமை மேம்பாடு ஆகியவற்றை ஆதரிக்கும் கணவனாக அவன் நிறுத்தப்படுகிறான். மனைவியை நசுக்கித் துன்புறுத்தும் சுமதியின் கணவன் எதிர்பாத்திரமாகக் காட்டப்படுகிறான். வரதட்சணைக் கொடுமை, குடும்ப வன்முறை, இதழ்களின் சீரழிவு, மதப் பழமைவாதம் போன்ற சமூக அநீதிகள் பற்றிய புரிதல்களை நாவல் வழங்குகிறது.

### 2.3.1.16 அழுக்கு

அழுக்கு என்ற நாவல் சமூகத்தில் படித்துள்ள மன அழுக்கு குறித்துப் பேசுகிறது. அருணா எனும் ஆளுமை நிறைந்த பெண்கதாப்பாத்திரத்தைத் தலைவியாகக் கொண்டு இந்நாவல் புனையப்பட்டுள்ளது. கணவனிடமிருந்து விலகி தனித்து நின்று கல்வி

கற்று உயர்பதவிக்கு வரும் அருணா பெண்களுக்கான மாதிரிப் பாத்திரமாக விளங்குகிறாள். அரசு அதிகார வர்க்கத்தினரின் கயமைப் போக்குகளோடு ஒத்துப்போகாது உறுதியுடன் போராடும் மேலடுக்குப் பெண் அதிகாரியாக அருணா காட்டப்படுகிறாள். பாலியல்வெறி, கொலை, சதி ஆகியவற்றோடு பிணைக்கப்பட்ட அரசு அதிகாரிகளைப் படம்பிடித்துக் காட்டுவதோடு நாவல் முற்றுப்பெறவில்லை. நாளைய நம்பிக்கைகளையும் சத்தியங்களையும் அழுக்குகளைச் சுட்டெரிக்கும் ஒளியாகக் கொண்டு புதிய சமூகத்தை உருவாக்க நாவல் அழைப்பு விடுக்கிறது.

### 2.3.1.17 கோபுர பொம்மைகள்

ஆண்களின் அத்துமீறல்களை அறிவிக்கும் நாவலாகக் 'கோபுர பொம்மைகள்' நாவல் வெளிவந்துள்ளது. விழுமியங்கள் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபடுவதை நாவல் கேள்விக்குட்படுத்துகிறது.

ஆனந்தியின் தந்தை, ஆனந்தியின் காதலன், அபிராமியின் கணவன், சுநீதாவின் தந்தை என நாவலில் நடமாடும் ஆண் கதாப்பாத்திரங்கள் ஆணதிகாரப் பிற்போக்கின் வேறுபட்ட வடிவங்களாகத் தோற்றமளிக்கின்றனர்.

பாலியல்சுரண்டல் மற்றும் பாலியல் வன்முறைக்கெதிரான கருத்துக்களை நாவல் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளது. பெண்கள் அமைப்பாக ஒன்று திரளுவதன் அவசியத்தை நாவல் உணர்த்துகிறது.

முதுமை வரை ஆணுக்கு அடிமையாக இருந்து இறுதியில் சுதந்திரத்தின் குரலாக அபிராமி பாத்திரம் உருவேற்கிறது.

பெண்தரப்பு நியாயங்களைத் தொகுத்துச் சொல்வதைப் போல பெண்பாத்திரங்களின் மொழிதல்கள் அமைக்கப்பட்டுள்ளன.

### 2.3.1.18 இடிபாடுகள்

வீடு என்பது வெறும் கட்டடமல்ல, அது உணர்வோடு கலந்த ஒன்று என்பதே 'இடிபாடுகள்' நாவலின் கருவாகும். மூத்த தலைமுறைக்கும் இளைய தலைமுறைக்குமான இடைவெளி குறித்து நாவல் பேசுகிறது. பழைய காலம், பழைய நடைமுறைகள், பழைய வரம்புகள், பழைய நெறிகள், பழைய மதிப்பீடுகள் ஆகியவற்றை நவீனயுகத்தில் தகர்ப்பதால் ஏற்படும் 'இடிபாடுகள்' குறித்தும் நாவல் பேசுகிறது.

> "ஒவ்வொரு காலகட்ட இடிபாடுகளிலிருந்தும் அமைதி, மகிழ்ச்சி என்ற சமநிலைக்கான அழகுகள் இன்றுவரை உதயமாகி இருக்கவில்லை"[7]

என்று முன்னுரையில் இராஜம்கிருஷ்ணன் குறிப்பிடுகிறார். ஆழமான கதையோட்டத்தைக் கொண்டு நாவல் கட்டமைக்கப்படவில்லை இயல்பானதும் ஈர்ப்பற்றதுமான சாதாரண நிகழ்வுகளால் கதை பின்னப்பட்டுள்ளது.

### 2.3.1.19 மாறி மாறிப்பின்னும்

பதின்மூன்று வயதில் மல்லிநாதன் என்பவரை மணந்த ரேவதி சந்திக்கும் குடும்பச் சிக்கல்களை 'மாறிமாறிப்பின்னும்' நாவல் எடுத்துரைக்கிறது.

மனைவியிடம் அன்பும் அரவணைப்பும் இல்லாத கணவன்கள் செய்யும் அநீதிகளை நாவல் மிகுதியாகப் பேசுகிறது.

இரண்டு ஆண் குழந்தைகளைப் பெற்று வளர்த்தும் அவர்களால் ரேவதிக்கு வாழ்வில் பயனேதும் விளையவில்லை என்ற செய்தி ஆண்குழந்தை பெறும் பேரார்வத்திற்கு விடும் எச்சரிக்கையாக உள்ளது.

கல்வி கற்று வேலைபார்க்கும் பெண்கள் கணவரால் மதிக்கப்படுவதையும், உயர்கல்வி கற்காத பெண்கள் கணவரால் தாழ்வாக நடத்துப்படுவதையும் நாவல் வேறுபடுத்திக் காட்டுகிறது.

வன்புணர்வு என்பது வேற்றாட்களால் நிகழ்த்தப்படும் வன்முறை என்ற புரிதலுக்குப் பதிலாக, அது கணவனாலும் நிகழ்த்தப்படலாம் என்ற உண்மையை நாவல் முன்வைக்கிறது.

ரேவதியின் தந்தை செய்த சித்திரவதைகள் தாங்கமுடியாமல் வாழும் ரேவதியின் அம்மா கூத்தரசன் என்ற மருத்துவரோடு இணைந்து வாழும் கதை சுருக்கமாகச் சொல்லப்படுகிறது. கணவனின் துன்புறுத்தல்கள் பொறுக்க முடியாமல் என்.கே.ஆர். என்னும் பெரியவருடன் வாழும் ரேவதியின் வாழ்வு நாவலில் விரித்துரைக்கப்படுகிறது. இவ்விரு பெண்களையும் சமூகம் உடல் வேட்கையோடு தொடர்புபடுத்திப் பார்த்தாலும் உடல் தொடர்புகள் இல்லாமல் தூய அன்புடன் பிற ஆடவருடன் வாழும் புதிய வாழ்வு முறையை அவர்கள் வாழ்ந்து காட்டுகிறார்கள். உடலாசையற்று ஓர் ஆணும் பெண்ணும் ஒரே வீட்டில் வாழமுடியும் என்பதை இவ்விருவர் கதையைத் தவிர என்.கே.ஆர். சரஸ் ஆகியோரது கதையும் நிறுவுகிறது.

கணவனை விட்டுக் குடும்பம் என்ற அமைப்பிலிருந்து வெளியேறிய பின், கல்விகற்றுப் பழங்குடிச் சமூகத்துக்குச் சேவை செய்யும் பெண்ணாய்த் தன்னை உயர்த்திக் கொள்ளும் ரேவதியின் வாழ்வைச் சுற்றிக் கதை பின்னப்பட்டுள்ளது.

பெண் பயத்தை விட்டுத் துணிச்சல் மிக்கவர்களாக மாறும்போது பெண்கள் விடுதலையையும் தீர்வையும் பெற்றுக்கொள்ள முடியும் என்பது நாவல் தரும் பாடமாகும்.

### 2.3.1.20 கோடுகளும் கோலங்களும்

ஆணின் மேலாண்மைக்குட்பட்டதாகக் கருதப்படும் விவசாயம் பெண் மேலாண்மைக்குட்பட்டதாக மாறும்போது விவசாயத்தில் ஏற்படும் மறுமலர்ச்சியை ‘கோடுகளும் கோலங்களும்’ நாவல் பேசுகிறது. செவந்தி எனும் பெண் கல்வியறிவு குறைந்தவளாக

இருந்தாலும் தான்வா அமைப்புப் பெண்களிடம் பயிற்சி பெற்று விவசாயத்தை விஞ்ஞான வளர்ச்சிக்கேற்ப மாற்றி வெற்றியடைந்த கதையை இந்நாவல் கூறுகிறது. செவந்தியின் கணவன் ரங்கன் அவளது விவசாய நடவடிக்கைகளுக்கு எதிரானவனாக இருந்தாலும், அதையே ஒரு சவாலாக எடுத்துக்கொண்டு ஆண் துணையின்றி வெற்றி பெற்றுக்காட்டிய செவந்தியின் வாழ்வு வெறும் கதையாக மட்டுமின்றி பலவிதங்களில் பெண்கள் பின்பற்றத் தகுந்த மாதிரிப்பாடமாக அமைந்துள்ளது. நிலத்தின்மீதான பட்டா உரிமை, முடிவெடுக்கும்உரிமை ஆகியவை பெண்களுக்கு இருக்க வேண்டியதன் அவசியத்தை நாவலாசிரியர் உணர்த்துகிறார். செவந்தியின் மகள் சரோஜா கல்விப் புலமையால் உயர்கல்வி கற்று மேல் நிலைக்கு வந்தாலும், அறிவொளி இயக்கத்துடன் இணைந்து ‘கற்போம் கற்பிப்போம்’ என்பதைப் பிரச்சாரம் செய்கிறாள். விவசாயம், தொழில், உயர்வேலை எதுவாக இருந்தாலும் தடைகளைக் கண்டு அஞ்சாமல், தன்னம்பிக்கையுடனும், இடைவிடா முயற்சியுடனும் செயல்படும் பெண்கள் வெற்றி பெறுகிறார்கள் என்பது நாவல் உணர்த்தும் செய்தியாகும். ஒரு கிளைக் கதையைப் போல் அமைக்கப்பட்டுள்ள பாப்பம்மாவின் கதை, கணவனை இழந்தாலும், படிப்பை இழந்தாலும், அணிகளை இழந்தாலும், தன்னம்பிக்கையை இழக்காமல் அறிவுப்பூர்வமாக உழைக்கும் பெண் விவசாயத்துறையில் கூட உயர்ந்த நிலைக்கு வரமுடியும் என்பதை மெய்ப்பிக்கிறது. பாப்பம்மா கூறிய தன்வரலாறுதான் செவந்தியின் விவசாய மறுமலர்ச்சிப் பணிக்கான உந்துதலை வழங்குகிறது என்பதை நாவல் சொல்லுகிறது.

### 2.3.1.21 விலங்குகள்

விலங்குகள் நாவல் 1975-இல் வெளிவந்தது. உயர்வு மனப்பான்மை ஒரு மனிதனை வீழ்த்தி விடும் என்பதுதான் இந்நாவல் உணர்த்தும் செய்தியாகும். எழுச்சியிலிருந்து வீழ்ச்சியை நோக்கிப் பயணித்த திருநாவுக்கரசு எனும் பாத்திரத்தின் கதையை நாவல் சொல்கிறது. கலைஞனாக உயர்வுபெற வேண்டிய இப்பாத்திரம் இறுதியில் ஆடுவெட்டும் நிலைக்குத் தள்ளப்படுகிறது.

திருநாவுக்கரசின் மகளாக வரும் ரேகா பெண்ணுரிமை இயக்கச் செயல்பாடுகளில் அங்கம் வகிப்பவளாக மாற்றம் பெறுவது நாவலைப் பெண்ணிய தளத்தில் இயங்கச் செய்கிறது. பெண் வேலைக்குப் போகக் கூடாதென்ற பிற்போக்கு எண்ணம், பெண் வேலைக்குச் சென்று ஈட்டும் பொருளை பிறரது வளர்ச்சிக்காகக் கவர்ந்து செலவிடும் போக்கு, வேலைக்குச் சென்றால் மேலதிகாரிகளின் அதிகாரப்பார்வையை எதிர்கொள்ளல், மேலதிகாரியின் வேலையிலிருந்து வெளியேற்றப்படும் நிலை, அதனால் குடும்பத்திற்குள் ஏற்படும் சிக்கல்கள் போன்றவற்றை நாவல் விவரிக்கிறது.

ஆண்களிடம் மிகுந்து காணப்படும் விலங்குணர்வு பற்றிய சித்திரிப்பாக இந்நாவல் வெளிவந்துள்ளது. வேலைக்குச் செல்லும் பெண்கள் சந்திக்கும் சிக்கல்களில் ஒன்றாகிய பாலியல் சுரண்டல் குறித்து நாவல் விவாதிக்கிறது. ரேகா எனும் பெண் பணித்தளத்தில் நம்பி என்பவனால் பாலியல் சுரண்டல் நெருக்கடிக்கு உள்ளாவதை நாவல் எடுத்துப்பேசுகிறது. பொருள் சார்ந்த உலகில் பணம் என்பது உறவுகளை விட உயர்வானதாகத் திகழ்வதில் இருக்கும் இழிவை நாவல் புலப்படுத்துகிறது. பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை எனும் வள்ளுவத்தின் இழை நாவல் நெடுகக் காணக்கிடக்கிறது. இளைய தலைமுறைப் பெண்கள், தங்கள் பிரச்சினைகள் தீர அமைப்புகளை ஏற்படுத்தி பெண் சக்தியை ஒன்றிணைத்துப் போராட முயலுவதை நாவல் சிறப்பிக்கிறது.

### 2.3.1.22 ஓசைகள் அடங்கிய பிறகு

ஆயா முனியம்மாவால் வளர்க்கப்பட்ட மீனா கல்விகற்று, வேலைக்கு வந்து பள்ளிக் குழந்தைகளுக்காகவே வாழ்க்கையை அர்ப்பணிக்க நினைத்து, இயலாமற்போன துயரத்தின் கதையே ‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவலாகும். பண முதலைகள், அரசியல் வாதிகள், இடைத்தரகர்கள் ஆகியோர் பெண்களை மைதானமாகக் கொண்டு விளையாடும் வாழ்க்கையின் விளையாட்டுக்களை நாவல் எச்சரிப்பின் செய்தியாக வழங்குகிறது.

லோகன் எனும் பணக்கார இளைஞனை மனதில் நினைத்து, இறுதியில் அவன் வீட்டு வேலைக்காரனான சாரங்கனை மணக்கும் மீனா எனும் பெண்ணின் கனவுகள் உடைந்த கதை நாவல் முழுவதும் துன்பியல் சுவையைப் படியச் செய்கிறது. குடும்பத்தை விட்டு வெளியே வந்து உழைத்து, பொருளாதார சுதந்திரத்துடன் வாழும் வாழ்க்கையை விரும்பும் பெண் மீண்டும் சமூகக்காரணங்களுக்காகக் குடும்பச் சிறையில் அடைபட தன்னை ஒப்படைத்துக் கொள்வதை நாவல் பதிவு செய்கிறது. குடும்ப அமைப்பும், ஆண் பாதுகாப்பும் இல்லாமல் ஒரு பெண்ணால் வாழ இயலாது எனும் ஆணாதிக்கக் கதாப்பாத்திரங்களின் பிற்போக்கு உளறல்கள், அப்படியே மீனாவின் வாழ்வாக முடிந்துபோவது நாவலின் பலவீனமாகத் தோற்றமளிக்கிறது.

உடலாலும், மனத்தாலும் துன்புறுத்திய கணவன் சாரங்கனோடு பிணக்குற்று வெளியேறி, மீண்டும் அதே சாரங்கனை வயிற்றில் வளரும் குழந்தைக்காக ஏற்றுக் கொள்ளும் பாத்திரமாக மீனா வடிமைக்கப்பட்டிருப்பது பெண்ணியத்துக்கு மாறானது.

இவ்வியலில் இராஜம்கிருஷ்ணனின் வாழ்க்கைக் குறிப்பு சுருக்கி உரைக்கப்பட்டுள்ளது. இராஜம்கிருஷ்ணனின் படைப்புகள் பற்றிய திறனாய்வாளர்களின் மதிப்பீடுகளும் தரப்பட்டுள்ளன. சிறுகதை, நாடகம், பயணக்கட்டுரை, வாழ்க்கை வரலாறு, திறனாய்வு, நாவல் ஆகிய இலக்கிய வகைமைகளுக்குள் இராஜம்கிருஷ்ணனின் பங்களிப்பு பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் பெண்ணிய உள்ளடக்கம் மிகுந்து காணப்படுவதால் அந்நாவல்களின் அடிக்கருத்துக்களும் சுருக்கி உரைக்கப்பட்டுள்ளன.

## சான்றெண்விளக்கம்

1. எம்.ஏ.சுசீலா, தமிழிலக்கிய வெளியில் பெண் மொழியும் பெண்ணும், ப.145
2. மேலது, ப.146
3. மேலது, ப.146
4. எஸ்.வி.சுப்பிரமணியன், இலக்கியத்தில் பெண்கள், ப.78
5. நளினிதேவி, இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் சமுதாயமாற்றம்,ப.15
6. இராஜம்கிருஷ்ணன், காக்காணி, ப.50
7. இராஜம்கிருஷ்ணன், இடிபாடுகள், ப.4

# இயல் -3

# இராஜம் கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வு

இராஜம் கிருஷ்ணன் தனது புதினங்கள், சிறுகதைகள் ஆகியவற்றின் வாயிலாகத் தற்காலப் பெண்களின் நிலையைப் புலப்படுத்துவதோடு கட்டுரைத் தொகுதிகள் வழியாகவும் பெண்களைப் பற்றிய தனது பார்வையை அழுத்தமாகப் பதிவு செய்கிறார். இராஜம் கிருஷ்ணனின் கட்டுரைப் போக்கைப் பெண்ணியத் திறனாய்வாக மதிப்பிட முடிகிறது. காலந்தோறும் பெண், பெண் விடுதலை, காலந்தோறும் பெண்மை, இந்திய சமுதாயம், பாரதி பாடிய பாஞ்சாலி சபதம் ஆகிய நூற்களில் இத்தகைய பெண்ணியத்திறனாய்வு ஆசிரியரால் மேற்கொள்ளப்பட்டுள்ளது. பெரும்பான்மையான புனைகதைகள் இராஜம்கிருஷ்ணனைப் பெண்ணியப் படைப்பாளியாக அடையாளப்படுத்தும் அதே வேளை, ஆய்வுக் கட்டுரைகளோ அவரைப் பெண்ணியத்திறனாய்வாளராக அடையாளங்காட்டுகின்றன. படைப்பாளிக்குள் திறனாய்வுத் திறனும், திறனாய்வாளனுக்குள் படைப்புத்திறனும் இணைந்திருப்பதனை முழுமையான எழுத்தாளுமையாகக் கொள்ள முடியும். இராஜம் கிருஷ்ணனுக்குள் முழுமையாக நிறைந்திருக்கும் படைப்பு மற்றும் திறனாய்வு ஆளுமைகள் அவரை அதிக முக்கியம் வாய்ந்தவராகக் காட்டுகின்றன. இவ்வியலில்,

3.1 பெண்ணியத் திறனாய்வாளர்கள்

3.2 பெண்ணியத் திறனாய்வின் நோக்கங்கள்

3.3 இராஜம் கிருஷ்ணனின் பெண்ணிய திறனாய்வுப் போக்குகள் ஆகியவை ஆராயப்படுகின்றன.

## 3.1 பெண்ணியத் திறனாய்வாளர்கள்

உலகின் முதல் பெண்ணியத் திறனாய்வாளராக மேரி எல்மான் என்பவர் அறியப்படுகிறார். 1968-இல் மேரி எல்மான் எழுதிய ‘பெண்களைப் பற்றிய சிந்தனை’ என்ற நூல் முதல்

பெண்ணியத்திறனாய்வு நூலாகக் கருதப்படுகிறது. ஆண்களின் படைப்புக்களில் வார்க்கப்படும் பெண் பாத்திரங்களின் தன்மை குறித்து அவர் ஆராய்ந்தார்.

> “அடங்கிப்போகும்குணமுடையவர்களாக(Passivity), உருவமற்றவர்களாக (Formlessress), மனவுளைச்சலுக்கு ஆட்பட்டவர்களாக (Instability), கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவர்களாக (Contirement), கடமையுணர்வு உடையவர்களாக (Piety), பொருள் பற்றுடையவர்களாக (Materiality), ஆன்மிக நம்பிக்கையுடையவர்களாக (Spiriality), பகுத்தறிவுக்கு மாறானவர்களாக (Irrationality), கவர்ச்சி மற்றும் சூன்யம் உடையவர்களாக (Witch), அடங்காப் பிடாரிகளாக (Shrew), குறை கூறுபவர்களாக (Complianey), போன்ற முரண்பட்ட குணமுடையவர்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்”[1]

என்று மேரி எல்மான் குறிப்பிடும் ஆண் எழுத்தின் தன்மையானது உலகம் முழுமைக்கும் பொருந்தும்படி உள்ளது. இராஜம் கிருஷ்ணனும் ஆண்கள் கட்டமைத்த குடும்பம், சமுதாயம், சமயம் தொன்மம், ஊடகக்கலை, விழுமியங்கள், இலக்கியம் ஆகியவற்றில் காணப்படும் பாலின அசமத்துவத்தைத் தனது ஆய்வுகளில் எடுத்துக் காட்டுகிறார். இராஜம் கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வுப் போக்கு இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## 3.2 பெண்ணியத் திறனாய்வின் நோக்கங்கள்

ஆண்கள் பார்த்து உணர்ந்து அனுபவித்து வெளிப்படுத்திய உலகத்தை மீண்டும் ஆண்களின் கண்களாலேயே பார்ப்பதில் புதுமை எதுவும் இல்லை. ஆண்களின் படைப்புகளைப் பெண்களின் கண்களால் பார்த்துக் கேள்விக்குட்படுத்துவதே பயன்விளைவிப்பதாக அமையும். படைப்புகளுக்குள்ளும் சமூக நிறுவனங்களுக்குள்ளும் ஆட்சி செலுத்தும் ஆண் அதிகாரத்தைக் கண்டறிந்து விமர்சிப்பதனைப்

பெண்ணியத் திறனாய்வு எனக் கொள்ள முடிகிறது. பெண்ணியத் திறனாய்வு பல்வேறு நோக்கங்களுடன் உருப்பெற்றுள்ளது.

தேவதத்தா மற்றும் கமலி ஆகியோர் பெண்ணியத் திறனாய்வின் நோக்கங்கள் குறித்த மேலைச் சிந்தனையைப் பெண்ணிய கலைச் சொல் விளக்கக் கையேட்டில் விளக்கியுள்ளனர்.

- இலக்கியப் படைப்புகளில் பெண்ணைப் பாலின அடிப்படையில் ஒரே விதமாகச் சித்திரிப்பதை ஆராய்வது
- பழைய இலக்கியப் படைப்புகளைப் புதிய பார்வையுடன் அணுகுவது
- மறுபார்வைக்கு உட்படுத்துவது
- மகளிர்க்கென்று காலந்தோறும் பயின்று வந்துள்ள மரபைக் கண்டறிவது
- பாட நூல்களில் உள்ள பால் பாகுபாட்டினைக் கண்டறிந்து நீக்குவது
- மொழியில் பாலடிப்படையிலுள்ள வேறுபாட்டினைக் கண்டறிந்து நீக்குவது[2]

ஆகியவை பெண்ணியத்திறனாய்வின் நோக்கங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 3.3. இராஜம் கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வுப் போக்குகள்

இராஜம் கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வுப் போக்குகளாகக் கீழ்க்காணுபவற்றைக் குறிப்பிடமுடியும்.

3.3.1. தாய்வழிச் சமூகத்தைக் கொண்டாடுதல்

3.3.2. தந்தை வழிச் சமூக அநீதிகளை விமர்சித்தல்

3.3.3. வேத காலத்தைப் பொற்காலமாகக் காட்டுதல்

3.3.4. இலக்கியத்தில் காணப்படும் ஆணாதிக்கச் சிந்தனைகளைத் தகர்த்தல்

3.3.5. பெண் படைப்பாளிகளின் இலக்கியப் படைப்புகளை ஆராய்தல்

3.3.6. பண்பாட்டு விழுமியங்களைக் கேள்விக்குட்படுத்துதல்

3.3.7. பெண் சக்தியை ஒன்றிணைத்தல்

ஆகிய விரிந்த பேசுபொருளை இராஜம் கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வு கொண்டுள்ளது.

### 3.3.1 தாய்வழிச் சமூகத்தைக் கொண்டாடுதல்

தொடக்க காலச் சமூகம் தாய்வழிச் சமூகமாகவே அமைந்திருந்தது. இதில் தாயே ஆளுமை மிக்கவளாக விளங்கினாள். ஆணாதிக்கக் கசடுகள் எவையும் படியாத புனிதச் சமூகமது. பெண் தன் வாழ்வைத் தானே வாழ்ந்த அதிசய காலமாக அது கருதப்படுகிறது. பெண்ணை உடைமைப் பொருளாக்கும் கற்பு போன்ற விழுமியங்கள் எவையும் அப்போது முளைக்கவில்லை. ஆணுக்காகத் தன்னைப் 'பிறர்' ஆக்கிக் கொள்ளும் வேடங்கள் எவற்றையும் புனையாமல் பெண்கள் சுயத்தோடு வாழ்ந்த காலகட்டமாக அதனை மதிப்பிட முடிகிறது. தந்தை வழிச் சமூகம் ஆதிக்கம் புரிந்து பெண்ணை ஆக்கிரமிப்பு செய்தபோது வரலாற்றின் பிற்பகுதியில் பெண்ணியவாதிகள் அதனை எதிர்க்கத் தொடங்கினர். தந்தைவழிச் சமூகத்துக்கான எதிர்ப்பின் குரல் தாய்வழிச் சமூக ஆதரவாக உருப்பெற்றது.

இராஜம்கிருஷ்ணன் தாய்வழிச் சமூகத்தை 'தாயாண்சமூகம்' என்றழைக்கிறார். பல்வேறு இடங்களில் வேறுவேறு பொருண்மைகளை விவாதிக்கும் இடத்தும் தாயாளுமைச் சமூகத்தின் பெருமைகளைப் பெருமிதத்தோடு உணர்த்துகிறார். அவற்றைக் கீழ்க்காணுமாறு தொகுத்தாராய முடிகிறது. அவை,

- தாய்வழிச் சமூகத்தில் பெண் சர்வ சக்தியுடையவளாக அறியப்பட்டாள்.
- இயற்கையுடன் ஆணைவிட மிக நெருக்கமாக அதன் ஒரு பகுதியைப் போலவே இயங்கினாள்.
- வேட்டையாடும் திறன் பெற்றிருந்தாள். குருதி கண்டஞ்சவில்லை.

- மக்கட் பிறவிக்குக் காரணமாகி அதன் வளர்ச்சியில் ஆழ்ந்த பங்களிப்பைச் செய்தமையால் ‘ஜனனி’ என அழைக்கப்பட்டாள்.
- பெண்ணால் உயிர்பெற்று உலகுக்கு வந்த மக்கள் ‘ஜனம்’ என்ற பெயரில் அறியப்பட்டார்கள்.
- பெண் தெய்வங்கள் முக்கியத்துவம் பெற்றிருந்தனர்.
- பெண்ணின் விருப்பம் இல்லாமல் ஆடவர்கள் பெண்ணைத் தொடமுடியாத உயர்ந்தநிலை இருந்தது.
- கூடலுக்கான விழைவை விரல்களைக் குவித்து பெண்ணே வெளியிடுவாள்.
- தாய்மைப் பண்பு சமுதாயக் கடமைகள் உரிமைகள் போன்ற நோக்கில் போற்றப்பட்டன.
- பெண் தனது உடன்பாட்டோடு கருவுறுவதில் சமூகத் தடை எதுவும் இல்லை.
- ஆதித் தாய்தான் தொடக்க காலத்தில் கல்வி அளிப்பவளாகத் திகழ்ந்தாள்.
- குடும்பங்கள் தோன்றியிராத அக்காலத்தில் குழுத்தலைமையைத் தாயே ஏற்றிருந்தாள்.
- சமுதாய உற்பத்தியின் உயிர் நாடியாகத் திகழ்ந்த தாய்த்தலைமைக்கு ஆணால் போட்டி போட முடியவில்லை.
- தாயாளுமைச் சமூகத்தில் பெண் இடம் விட்டு இடம் பெயரமாட்டாள்.

இராஜம்கிருஷ்ணன் தாய்வழிச் சமூகத்தின் சிறப்புக்களாக மேற்காட்டியவற்றைத் தருகின்றார்.

### 3.3.2 தந்தை வழிச் சமூக அநீதிகளை விமர்சித்தல்

இராஜம் கிருஷ்ணன் வரலாற்றின் மையமாகத் தாய்வழிச் சமூகத்தைத் தந்தைவழிச் சமூகம் வீழ்த்தியமையைக் குறிப்பிடுகிறார்.

> "ஆண் தன் ஆதிக்க வேட்கையினால் சமுதாய உற்பத்திக்கும், சமுதாய ஆக்கத்துக்கும் உரிய ஆதார சக்தியாக விளங்கும் தாயை அடிமைப் படுத்தி விட்ட வரலாறே மனித சமுதாய வரலாற்றின் சாரம்"[3]

என்கிறார். தந்தையாண் மரபானது தாயாண் மரபு வழக்கங்களை வீழ்த்த கீழ்க்காணும் வழிகளைக் கையாண்டதாக இராஜம் கிருஷ்ணன் குறிப்பிடுகிறார்.

- கல்வி செல்வம், வயது, மதிப்பு எல்லாவற்றிலும் ஆணை உயர்ந்த நிலையில் வைத்து, பொம்மை போல ஒரு பெண்ணைக் காட்டுதல்
- குழந்தைத் திருமணம்
- கைம்மை நிலை

ஆகிய மூன்று சமூக அநீதிகளைத் தந்தையாண் சமூகம் அதிமுக்கியப் படுத்துவதாக இராஜம் கிருஷ்ணன் கூறுகின்றார். [4]

பெண்ணின் சொத்துரிமையைப் பறித்தல், கணவன் வீட்டுக்கு மனைவியைப் பெயர்த்துச் செல்லுதல், வரதட்சணை வாங்குதல் போன்ற அநீதிகள் தந்தையாண் சமூகத்திலிருந்துதான் தோன்றியதாக அவர் குறிப்பிடுகிறார்.[5]

### 3.3.3 வேத காலத்தைப் பொற்காலமாகக் காட்டுதல்

ருக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள் இந்தியாவின் மிகத் தொன்மையான ஆன்மீக இலக்கியக் களஞ்சியங்களாக விளங்குகின்றன. வேதகாலப் பெண் வடிவங்கள் ஒளியும் வீரியமும் மிக்கவையாக விளங்குவதால், இராஜம்கிருஷ்ணன் வேதகாலத்தைப் பொற்காலமாகக் காட்டுகிறார். தந்தையாதிக்கம் ஆழமாக வேர்விடாத காலமாக அப்பொற்காலம் அமைந்திருந்தது. அக்காலத்தில்

பெண்களின் நிலை உயர்வானதாக இருந்தது. பெண் ஆளுமை நிறைந்தவளாகவும், சமூக முக்கியத்துவம் வாய்ந்தவளாகவும் மதிக்கப்பட்டாள். வேதகாலத்தில் பெண், விலங்குகள் மாட்டப்பட்டவளாகவோ, சிறகுகள் வெட்டப்பட்டவளாகவோ வீழ்ச்சி அடையவில்லை. அவள் சுதந்திரமும் எழுச்சியும் நிறைந்தவளாகவே அன்றைய சமூகத்தில் நிலை பெற்றிருந்தாள்.

இராஜம் கிருஷ்ணன் வேதகாலத்தைப் பொற்காலமாக முக்கியப்படுத்தி அதிக இடங்களில் பேசுவதற்கான காரணங்களாகக் கீழ்க்காணுபவற்றைக் குறிப்பிட முடியும்.

3.3.3.1 பெண்தேவதைகளுக்குத் தனித்துவமான உயர்ந்த இடம் வழங்கப்பட்டமை

3.3.3.2 பெண்கல்வி சிறப்புற்றிருந்தமை

3.3.3.3 கவிதைப் படைப்பாளியாக பெண்கள் இயங்கியவை

3.3.3.4 போரிடும் உரிமை பெற்றிருந்தமை

3.3.3.5 சமத்துவச் சிந்தனைகள் ஆக்கம் பெற்றிருந்தமை

3.3.3.6 ஆணாதிக்க அநீதிகள் உருப்பெறாமை

ஆகிய காரணங்களைக் கூறமுடிகிறது.

### 3.3.3.1 பெண்தேவதைகளுக்குத் தனித்துவமான உயர்ந்த இடம் வழங்கப்பட்டமை

வேதத்தில் குறிக்கப்படும் தேவதைகள் ஆற்றல் மிக்கவர்களாகவும், இயற்கையை இயக்குபவர்களாகவும் உருவாக்கப்பட்டுள்ளமையை இராஜம்கிருஷ்ணன் எடுத்துக் காட்டுகிறார். அதிதி, ப்ருத்வி, ஸீதா, உஷஸ், ராத்ரி ஆகிய தேவதைகளின் சிறப்புகள் விவரிக்கப்படுகின்றன.

அதிதி எனும் தேவதை தாயின் முழுவடிவமாகப் போற்றப்படுகிறாள். அதிதியின் சிறப்புகளைப் பற்றிப் பேசும் போது இராஜம் கிருஷ்ணன்,

> “அதிதி என்ற சொல்லுக்கு எல்லையற்றவள், கட்டுப்படாதவள், சுதந்திரமானவள் என்று பொருள். எனவே

இத்தாய்த் தேவதை தந்தையாண் சமுதாயத்துக்கு முந்தைய காலத்தின் பிரதிபலிப்பு என்று கொள்ளலாம். இவள் மிகவும் அக்கறையுடன் மக்களைப் பேணி, நல்வழி நடத்திச் செல்லும் திறமையுடன் கருணை அன்பும் கொண்டவளாக இருக்கிறாள். மித்ரன், வருணன், இந்திரன், அர்யமான் என்ற புலவர்கள் இவள் பெயராலேயே ஆதித்தியர்கள் என்று குறிக்கப்படுகின்றனர்"[6]

என அதிதி எனும் பெண் தேவதையின் முக்கியத்துவத்தைக் கூறி, வேதகாலப் பெண்களின் உயர் நிலையைச் சுட்டிச் செல்கிறார்.

பரந்த வெளியெங்கும் நிறைந்திருக்கும மண் அன்னையான ப்ருத்வி எக்காலத்துக்கும் தாயாகக் காட்டப்படுகிறாள். விளைச்சலுக்கு அருள்புரியும் தேவதையாக ஸீதா என்னும் தேவதை சுட்டப்படுகிறாள். செல்வம் பெருகவும், பால்வளம் சிறக்கவும், வண்மை செழிக்கவும் ஸீதா எனும் தெய்வத்தை நோக்கி வேண்டுதல் பண்ணப்படுவதை வேத ஆதாரத்துடன் இராஜம்கிருஷ்ணன் விளக்குகிறார்.[7]

உஷஸ் அல்லது உஷா எனும் தேவதை வானுக்கும் ஒளித்தெய்வத்துக்கும் பிறந்த மகளாக உருவகப்படுத்தப்படுகிறாள். சூரியன், அக்னி, சந்திரன் ஆகியோரோடு தொடர்புடையவளாகக் காட்டப்படுகிறாள். ஒளியின் குறியீடாக இந்த ஒளிக்கன்னி சுட்டப்படுகிறாள்.[8]

இரவு தேவதையான ராத்ரியைப் பற்றிய குறிப்புகளையும் இராஜம் கிருஷ்ணன் தருகிறார். ராத்ரி எனும் இத்தேவதை உழைப்பாளிகளின் களைப்பை நீக்கி, புத்துயிரளித்து, ஓய்வுக்குக் காரணமாகி தீமையின் நிழல் படியாமல் பாதுகாப்பதை அவர் சுட்டுகிறார்.[9]

வாக் என்னும் ஒலிக்குரிய தேவதை பற்றியும் இலா, சரஸ்வதி, பாரதி ஆகிய ஞான இன்பத்தைத் தரும் தெய்வங்களைப் பற்றியும் இராஜம் கிருஷ்ணன் பேசுகிறார். சூர்யா, சிரத்தா, அநுமதி, அரமதி, தம்பதி, ப்ரஷனி, அரண்யானி, அப்சரஸ் என ருக்வேத தேவதைகளின்

பட்டியல் நீண்டு செல்கிறது. பெண் தெய்வ மேம்பாட்டைக் காட்டி வேதகாலப் பெண்ணின் உயர்வைச் சொல்லுவதற்காக இராஜம் கிருஷ்ணன் இத்தேவதைகள் பற்றிய குறிப்பைத் தருவதாகக் கருத முடிகிறது. ஆண் தெய்வங்களை மிகைப்படுத்தும் புனைவுகள் பிற்கால தந்தையாண் சமுதாயத்தில் தோன்றியதாக அவர் குறிப்பிடுகிறார்.

ருக்வேதம் குறிப்பிடும் இந்திராணி ப்ரஷனி, அரண்யாளி போன்ற வணக்கத்துக்குரிய தேவதைகளின் சிறப்புக்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

### 3.3.3.2 பெண்கல்வி சிறப்புற்றிருந்தமை

பெண் கல்வி சிறப்புற்றிருந்த வேதகாலச் சிறப்பும் எடுத்துரைக்கப்படுகிறது. 'உபநயனம்' என்ற கல்வி பெறும் உரிமையைப் பெண்கள் பெற்றிருந்தனர். வேதங்களைக் கற்கும் உரிமை பிற்காலத்தில் பெண்களிடமிருந்து பறிக்கப்பட்டதே தவிர வேதகாலத்தில் வேதத்தைக் கற்கும் உரிமை அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்தது கல்வியைப் போதிக்கும் உரிமையும், திறனும் அக்காலப் பெண்களிடமிருந்தது. தத்துவ விசாரணைகளில் பெண்கள் ஈடுபட்டமைக்கான சான்றுகளும் கிடைக்கின்றன.

ஞானக் கடவுளாய் சரஸ்வதி போற்றப்பட்டமை குறித்தும் இராஜம் கிருஷ்ணன் விளக்கியுள்ளார்.

> "சரஸ்வதி கசடுகளையும் தீய மலங்களையும் போக்கி ஞான வெள்ளமாகப் பரவும் தெய்வ வடிவினள். அறிவு, விவேகம், சாதுரியம், கற்பனை வளம், படைப்புத்திறன், புதிய கண்டுபிடிப்புகள், நுண்கலைகள் ஆகிய அனைத்து மனித ஆற்றல்களையும் பாதுகாத்து நலம் பயக்கும் ஞான தேவதை"[10]

எனக் கல்வியின் பல்வேறு பரிமாணங்கள் பெண் தெய்வத்தோடு தொடர்பு படுத்தப்பட்டதை எடுத்துக் காட்டுகிறார்.

### 3.3.3.3 கவிதைப் படைப்பாளியாக பெண்கள் இயங்கியமை

வேதகாலத்தில் பெண்கள் ஆண் படைப்பாளிகளுக்கிணையாகப் பாடல்களை இயற்றி தங்கள் அறிவுத் திறனை வெளிப்படுத்தியுள்ளனர். ஸோபமுத்ரா, கோசா, அபலா, ஸீர்யா, யமி, இந்திராணி, சர்ப்பரஜனி, ஊர்வசி போன்ற தேவதைகள் போற்றப்படும் பாடல்களை வேதத்தில் காணமுடிகிறது. அதே நேரம் அவர்களால் இயற்றப்பட்ட வேதப்பாடல்களையும் காணமுடிகிறது. வேதத்திலுள்ள பெண்களின் பாடல்கள் பற்றிய சகுந்தலா ராவ் சாஸ்திரியின் பாகுபாட்டை இராஜம் கிருஷ்ணன் மேற்கோள் காட்டுகிறார்.

- முழுவதுமாகப் பெண் ருஷிகளால் பாடப்பட்டவை
- உரையாடல்களில் பெண் பெயர்களில் வருபவை
- பெண் ருஷிகளின் பெயரில் ஐயத்துக்குரியதாகப் பாடப்பெற்றவை

எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளன[11]

### 3.3.3.4 போரிடும் உரிமை பெற்றிருந்தமை

வேத காலத்தில் பெண்ணின் வாழ்வு அகத்தோடு முடக்கப்படவில்லை. அவள் புறத்துக்குரியவளாகவும் கருதப்பட்டாள். பெண்கள் போர்க்கலையில் சிறந்து விளங்கியமைக்கான ஆதாரங்கள் உள்ளன. விஸ்பலா முத்கலானி ஆகிய பெண்களின் போர்த்திறன் பற்றி இராஜம் கிருஷ்ணன் பேசுகிறார்.

கேல அரசனின் மனைவி விஸ்பலா கணவனுக்கு உதவியாக எதிரிகளைத் தாக்கக் கடும் போர் புரிந்ததில் ஒருகாலை இழக்க வேண்டியதாயிற்று எனவும் அசுவினி தேவர்களின் அருளால் இரும்புக்காலைப் பொருத்தி மீண்டும் போரிட்டார் எனவும் குறிப்பிடுகிறார். மேலும் முத்கலானி என்ற பெண் தமக்குரிய பசுக்கள், கன்றுகளைக் கவர்ந்து சென்ற எதிரிகளோடு வீரப்போர் புரிந்து மீட்டு வந்ததாகவும் இராஜம் கிருஷ்ணன் வேத ஆதாரங்களோடு விளக்குகிறார்.[12]

### 3.3.3.5 சமத்துவச் சிந்தனைகள் ஆக்கம் பெற்றிருந்தமை

வேதகாலத்தின் சிறப்புகளில் ஒன்றாக அதன் சமத்துவச் சிந்தனையை ஆசிரியர் முன்வைக்கிறார்.

> "ஒன்றாக நடப்பீர், ஒன்றாகச் சிந்திப்பீர், உங்கள் உணவு, பருகுநீர் எல்லாம் எல்லாருக்கும் உகந்ததாக இருக்கட்டும். உங்கள் எண்ணங்களும், குறிக்கோள்களும் ஒரே மையத்தில் இணையட்டும்"[13]

என்று ருக்வேதத்தில் வரும் கடைசிப் பாடல்களின் செய்தி அனைவரையும் ஒன்றிணைக்கும் நெறியாகக் காட்டப்படுகிறது.

### 3.3.3.6 ஆணாதிக்க அநீதிகள் உருப்பெறாமை

தந்தையாதிக்கம் பெண்ணுக்கெதிரான அநீதிகளை உருவாக்கியது. இத்தகு அநீதிகள் வேத காலத்தில் தோற்றம் பெறவில்லை.

> "கல்வி உரிமை பறிக்கப்பெற்று காயரும்புப் பருவத்திலே கன்னிமை கழிக்கப்பெறும் திருமண வளையத்துள் தள்ளப்பட்டிருக்கவில்லை. கைம்பெண் கொடுமை, கற்புத்தத்துவம், சதிச்சிறைஏற்றல், பெண்சிசுக் கொலை போன்ற அவலங்கள் ருக்வேதப் பாடல்களில் நிழலிடவில்லை"[14] என்கிறார் இராஜம் கிருஷ்ணன்.

இக்காலச் சமூகம் பின்பற்றத்தகுந்த மாதிரி வாழ்வாக வேதகால வாழ்வை அவர் காட்டுகிறார். வேதகாலத்துக்குப் பின் எழுந்த பிரமாணங்கள், உபநிடதங்கள், தருமசூத்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றில் ஆணாதிக்கம் ஆளுகை செலுத்துவதாகக் கருதுகிறார். இவை அடிமை உருவாக்கத்துக்கான கோட்பாடுகளை உருவாக்கி நெறிப்படுத்தியதாகக் குறிப்பிடுகிறார். பெண்ணின் உரிமைகளும், இயக்கங்களும் கட்டுப்படுத்தப்படும் ஆண் நாயக நெறிமுறைகளால் அச்சமைத்து வார்க்கப்படும் வார்ப்புகளாய்ப் பெண்கள் மாற்றுரு பெறுவதைப் பிற்காலத்தின் வீழ்ச்சியாகப் பார்க்கிறார்.

## 3.3.4. **இலக்கியத்தில் காணப்படும் ஆணாதிக்கச் சிந்தனைகளைத் தகர்த்தல்**

மனித எண்ணவோட்டத்தையும் சிந்தனைப் போக்கையும் தீர்மானிக்கும் கருவியாக மொழி விளங்குகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே தந்தையை அதிகாரம் மிக்கவராக நிறுவ மொழி ஆவன செய்கிறது. அப்பா வந்தார். அம்மா வந்தாள் என்ற வாக்கிய அமைப்பானது யார் அதிகாரம் மிக்கவர் என்ற உண்மையைக் குழந்தைகளுக்குக் கற்பிக்கிறது. குழந்தைகளின் பாடப்புத்தகத்தில் குடும்பநிகழ்வுகளை மையப்படுத்தும் பாடங்கள் அமைக்கப்படுகின்றன. அவற்றில் உள்ள ஓவியங்களைக் கவனித்தால் அப்பா காலுக்குமேல் கால்போட்டு செய்தித்தாள் படிப்பவராகவும், அம்மா சமையலறையில் வேலை செய்பவளாகவும் காட்டப்பட்டிருப்பார்கள். அண்ணா விளையாடிக் கொண்டிருப்பவனாகவும், தங்கை வீடு கூட்டுபவளாகவும் ஓவியம் வரையப்பட்டிருக்கும். கீரைக்காரன் வந்ததும் குழந்தை தாயைக் கூப்பிடவும், செய்தித்தாள் போடுபவன் வந்ததும் தந்தையைக் கூப்பிடவும் மொழியானது குழந்தையைப் பயிற்றுவித்து விடுகிறது. மொழி அமைப்பு இலக்கணம், இலக்கியம், புராணம், தத்துவம் அனைத்தும் ஆணாதிக்கத்தால் கைப்பற்றப்பட்டுக் கிடக்கின்றன.

> “ஒவ்வொரு மனமும் அதனதான் மொழியால் வடிவமைக்கப்படுகிறது. என்ற நிலையில் மொழியைக் கைப்பற்றிக் கொள்ளுகிற அரசியல் மனித வரலாற்றில் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இப்படிக் கைப்பற்றியவர்கள் கட்டமைப்பதுதான் உண்மைகளாக நின்று மனிதர்களை இயக்கும் சக்திகளாக வளர்ச்சி பெறுகின்றன”[15]

எனக் க.பஞ்சாங்கம் குறிப்பிடுகிறார். இலக்கிய இலக்கணங்களைத் தனது கட்டுப்பாட்டில் ஆண் வைத்தமையால் அவை பெண்ணுக்கெதிரான கருத்தியல்களைப் பரப்பின. பெண்ணியத் திறனாய்வு இலக்கியத்திற்குள்ளிருக்கும் ஆண் கருத்தாடல்களை விமர்சிக்கிறது.

இரா.பிரேமா இலக்கியத்தில் மேற்கொள்ளப்படும் பெண்ணியத் திறனாய்வு குறித்து தெளிவான விளக்கம் தருகிறார்.

> “பெண்ணியத் திறனாய்வு என்பது மரபு வழி வந்த இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ள பெண் பற்றிய போலியான கருத்தாக்கங்களை உடைத்தெறிவதையும், இலக்கிய வடிவத்திலான பெண் அடக்கு முறையை வெளிப்படுத்துவதையும், பலகாலமாக ஒதுக்கப்பட்டு வந்த பெண்களுக்குப் புதிய இலக்கிய வரலாற்றில் இடம் பெற்றுத் தருவதையும் அடிப்படை நோக்கங்களாகக் கொண்டுள்ளது”[16]

என்கிறார். எலைன் ஷொவால்டர் பெண்ணியத் திறனாய்வு பற்றி முழுமையான விளக்கத்தைத் தருகிறார்.

> “பெண்ணியத் திறனாய்வு அல்லது பெண்ணிய வாசிப்பு பெண்கள் இலக்கியங்களில் காலந்தோறும் எவ்வாறு பிரதிநிதித்துவப்பட்டுள்ளனர். அவர்களது இன்றைய பிம்பம் என்ன? எவ்வாறு அவர்கள் தவறான ஆண்மையை நோக்குடன் பிரதிநிதித்துவப்படுகின்றனர்? அதில் எவ்வாறு ஒருவகை மாதிரிகளை காணமுடிகிறது? எனக்காண்பது”[17]

எனப் பெண்ணியத் திறனாய்வு செல்ல வேண்டிய பாதையைக் காட்டுகிறார்.

எலைன் ஷோவால்ட்ர் குறிப்பிடும் முதல்வகை பெண்ணியத்திறனாய்வாளர்கள் ஆண் எழுத்துக்கள் பற்றிய பெண்ணிய நிலைப்பாட்டை அறிவிப்பவர்களாக உள்ளனர்.

> “குறிப்பாக இவர்கள் ஆண் படைப்புக்களை வாசித்தறிந்து திறனாயும் போக்கினர்”[18]

என்று எலைன் ஷோவால்டர் குறிப்பிடுவதைப் போல ஆண் படைப்புகளையும் கருத்தில் கொள்ளும் பெண்ணியத் திறனாய்வாளராக இராஜம் கிருஷ்ணன் திகழ்கிறார்.

மீராஜெலன் எனும் பெண்ணியக் கோட்பாட்டாளர்

> “ஆண் பெண் வேறுபாடின்றி எல்லா படைப்புகளையும் பெண் பார்வை கொண்டு ஆராய்வதே சிறந்த திறனாய்வுப் போக்கு”[19]

என்று குறிப்பிடுகிறார்.

இலக்கியங்களுக்குள் இருக்கும் ஆண்களின் மேலாண்மைப் போக்கு மதிப்பிடப்படவேண்டும் என இராஜம் கிருஷ்ணன் கருதுகிறார்.

> “இதுகாறும் இலக்கிய விமர்சன நோக்குகள் அனைத்தும் ஓர் ஆணின் பார்வையில் ஆணாதிக்கச் சமுதாயம் விதித்த அளவுகோல்களைக் கொண்டு மதிப்பீடு செய்பவையாக இருந்திருக்கின்றன. பெண் என்ற நிலையில் இந்த விமரிசன நோக்கு முற்றிலும் வேறான தகவுகள் கொண்டு ஆய்வு செய்ய முற்படுகையில் புதிய மதிப்பீடுகளைக் கண்டெய்தலாம்”[20]

என்று இராஜம்கிருஷ்ணன் விளக்குவதற்கியைய அவரது எழுத்து ஆண் பிரதிகளின் மீதான பெண்ணின் மதிப்பீடாக அமைகிறது.

இராஜம்கிருஷ்ணனும் வேதகாலம் முதல் ஊடக காலம் வரையிலான பெண் பற்றிய இலக்கிய ஆசிரியர்கள் கருத்தையும், அதில் தனது பார்வை என்ன என்பதையும் தெளிவுபடுத்தி உள்ளார். ஆண் மைய நோக்கு இலக்கியங்களுக்குள் ஆழப்பதிந்து கிடப்பதனையும் வெளிக்கொணர்கிறார். இலக்கிய வரலாற்றடிப்படையிலோ, கால வரிசைப்படியோ இந்த ஆய்வை அவர் மேற்கொள்ளவில்லை. இலக்கியப் பரப்பில் ஆங்காங்கு தட்டுப்படும் ஒருசில மாதிரிகளை மட்டுமே ஆய்வுக்குட்படுத்துகிறார். அவற்றிலிருந்து இலக்கியம் பற்றிய பொது முடிவுகளுக்கு வருகிறார்.

இராஜம் கிருஷ்ணன் தமிழிலக்கியத்தில் நுண்மாண் நுழைபுலம் கொண்டவராக விளங்குவதை அவரது ஆய்வுக் கட்டுரைகளிலிருந்து அறிய முடிகிறது. தமிழ்ச்சமூகம் கொண்டாடி மகிழ்ந்த இலக்கியங்கள் அவை தோன்றிய காலத்தில் என்ன நோக்கத்துடன் இயற்றப்பட்டன

என்ற பார்வையில் நோக்காமல் பெண்ணிய எழுச்சி தோன்றிய மறுமலர்ச்சி காலத்தின் புரிதலோடு அவற்றை நோக்குவது இராஜம்கிருஷ்ணனின் திறனாய்வுப் போக்காகும். இராஜம்கிருஷ்ணன் பண்டைய இலக்கியம் முதல் இக்கால இலக்கியம் வரை பல்வேறு இலக்கியங்களைப் பெண்ணியத் திறனாய்வுக்குட்படுத்தியுள்ளார். அவை ஆய்வின் பொருளோடு வெவ்வேறு பதிவுகளில் இணைக்கப்பட்டுள்ளன. ‘இலக்கியத்தில் காணப்படும் ஆணாதிக்கச் சிந்தனைகளைத் தகர்த்தல்’ எனும் இப்பகுதியில் திருக்குறள், சிலப்பதிகாரம், பிரதாப முதலியார் சரித்திரம், பாரதியார் கவிதைகள், அக்கினிப் பிரவேசம் ஆகிய படைப்புகள் இராஜம்கிருஷ்ணனால் விமர்சிக்கப்படும் பாங்கு ஆராயப்பட்டுள்ளது.

### 3.3.4.1 திருக்குறள்

ஆணாதிக்கம் ஆளுகை செலுத்தும் இலக்கியம் பெண்ணுக்கெதிரான கருத்தியல்களை தமிழுலகுக்கு அறிமுகப்படுத்தியுள்ளன. அவற்றை அப்படியே ஏற்கும் மனப்போக்கும் தமிழில் உள்ளது. திருவள்ளுவரை ஒரு பெண்ணியவாதியாக அடையாளப்படுத்திச் சிறப்பிப்பவர்களும் தமிழ்த் திறனாய்வு உலகில் உள்ளனர். இராஜம்கிருஷ்ணன், இலக்கியம் பழமையானது என்பதற்காக அதனைக் கண்மூடித்தனமாக ஏற்கக்கூடியவரல்ல. இலக்கியத்திற்குள் பழமைத்தனம் இருந்தால் அதனை எவ்வித மறைவுமின்றி வெளிப்படுத்துகிறார். இவ்விடமே இராஜம் கிருஷ்ணனைப் பெண்ணியத் திறனாய்வாளராக ஏற்பதற்கான நியாயத்தை உருவாக்குகிறது.

உலகப்பொதுமறை எனப் போற்றப்படும் திருக்குறளை இராஜம் கிருஷ்ணன் பெண்ணியப் பார்வையில் நோக்குகிறார்.

> “திருக்குறளில் அறம் பொருள் இன்பம் ஆகிய முப்பால் சார்ந்த வாழ்நெறிகளை ஒருபெண் என்ற நிலையில் இருந்து கூர்ந்து கவனித்தால் அவை இருபாலரையும் சமமாகக் கருதிக் கூறப்பட்டிருக்கவில்லை என்பது

தெளிவாகிறது. ஆணின் மேம்பாட்டையும், வசதிகளையும் முந்நிலைப்படுத்துவதாகவே இருக்கின்றன. பெண் ஒரு மனிதப்பிறவியாகவே மதிக்கப்பட்டு இருக்கவில்லை"[21]

என வள்ளுவத்தின் மீது குற்றச்சாட்டை முன்வைக்கிறார். அவர் திருக்குறளில் கருத்து வேறுபாடு கொள்ளும் முதல் இடம் கடவுள் வாழ்த்துடன் தொடர்புடைய பெண்ணைப் பற்றியது. வள்ளுவரின் கடவுள் வாழ்த்து ஆண்-பெண் இருபாலருக்கும் பொதுவானதைப் போலத் தோற்றமளிக்கிறது. ஆனால் வாழ்க்கைத் துணை நலத்தில் பெண் வழிபட வேண்டிய கடவுள் பற்றிய வள்ளுவரின் சிந்தனை, பொதுவான கடவுள் வாழ்த்தினின்று மாறுபடுகிறது.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"[22]

என்ற பாடலில் பெண் தொழ வேண்டிய வாலறிவனும், அறவாளி அந்தணனும் தனக்குவமை இல்லாதானும், கணவனே என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது. இராஜம் கிருஷ்ணன் இக்கருத்தை நிராகரிக்கிறார்.

"நீ தெய்வம் தொழுவதை விடுத்து உனது கணவனையே தொழுது வந்தால் நீ "பெய்" என்று சொன்னாலே மழை பெய்யுமடி என்று ஒரு பொய்ப்பூவாரம் மென்மையாகச் சாத்தப்படுகிறது. இவளது அறிவற்ற முட்டாள்தனத்துக்கு ஒரு பட்டுப்போர்வை போர்த்தப்படுகிறது"[23]

எனத் திருக்குறள் கருத்தில் பெண்ணுக்கெதிரான சிந்தனை இருப்பதை இராஜம் கிருஷ்ணன் வெளிக்கொணர்கிறார்.

'வாழ்க்கைத் துணை நலம்' என்ற சொல் ஆண் - பெண் இருவருக்கும் பொருந்திச்செல்லாமல் பெண்ணுக்காக மட்டுமே பொருத்தமுறக் காட்டப்பட்டிருப்பதை இராஜம்கிருஷ்ணன் கண்டிக்கிறார். ஆணுக்கான வாழ்க்கைத் துணை பெண் என்றால், பெண்ணுக்கான வாழ்க்கைத்துணை ஆண் என்றாகிறது. ஆனால் ஒரு ஆண், பெண்ணுக்கு எத்தகைய வாழ்க்கைத் துணையாக இருக்க வேண்டும்

என்பதற்கான விதிகளை வள்ளுவர் வகுக்கத் தவறிவிட்டதாக இராஜம் கிருஷ்ணன் குற்றம் சாட்டுகிறார்.[24]

மேலும், வாழ்க்கைத் துணைக்கு இருக்கவேண்டிய தன்மைகளை வள்ளுவர் பத்துக் குறட்பாக்களில் பட்டியலிட்டும், ஒன்றில் கூட பெண்ணுக்குக் கல்வி வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தவில்லை என்பது இராஜம் கிருஷ்ணனுக்கு நெருடலாகத் தோன்றுகிறது.

### 3.3.4.2 சிலப்பதிகாரம்:

தமிழில் பண்டைய இலக்கியம் முதல் இன்றைய இலக்கியம் வரை பெண் தலைமைப் பாத்திரங்களுக்கு ஒரு பொதுப்பண்பு இருப்பதாக இராஜம் கிருஷ்ணன் குறிப்பிடுகிறார். 'கற்புநெறி தவறிய கணவன்களுக்காகவே பெண்கள் வாழ்க்கையை அர்ப்பணித்தல்' என்பதுவே அப்பொதுப் பண்பு ஆகும். சிலப்பதிகாரம் தொடங்கி வைத்த இப்பிற்போக்கு தற்கால நாவல்களில் கூட தொடர்வதாக அவர் கணிக்கிறார்.

> "கட்டிய மனைவியை விடுத்து வெளிமங்கையிடம் சொத்து சுகம் தொலைத்து எல்லாம் இழந்து பின் மனம் வருந்தித் திரும்ப வருபவனை எல்லாத் துன்பங்களிலிருந்தும் மீட்டு அவனில் கரையும் நாயகி வடிவங்களை அன்றைய கண்ணகியிலிருந்து கல்கியின் தியாகபூமி, லஷ்மியின் பெண்மனம் போன்ற பல கதைகளின் நாயகியர் வரை காணலாம். எல்லோருமே ஒரே மூலப்பொருட்களைக் கொண்ட வார்ப்புகள்தாம்"[25]

எனப் பெண் பற்றிய தவறான பார்வை நூற்றாண்டுகள் தாண்டியும் மாறாமலிருப்பது உணர்த்தப்படுகிறது. கண்ணகி தனது இடது பக்க மார்பகத்தைத் திருகி எறிந்து மதுரையை எரித்ததாகச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. இராஜம்கிருஷ்ணன் இதனை நாடகவியலாக அதீத செயலாகவே பார்க்கிறார்.

"பெண்மையின் தாய்மைக்குரிய அடையாளமான உறுப்பைத் திருகி எறிந்து சூளுரை செய்யும் இச்செயல் அபூர்வமானதாக அறிவுக்கும் பொருந்தாததாகவே தோன்றுகிறது"[26]

என யதார்த்தத்தை மீறிய கற்பனையாகக் கண்ணகியின் செயலை அடையாளப் படுத்துகிறார்.

### 3.3.4.3 பிரதாப முதலியார் சரித்திரம்

வேதநாயகம் பிள்ளை 1876-இல் எழுதிய பிரதாப முதலியார் சரித்திரமே தமிழின் முதல் நாவலாகக் கருதப்படுகிறது. தமிழ்ப் புதினத்தின் தந்தையாக வேதநாயகம் பிள்ளை போற்றப்படுகிறார். வேதநாயகம்பிள்ளை பெண்கல்வி, பெண்நலம், பெண் விடுதலை ஆகியவற்றைப் பேசிய முன்னோடிகளில் ஒருவராகத் தமிழ்ச் சிந்தனையாளர்களால் மதிப்பிடப்படுகின்றார்.

"வேதநாயகம்பிள்ளையின் பெருமை எல்லாம் எந்தவிதக் குற்றவுணர்வும் இல்லாமல் இதுதான் இயற்கை என்பதுபோலப் பெண்களை மிருகத்திலும் கேவலமாக நடத்திக் கொண்டிருந்த கொடூரமான ஓர் ஆணாதிக்கச் சூழலின் மேல் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்ச முயற்சி செய்து, ஆணின் அகத்திற்குள் குற்றவுணர்வுவைக் கட்டமைக்க முயன்ற முன்னோடி என்பதுதான்"[27]

இக்கருத்து வேதநாயகம் பிள்ளை பற்றிய க.பஞ்சாங்கத்தின் மதிப்பீடு ஆகும். இராஜம் கிருஷ்ணன் வேதநாயகம் பிள்ளையின் பெண் பற்றிய பார்வையை உயர்வானதாக மதிப்பிடவில்லை.

"முதல் நாவலை எழுதிய மாயூரம் வேதநாயகம்பிள்ளை, பெண் கல்வியை ஆணை மகிழ்விப்பதற்கான நோக்கிலேயே நியாயப்படுத்துகிறார்"[28]

என்பதாக வேதநாயகம் பற்றிய இராஜம் கிருஷ்ணனின் புரிதல் வெளிப்படுகிறது. இராஜமய்யரின் கமலாம்பாள் சரித்திரம், பெண்மீது வில்லி, அறிவிலி, வம்பி, பிள்ளைபெறாதவள், கணவனுக்கு நஞ்சூட்டுபவள் ஆகிய பிம்பங்களைக் கட்டமைப்பதாக அவர் கருதுகிறார்.[29]

#### 3.3.4.4 பாரதியார் கவிதைகள்

பெண் விடுதலைக்குத் தீவிரமாகக் குரல் கொடுத்தவர் பாரதி.

"பெண்விடுதலை வேண்டும்"[30]

என்றும்,

"பெண் விடுதலைக்கு மகளிரெல்லோரும்
வேட்கை கொண்டனம், வெல்லுவம்"[31]

என்றும் பெண் விடுதலை பேசியவன் பாரதி ஆவார்.

"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச்செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர் திறம்புவதில் லையாம்"[32]

எனப் புதுமைப் பெண்ணைப் படைத்துக் காட்டியவர் பாரதி. பாரதியின் சிறப்புக்களை பல்வேறு இடங்களில் இராஜம்கிருஷ்ணன் எடுத்துக் காட்டியுள்ளார். ஆணெழுத்திலுள்ள பெண்ணுக்குச் சார்பான விஷயங்களை எடுத்தாளும் பெண்ணியத் திறனாய்வாக இதனைக் கருத முடியும். அதே நேரம் பெண்ணுக்கெதிரான பாரதியின் வரிகளை பிறிதோரிடத்தில் விமர்சிக்கவும் தவறவில்லை. "காதலொருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்து'' என்ற பாரதியின் வரிகளை இராஜம் கிருஷ்ணனால் வரவேற்க முடியவில்லை.

"இத்தகைய அருங்கவிஞரையும் பழைய மனையறக் கூட்டின் ஊறிப்போன பரம்பரை வாசனை விட்டுவிடவில்லை. எத்தனையோ புதுமைகளை எடுத்தியம்பிய பாரதி ஆணையும் பொறுப்பேற்கச் செய்யும் புதிய மனையறம் ஒன்றைக் குறிப்பிடவில்லை.

> “காதலொருவனைக் கைப்பிடித்து அவன் காரியம்யாவினும் கைகொடுத்து” என்றுதான் அந்த வாசனையை மாறாமல் பரிமளிக்கச் செய்கிறார்”[33]

எனப் பாரதியிடம் காணப்படும் பழமையின் சாயலையும் எடுத்துக் காட்டுகிறார்.

### 3.3.4.5 அக்கினிப் பிரவேசம்

ஜெயகாந்தனின் அக்கினிப் பிரவேசமும் அதனைத் தொடர்ந்த புனைகதைகளும் பெயர் சொல்லப்படாமல் இராஜம்கிருஷ்ணனின் தாக்குதலுக்குள்ளாகின்றன. நடுத்தரவர்க்க எதார்த்தத்துக்கு எதிரான கதையாக இக்கதையை அவர் பார்க்கிறார். அக்கதையின் தலைவன் ‘பலாத்கார நாயகன்’ என்ற அடைமொழியுடன் அழைக்கப்படுகிறான். தன்னைக் குலைத்தவனோடு நட்பு பாராட்டுதலில் பழமையான மரபுச் சிந்தனை மட்டுமே மிஞ்சியிருப்பதாகவும் இராஜம் கிருஷ்ணன் கருதுகிறார். கதையின் அடிக்கருத்தும் அவரது விமர்சனத்துக்குள்ளாகிறது.

> “இக்கதையில் காட்டப்படும் செய்தி எந்த ஒரு இடைநிலைக் குடும்ப மரபுப் பின்னணிப் பெண்ணும் நெறி பிறழ்ந்து வாழலாம் என்பதுதான். இதற்காகவே இவள் குலைக்கப்படுகிறாள்”[34]

என்று விமர்சகர்கள் கொண்டாடிய கதையைப் பெண்ணியத் திறனாய்வு செய்கிறார்.

### 3.3.5. பெண் படைப்பாளிகளின் இலக்கியப் படைப்புகளை ஆராய்தல்

பெண்ணிய ஆய்வானது பெண்ணியத் திறனாய்வு (Feminist Criticism) 2)பெண்மையத்திறனாய்வு (Gynocentric Criticism) என்னும் இரண்டு வகைகளைக் கொண்டது. பெண்ணியத் திறனாய்வு ஆண், பெண் இருபாலினத்தார் எழுதிய படைப்புகளையும் பெண்ணிய நோக்கில் ஆராய்வதாகும். ஆனால் பெண்மையத் திறனாய்வு

என்பது பெண் படைப்பாளிகளின் படைப்பைப் பெண்ணிய நோக்கில் பெண்கள் ஆய்வதாகும். பெண்மையத் திறனாய்வுக் கோட்பாடு கீழ்க்காணும் தன்மைகளில் இயங்குகிறது.

- உடற்கூறு அடிப்படையில் படைப்பின் தன்மை வேறுபாடு அமைவதை உணர்த்துதல்
- பெண்களுக்கான படைப்பு மொழியின் வெளியீட்டு ஆற்றலை வெளிக்கொணர்தல்
- ஆணாதிக்கப் போக்கைத் தன்னுள் கொண்ட ஃப்ராய்டியத்தை விடுத்துப் பெண்ணுக்கே உரித்தான தனித்த உளவியல் தன்மைகளை அடையாளங்காட்டுதல்
- பெண் படைப்புகளைப் பண்பாட்டியல் அடிப்படையில் நோக்குதல்

ஆகிய முறைகளில் பெண்ணியத் திறனாய்வு செயல்படுகிறது.

பெண் மையத் திறானய்வுக் குறித்து இரா.செல்வி குறிப்பிடும் போது,

> "பெண் படைப்பாளிகளின் படைப்புகளில் காணலாகும் தனித்துவத்தையும் ஆக்கப்பூர்வமான கருத்துக்களையும் வெளிப்படுத்தும் நோக்கத்தின் அடிப்படையில்தான் பெண் மையத் திறனாய்வு மேற்கொள்ளப்படுகிறது"[35]

என்று விளக்குகிறார்.

இராஜம் கிருஷ்ணன் 'கவிக்குரல்கள்' என்ற கட்டுரையிலும், 'நாயகரைப் பாடிப்பரவிய நாயகியர்' என்ற கட்டுரையிலும், பெண் படைப்பாளிகளின் படைப்புகளை ஆய்வுக்குட்படுத்துகிறார்.

பெண் சார்ந்த எக்கருத்தைப் பேசினாலும் வேதகாலத்தில் தொடங்கிப் பேசும் போக்கை உடையவராக இராஜம் கிருஷ்ணன் திகழ்கிறார். வேதகாலப் பெண் கவிஞர்கள் இயற்றிய பாடல்கள் பற்றிய அவரது குறிப்புகள் முன்னர் தரப்பட்டுள்ளன. சங்க காலப் பெண்பாற்புலவர்களில் அள்ளூர் நன்முல்லையார், இளவையினார், ஒக்கூர்மாசாத்தியார், ஔவையார், காக்கைப்பாடினியார், நச்செள்ளையார், காவற்பெண்டு, பாரிமகளிர், பூங்கண் உத்திரையார், பூதப்பாண்டியன் தேவி, பெருங்கோப்பெண்டு, பெருங்கோழி நாய்கன்

மகள், நக்கண்ணையார், பேய்மகள் இளவெயினியார், மாறோக்கத்து நப்பசலையார், வெண்ணிக் குயத்தியார், வெறியாடிய காமக்கண்ணியார் ஆகிய சங்கப் புலவர்களின் பெயர்களை எடுத்தாள்கிறார். சங்கப் பெண்பாற் புலவர்களில் வேட்டுவர் குலம், குயவர் குலம் போன்ற உயர்குடியைச் சாராதவர்களின் கவிதை இயற்றுதல் திறனை இராஜம்கிருஷ்ணன் மெச்சிப் புகழ்கிறார். சங்கப் பெண்பாற்புலவர்களின் முக்கியப் பாடுபொருள்களாக மன்னர், வீரர், கொடை ஆகியவை இருப்பதாகக் குறிப்பிடுகிறார். "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" எனக் கற்புக்குப் புதிய விளக்கமளித்த பிற்கால ஔவை "பேதைமை என்பது மாதர்க்கணிகலம்" என்றும் "தையல் சொல் கேளேல்" என்றும் கூறியிருப்பது இடைச்செருகலாக இருக்கலாம் என்ற ஐயத்தை இராஜம் கிருஷ்ணன் எழுப்புகிறார்'[36]

பக்தி இலக்கியப் படைப்பாளிகளான காரைக்காலம்மையார், ஆண்டாள் ஆகியோரது படைப்புகளையும் இராஜம் கிருஷ்ணன் ஆய்ந்துள்ளார். காரைக்காலம்மையார் எனும் புனிதவதியின் கதையை எடுத்துக்கூறி

> "பூமியில் ஓராடவனுக்கு திருமண விதிப்படி உரிமையான பிறகு அந்தப் பெண் ஆண்டவனுக்கும் கூடத்தின் உடலை உரிமையாக்க முடியாது என்ற கற்பியல் மிக அழுத்தமாக இந்த வரலாற்றில் அறிவுறுத்தப்படுகிறது"[37]

என்று கருத்துரைக்கிறார்.

காரைக்காலம்மையார் பாடல்களில் சிவபெருமானோடு ஒன்றிக் களிப்பதான இலட்சிய முனைப்பும், அந்த வெற்றியும் தவிர வேறு உலகியல் சிந்தனைகளோ, வாழ்க்கை பற்றிய குறிப்போ இல்லை என்ற விமர்சனத்தையும் இராஜம் கிருஷ்ணன் முன்வைக்கிறார்.

இராஜம் கிருஷ்ணன் பெண் எழுத்தாளர்களை ஆராயும் போது அவற்றின் உள்ளடக்கத்தில் பெண் என்பதற்காக ஆழ்ந்து மூழ்கி விடவில்லை. பெண் எழுத்து பெண்ணையோ, சமூகத்தையோ,

முற்போக்கையோ கொண்டிராத போது அதனை விமர்சனத் தராசுத் தட்டில் நிறுத்துகிறார்.

ஆண்டாளின் கவிதைகளும் ஆசிரியரின் ஆய்வுக்குட்பட்டுள்ளன. ஆண்டாள் துளசிச் செடியின் நடுவே கண்டெடுக்கப்பட்டதற்குப் பின்னால் ஆணின் அரசியல் இருப்பதாக இராஜம்கிருஷ்ணன் கருதுகிறார். ஆண்டாளின் வரலாறு புராண மரபுகளில் புதைந்து போயிருப்பதாகக் கருதுகிறார். ஆண்டாளின் பிறப்பு பற்றிய உண்மை திருஅவதாரம் என்ற மருமத்தில் மறைக்கப்பட்டிருப்பதாகவும் கூறுகிறார்.[38]

ஆண்டாளின் நாச்சியார் திருமொழி உயர்ந்த வைணவ இலக்கியப் பெட்டகமாகப் போற்றப்பட்டு வருகிறது. நாயக - நாயகி பாவத்தில் எழுதப்பட்ட ஆன்மீக எழுத்தாகவே அது கருதப்படுகிறது. இராஜம் கிருஷ்ணன் நாச்சியார் திருமொழி “கற்பனையின் பாவனையில் மலர்ந்த உயிர்ச் சொல்லோவியம்” என உயர்வாக மதிப்பிடுகிறார். ஆண்டாளின் உணர்வுகளைப் பெண்ணியப் பார்வையில் நோக்குகிறார்.

> “இவளுடைய தாபங்கள் “மானுடர்க்கென்று பேச்சுப்படில் வாழ்கிலேன் கண்டாய் மன்மதனே” என்ற வரியில் ஓர் அழுத்த நிலையின் உச்சத்தில் வெடித்துக் கொட்டும் உணர்வுகளாகவே வெளியாகின்றன”[39]

என ஆண்டாளின் இலக்கியப் பிரதிகளை அடக்கப்பட்ட பெண் மனதின் விரக வேதனைகளாக மதிப்பிடுகிறார். மீரா, அக்கமாதேவி போன்ற வேற்று மொழி பெண் கவிஞர்களது எழுத்தும் இராஜம் கிருஷ்ணனால் ஆராயப்பட்டுள்ளன.

### 3.3.6. பண்பாட்டு விழுமியங்களைக் கேள்விக்குட்படுத்துதல்

பெண்ணியத் திறனாய்வு மரபார்ந்த பண்பாட்டு விழுமியங்களைக் கேள்விக்குட்படுத்துகிறது. தமிழ்ச்சமூகம், கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றின் முக்கியப் பொறுப்பைப் பெண்ணுக்கு வழங்கியுள்ளது. ஒழுக்கநெறிகள் பெண்ணுக்குத்தான் முக்கியமாக வலியுறுத்தப்படுகின்றன. நாட்டார் கதைகள், பழமொழிகள், இலக்கியங்கள், சமய அறங்கள் அனைத்திலும் பெண்ணுக்கான

தூயவாழ்வு கட்டமைக்கப்பட்டன. ஆணுக்குரிய சட்டங்கள் வளைந்து கொடுக்கும் நெகிழ்ச்சித் தன்மையோடும், பெண்ணுக்குரிய சட்டங்கள் கடுமையான இறுக்கத் தன்மையோடும் அமைந்துள்ளன. ஒழுக்க விதிகளைத் தாண்டும் பெண் சீர்குலைந்தவளாகவும், அருவருப்பானவளாகவும் பார்க்கப்படுகிறாள். பெண்ணைக் கட்டுப்படுத்த ஆண் பல்வேறு மிகப்பெரிய பண்பாட்டு விழுமியங்களை வகுத்துள்ளான்.

ஒரு சமூகம் சமநிலையில் இயங்கவேண்டுமானால் விதிமுறைகள் ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானதாக அமையவேண்டும். ஆனால் ஒழுக்க விதிமுறைகள் பெண்களை நோக்கியே பேசப்படுகின்றன. ஆண் நிமிர்ந்து நிற்க வேண்டும். பெண் அச்சப்பட வேண்டும். ஆண் வீரமானவன். பெண் மடமைத்தன்மையுடையவள். ஆண் அறிவுமிக்கவன். பெண் பேதைமைத் தன்மையுடையவள். ஆணுக்கு நாணம் தேவையில்லை. பெண் நாணத்தோடு வாழவேண்டும். ஆண் அதிகாரம் செய்ய வேண்டும். பெண் அடங்கிச் செல்லவேண்டும் என்ற மனநிலையையே இலக்கியங்கள் மனிதனுக்குள் உருவாக்கியிருக்கின்றன.

பண்பாட்டைச் சீராக நடத்திச் செல்லும் கட்டுப்பாடு ஆண் - பெண் இருபாலருக்கும் உரியது. ஆனால் பண்பாட்டு ஒருங்கமைதியின் பெரும் பொறுப்பு பெண் மீதே சுமத்தப்படுகிறது. அவளது ஆடை, அணிகலன், கற்பு, பண்பு, அடக்கம், மென்மை, அமைதி, தியாகம் விருந்துபசரிப்பு, மக்கள் நலம் பேணுதல் ஆகியவற்றில் பெண்ணுக்கான பங்களிப்பு மிகுதியாக எதிர்பார்க்கப்படுகிறது. அவள் கலாச்சாரத்தைத் தாங்கி நிற்கும் தூணாக ஆக்கப்படுகிறாள். கலாச்சாரம் மற்றும் பண்பாட்டில் ஆணின் தந்திரம் அடங்கியிருப்பதை இராஜம் கிருஷ்ணன் வெளிக்கொணர்கிறார்.

> “இந்தக் கலாச்சாரம் என்பது பெண்ணின் சுதந்திர உணர்வுகளை விலங்கியல் உணர்வுகள் என்று முத்திரையிட்டு அவளுடைய ஆளுமை அழிவுக்கே

வழிவகுக்கும் என்று கற்பித்து , அவள் எந்த நிலையிலும் ஓர் ஆணின் ஆளுமைக்குள் இருப்பதற்குரியவள் என்று நியாயம் காண்பதாகவே விளக்கமாகிறது"[40]

பண்பாட்டுக்கும் ஆடவனுக்கும் தொடர்பேதும் இல்லாத இன்றைய எதார்த்தத்தை இராஜம்கிருஷ்ணன் சுட்டுகிறார். மேலும் அவர் பண்பாடு குறித்த பல்வேறு வினாக்களையும் தொடுக்கிறார்.

"பெண் சேலை உடுத்துவது பண்பாடா? பெண்ணின் பூவும் பொட்டும் மங்களக் கோலமும் பண்பாட்டுச் சின்னங்களா? எத்தகைய குரூரமான கணவனானாலும் கொடுமைகளைப் பொறுத்து அவனையே தெய்வமாக வழிபட்டு நிற்பதுதான் இந்தியப் பண்பாடா? பண்பாடு என்ற ஒரு நாகரிகமே பெண்ணை மட்டும் மையமாகக் கொண்டிருக்கிறதா? விருந்தினர் வரும்போது கை குவித்து வணங்கி சந்தனம் குங்குமம் அளித்து, 'இந்தியக் கலாச்சாரம்' என்று பெண்ணையே உபசரிப்பு நங்கையராக்குவது பண்பாடா?[41]

என்ற வினாக்களில் ஆண் கட்டமைத்த பண்பாடு கேள்விக்குட் படுத்தப்படுகிறது. இராஜம் கிருஷ்ணன் அச்சம், மடம், நாணம், அடக்கம், கற்பு ஆகிய பண்பு நலன்கள் பெண்ணுக்கென்று மட்டுமே கட்டமைக்கப்பட்டிருப்பதைக் கண்டிக்கிறார்.

### 3.3.6.1 அச்சம், மடம், நாணம்

தொல்காப்பியம், பெண்களுக்கு வேண்டிய பண்பு நலன்களாக அச்சம், மடம், நாணம் ஆகியவற்றை வரையறுத்துள்ளது.

"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய"[42]

என்கிறார் தொல்காப்பியர். நச்சினார்க்கினியர் நாண் என்பதற்கு செய்யத் தகாதவற்றின்கண் உள்ளம் ஒடுங்குதல் என்றும், மடம் என்பதற்கு கொளுத்ததுக் கொண்டு கொண்டது விடாமை என்றும் பொருள் கற்பிக்கிறார். அச்சம், மடம், நாணம் ஆகிய பண்புகளிலிருந்து

ஆணுக்கு விதிவிலக்களிக்கப்படுகிறது. இராஜம்கிருஷ்ணன் இத்தகைய ஆணாதிக்கச் சிந்தனைகளை நிராகரிக்கிறார்.

### 3.3.6.2 அடக்கம்

அடக்கம் என்னும் பண்பைத் திருவள்ளுவர் இருபாலினத்தார்க்கும் பொதுவாக வைத்தாலும், குடும்ப அமைப்பில் அடக்கம், பொறுமை என்பவை பெண்ணுக்குரிய பண்புகளாகவே வலியுறுத்தப்படுகின்றன. பெண்ணின் வாழ்வு பிறரால் திணிக்கப்படும் வாழ்வாக அமைவதை இராஜம் கிருஷ்ணன் எடுத்துக் காட்டுகிறார்.

> "பெண் பொறுக்க வேண்டும், சுமக்க வேண்டும் அவள் எழும்பலாகாது. சிறுமையே அவளுடைய திறமைகளுக்கு அளிக்கப்படும் பரிசு என்று அடங்கிப் போக வேண்டும். அவள் தான் மனிதப்பிறவி என்று உணரச் செய்யாத வகையில் அவள் மீது மரபுகள் திணிக்கப்படுகின்றன"[43]

என்று மரபுகள் பெண்ணுக்கு இழைத்த அநீதியைச் சுட்டிக் காட்டுகிறார்.

### 3.3.6.3 கற்புக்கோட்பாட்டை ஆய்ந்து விமர்சித்தல்

கற்பு எனும் சொல் பெரும்பான்மையும் ஆணோடு இணைத்துப் பார்க்கப்படுவதில்லை. பெண்ணுக்கான வாழ்வு நெறியாகவே அது பார்க்கப்பட்டு வருகிறது. பெண்ணியவாதிகள், ஆணுக்குத் தேவையற்றதாகவும் பெண்ணுக்குத் தேவையானதாகவும் சொல்லப்படும் கற்புக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்வதில்லை. பெண்ணியத் திறனாய்வு ஆதி இலக்கியங்களில் தொடங்கி, தற்காலம் வரையிலான படைப்புகள் வரை பெண்ணுக்கென்று வரையறுக்கப்பட்டிருக்கும் கற்புக் கோட்பாட்டை மறுபார்வை செய்கிறது. கற்புக் கோட்பாட்டுக்குள் இருக்கும் ஆண் அரசியலை வெளிக்கொணர்கிறது. பெண்ணுக்கு மட்டுமே எனக் கட்டமைக்கப்படும் அறங்களை உதறித்தள்ளுகிறது. இராஜம் கிருஷ்ணனும் கற்புக்கோட்பாடு பற்றிய தனது புதிய பார்வையை வெளிப்படுத்துகிறார்.

இராஜம் கிருஷ்ணன் கற்புக் கோட்பாட்டை கீழ்க்காணும் முறைகளில் ஆராய்ந்து விமர்சிக்கின்றார்.

3.3.6.3.1. கற்பு எனும் சொல்லாட்சி பற்றிய ஆய்வு

3.3.6.3.2. கற்பு நெறி தோன்றியமைக்கான காரண ஆய்வு

3.3.6.3.3. தொல்காப்பியரின் கற்புக் கோட்பாடு பற்றிய ஆய்வு

3.3.6.3.4. தொன்மங்களிலுள்ள கற்புக்கோட்பாட்டாய்வு

3.3.6.3.5. ஊடகங்கள் காட்டும் கற்புக்கோட்பாட்டாய்வு

3.3.6.3.6. கற்புக் கோட்பாடு மீதான விமர்சனம்

ஆகியவற்றை முன்வைக்கிறார்.

## 3.3.6.3.1. கற்பு எனும் சொல்லாட்சி பற்றிய ஆய்வு

கற்பு என்னும் சொல்லாட்சி நேரடியாகப் பெண்ணின் ஒழுக்கத்தோடு தொடர்புபடுத்திப் பார்க்கப்படுகிறது. ஆனால் கற்பு எனும் சொல் ஒற்றைப் பொருள் கொண்டதல்ல. அதன் பல்வேறு அருஞ்சொற்பொருள்களை இராஜம் கிருஷ்ணன் அடுக்கிச் செல்கிறார்.

> "கற்பு என்ற சொல்லுக்கு சங்கற்பம், தியானம், சரண்புகல், ஆணை, வேலைப்பாடு, சல்லை என்றெல்லாம் பொருள் இருக்கிறது"[44]

என்று ஆறு பொருள்களை கற்பு என்ற சொல்லின் மீது அடுக்கி வைக்கிறார். கணவனைத் தெய்வமாக மதித்து, அவன் எத்தகையவனாக இருந்தாலும் தன்னை அவனுக்கே உரித்தாக்கும் ஒழுக்கத்தில் இருந்து சிறிதும் வழுவாமல், மனைவி கடைப்பிடிக்க வேண்டிய பண்பு என்னும் மரபார்ந்த கருத்தை இராஜம் கிருஷ்ணன் மறுக்கிறார்.

### 3.3.6.3.2. கற்பு நெறி தோன்றியமைக்கான காரண ஆய்வு

கற்பு நெறி தோன்றியமைக்கான காரணத்தையும், அவர் கண்டறிந்து விளக்குகிறார்.

> "பெண் நிலையான மன உறுதி இல்லாதவள். அவள் உணர்ச்சி வசப்படக்கூடியவள். இதனால் அவள் மாற்றாரைச் சேர்ந்து அவர்களுக்கு மக்களைப் பெற்றுத்தர வழிமாறிப் போகலாம் என்ற காரணத்தை நிலை இருத்தி அவளைப் பிணித்து வைக்க இந்த நெறியைத் தோற்றுவித்திருக்கலாம்"[45]

என்று இராஜம்கிருஷ்ணன் கருதுகிறார்.

மாற்றாரின் சொத்தாகத் தனது மனைவி மாறிவிடக்கூடாது, தனது உடைமையாக அவள் இருக்க வேண்டும் என்ற ஆணாதிக்க உடைமைச் சிந்தனையே கற்பு நெறியின் ஆதாரமாக இருப்பதாக அவர் நினைவூட்டுகிறார். தந்தை வழி வாரிசு உரிமையை நிலைப்படுத்திக் கொள்ள மகளிரைக் கற்பு எனும் நெறி கொண்டு பிணித்திருப்பதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[46]

### 3.3.6.3.3. தொல்காப்பியரின் கற்புக் கோட்பாட்டாய்வு

தொல்காப்பியர் கற்புடைய பெண்டிரை மூவகைப்படுத்துகிறார். மூதானந்தம், புறங்காடு, தாபதநிலை என்பவையே அம்மூன்று வகைகள். கணவன் இறந்தான் என்று கேட்டதும் உயிரை விடும் மனைவி 'மூதானந்தம்' என்னும் உயரிய கற்புநிலைக்கு உரியவள். கணவனுடன் உடன்கட்டையேறும் பெண் 'புறங்காடு' என்னும் இரண்டாம் நிலைக்குரியவள். அணிகலன் களைந்து ஒருநாளைக்கொருமுறை சாத்விக உணவு கொண்டு தவநெறி பற்றி ஒழுகும் பெண்ணின் துறவுநிலை 'தாபதநிலை' எனும் மூன்றாம் வகை கற்பு ஆகும்.[47]

தொல்காப்பியத்தில் கற்பியல் என்ற தனி இயல் வகுக்கப்பட்டுள்ளது. தலைவன் பரத்தையரிடம் சென்றாலும் தலைவி

கற்பு நிலையில் மாறாமல் வாழவேண்டும் எனத் தொல்காப்பியம் வலியுறுத்துகிறது.[48]

பரத்தையிடம் கோபம் இருந்தாலும் தலைவி தலைவன் எதிரே அந்தக் கோபத்தை வெளிக்காட்டாமல் பரத்தையைப் புகழும்படி அறிவுறுத்தப்படுகிறாள்.[49]

இராஜம்கிருஷ்ணன் கற்புக் கோட்பாடு மகளிரை ஒடுக்க வந்த நெறி என்கிறார்.

### 3.3.6.3.4. **சங்க இலக்கியத்தில் கற்புக் கோட்பாடு பற்றிய ஆய்வு**

தமிழிலக்கியங்கள் கற்பு எனும் பண்பாட்டு விழுமியத்துக்கு அதிக முக்கியத்துவம் வழங்கியுள்ளன.

"முல்லை சான்ற கற்பின் மெல்லியல்"

எனச் சிறுபாணாற்றுப்படையும்.

"அருந்ததி அனைய கற்பிற்
குரும்பை மணிப்பூ புதல்வன் தாயே"

என ஐங்குறுநூறும் கற்பு பற்றிப் பேசுகின்றன.

இராஜம் கிருஷ்ணன் சங்க இலக்கியக் காலத்திலேயே ஆரிய சமுதாயத்தின் தாக்கம் இங்கே படிந்து விட்டதோ என்று ஐயுறுகிறார்.[50]

### 3.3.6.3.5. **தொன்மங்களிலுள்ள கற்புக்கோட்பாட்டாய்வு**

கற்புடன் வாழ்வதற்கான பயனையும் கற்பு மீறினால் பெறப்படும் தண்டனையையும் தொன்மக்கதைகள் வழி இராஜம் கிருஷ்ணன் எடுத்துக்காட்டுகிறார். கற்புநெறி தவறினால் பெண் கல்லாவாள் என்ற செய்தியை அகலிகை கதை உணர்த்துகிறது. கற்புடன் வாழ்ந்தால் அருந்ததி போல் விண்ணில் நட்சத்திரமாகலாம் என்பதைத் தொன்மங்கள் உணர்த்துகின்றன.

### 3.3.6.3.6. ஊடகங்கள் காட்டும் கற்புக்கோட்பாட்டாய்வு

வன்புணர்வுக்கு உள்ளான பெண் காலம் முழுவதும் தன்னை வன்புணர்வு செய்தவனோடு வாழவேண்டும் என்ற தண்டனையைத் தமிழ்ச்சமூகம் வழங்கிப் பெண்ணை அவமானப்படுத்துகிறது. திரைப்படங்களில் மிகுந்து வரும் இப்போக்கையும் இராஜம் கிருஷ்ணன் எடுத்துக் காட்டுகிறார். அவர் ஊடகங்களில் கற்புக்குக் கொடுக்கும் முக்கியத்துவம் பற்றிப் பேசும் போது,

> "தமிழ்ப்படங்கள், பத்திரிக்கைக் கதைகள், தொலைக்காட்சித் தொடர்கள், கற்பு - தாலி என்ற கொள்கையைப் பெண்ணுக்கு மட்டும் உயிரைக் காட்டிலும் அரிதானவை என்று விடாமல் அறிவுறுத்திக் கொண்டிருக்கின்றன"[51]

என்கிறார் தமிழ்க்கற்பியல் கொள்கையை அவர் 'ஒரு பக்கக் கற்பியல் கொள்கை'யாகப் பார்க்கிறார். கற்புக் கோட்பாடானது இலக்கியங்களிலிருந்து ஊடகம் வரை தொடர்வதை இராஜம்கிருஷ்ணன் எடுத்துக் காட்டுவதற்கான காரணம் கற்பின்மையை ஆதரித்தல்ல, ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான கற்புக்கோட்பாடு உருவாக்கப்பட வேண்டும் என்பதற்காகவே மேற்காட்டிய விமர்சனங்களை முன்வைத்துள்ளார்.

### 3.3.6.3.7. கற்புக் கோட்பாடு மீதான விமர்சனம்

இராஜம் கிருஷ்ணன் இலக்கியம், இலக்கணம் புராணம் ஆகியவற்றில் வலியுறுத்தப்படும் கற்புக் கோட்பாட்டை ஆய்ந்து அதற்கெதிரான தனது நிலைப்பாட்டை அறிவிக்கிறார்.

> "இத்தகைய புனைவுகள் காலம் காலமாக மகளிர் வாழ்வில் இயல்பான சுதந்திரங்களின் இறக்கைகளை வளர விடாமல் பிய்த்துப் போட்டுக் கொண்டிருக்கின்றன"[52]

எனக் கற்பையும், சுதந்திரத்தையும் எதிர் எதிர் பக்கங்களில் இராஜம் கிருஷ்ணன் நிறுத்துகிறார். கற்புக் கோட்பாடு காலங்காலமாய்

இம்மண்ணில் நிலைபெற்று மகளிரின் மனித உரிமைகளைக் கட்டுப்படுத்தி வருவதாக இராஜம் கிருஷ்ணன் குறிப்பிடுகிறார்.

> "கற்புநெறி என்பது நூற்றாண்டுகள் மனித சமுதாயத்தின் உயிரோட்டமான இழைகளை ஊடுருவி மகளிரின் மனித உரிமைகளைப் பிணிப்பது தெரியாமல் பிணிக்கச் செய்த வரலாறுகள் இவை"[53]

எனத் தமிழ்ப்பெண்களின் வாழ்வைப் பிணித்திருக்கும் கற்புக் கோட்பாட்டின் பலவீனத்தை வெளிப்படுத்துகிறார். கற்பு நெறியைப் பண்பாட்டு வளர்ச்சிக்கான கொள்கையாகப் பார்க்கும் வழக்கமான போக்கில் இருந்து வேறுபடுகிறார். இராஜம்கிருஷ்ணன் பண்பாட்டு வளர்ச்சியை விட பெண்ணியின் வளர்ச்சியை அவர் முக்கியப்படுத்துகிறார். பெண்ணின் வளர்ச்சிக்கு இக்கற்புக் கோட்பாடு தடையாவதை உணர்த்துகிறார்.

> "கற்புநெறி பெண்ணின் எல்லா வளர்ச்சிகளையும் தடை செய்யும் வண்ணம் இறுக்கமாவதைப் பார்க்கிறோம்"[70]

எனக் கற்புக் கோட்பாட்டுக்கு எதிர்நிலையில் நின்று இராஜம்கிருஷ்ணன் பேசுகிறார்

### 3.3.7. பெண் சக்தியை ஒன்றிணைத்தல்

பெண் தன் பிரச்சனைகளுக்கான தீர்வுகளுக்காக ஆண்களிடம் இரந்து நிற்க வேண்டிய அவசியம் இல்லை. தனக்கான தீர்வைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்வதுதான் முறையானது. ஆதிக்கத்திலும் சுகத்திலும், சுதந்திரத்திலும் மிதக்கும் ஆணிடமிருந்து சுதந்திரத்தை அல்லது தீர்வைப் பெறுவது என்பது சாத்தியப்பாடுடையதல்ல. வெண்டி மார்ட்டின் என்னும் பெண்ணியக் கோட்பாட்டாளர்

> "ஆண்களின் சார்பின்றி தனக்கென தன் முகத்தைத் தேடிக் கண்டுபிடித்து நிலை நாட்டிக் கொண்ட ஒருபெண்ணை முன்னிறுத்த வேண்டும்"[55]

எனப் பெண்ணியப் படைப்பாளர்களுக்கு வலியுறுத்துகிறார்.

பெண் எழுத்தின் முக்கிய நோக்குகளில் ஒன்று பெண்களை ஓரினமாக ஒன்றிணைப்பது ஆகும். இன்றைய ஊடகங்கள் பெண்களைக் கொச்சைப்படுத்துவதைப் பட்டிமண்டபம் முதல் கருத்தரங்கம் வரை அனைத்து இலக்கிய மேடைகளும் வெளிக்கொணர்ந்து கொண்டிருக்கின்றன. ஊடகங்கள் பற்றிய விமர்சனங்களைப் பல்வேறு இடங்களில் முன்வைக்கும் இராஜம் கிருஷ்ணன் பெண்களுக்கான தீர்வையும் ஊடகங்கள் வழி ஒன்றிணைதலைப் பிரச்சனைகளுக்கான தீர்வாகக் காட்டுகிறார்.

> "பெண்மைச் சக்திகள் இப்போதுள்ள புதிய மக்கள் தொடர்பு சாதனங்கள் வாயிலாகவே பேராற்றலாக இணைந்து சமுதாய மீட்சிக்கான தடங்களை அமைக்கும்"[56]

என நம்பிக்கை தெரிவிக்கிறார்.

இராஜம் கிருஷ்ணன் பெண்சிசுக் கொலை, பாலியல் வன்முறை, ஆண்சிசு பிறக்க வலியுறுத்தல், வரதட்சணை, இம்சைக் கலாச்சாரம், கைம்பெண் துயர், குடும்ப வன்முறை போன்ற பெண் சார்ந்த சமூகப் பிரச்சனைகள் பற்றி அதிக அக்கறையுடன் பேசுகிறார். பெண் பிரச்சினைகளைத் தாண்டி விடுதலை பெற முடியாமைக்குப் பெண்களின் ஒருங்கிணைப்பு இன்மையே காரணம் என்கிறார்.

> "பெண்கள் எப்போதுமே ஒன்று சேர்ந்து ஒரு முடிவை எடுத்ததாக வரலாறே கிடையாதே. அதுதானே இத்தகைய அதிகாரங்களுக்கு ஊக்கமளிக்கும் சக்தியே"[57]

எனப் பெண்ணின் ஒன்றிணைந்த ஆக்கப்பூர்வமான செயல்பாடுகளின் தேவையை வலியுறுத்துகிறார். சமூகப் பிரச்சினைகள் பற்றி அதிக அக்கறையுடன் பேசுகிறார். பெண் பிரச்சினைகளைத் தாண்டி விடுதலை பெற முடியாமைக்குப் பெண்களின் ஒருங்கிணைப்பு இன்மையே காரணம் என்கிறார்.

"பெண் தன்னைப் பிணைக்கும் கட்டுகளைத் தகர்த்தெறிய அதன் மூலம் அதன் ஆதாரம் எங்கே என்று கண்டு கொள்ள வேண்டும். பிறகு அதைத் தானே தகர்த்தெறிய ஆற்றல் பெறவேண்டும். இவள் எழும்பினாலே பிணைக்கும் சக்திகள் ஆட்டம் கண்டு விடும்"[58]

எனப் பெண் மையச் சிக்கல்களுக்கான காரணங்களை அறிந்து அவற்றைத் தகர்ப்பதைத் தீர்வாக அறிவுறுத்துகிறார்.

இவ்வியலில் பெண்ணியத் திறனாய்வு பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. பெண்ணியத் திறனாய்வின் நோக்கங்கள் சொல்லப்பட்டுள்ளன. இராஜம் கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வுப் போக்கானது பல்வேறு தலைப்புகளில் ஆராயப்பட்டுள்ளன. தாய்வழிச் சமூகச் சிறப்பும், தந்தை ஆதிக்கச் சமூக இழிவும் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன. வேதகாலத்தில் பெண்கள் பெற்றிருந்த உரிமைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. இலக்கியங்களில் காணப்படும் பெண்ணுக்கெதிரான சிந்தனைப் போக்குகள் விமர்சிக்கப்படுகின்றன. பெண்கள் படைத்தளித்த இலக்கியங்கள் பற்றிய இராஜம் கிருஷ்ணனின் பார்வையும் காட்டப்பட்டுள்ளது. தொன்மங்களில் ஊடாடிக்கிடக்கும் ஆண் மையப் புனைவுகள் மறுபார்வை செய்யப்பட்டுள்ளன. பண்பாட்டு விழுமியங்கள் மறுபார்வை செய்யப்பட்டுளன. குடும்பத்திலும் சமூகத்திலும் பெண் எதிர்க்கொள்ளும் சிக்கல்கள் இராஜம் கிருஷ்ணனின் திறனாய்வு நூல்கள் வழி வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

## சான்றெண்விளக்கம்

1. இரா.பிரேமா, பெண்ணியம், ப.89
2. தேவதத்தா கமலி, பெண்ணியகலைச் சொல் விளக்கக்கையேடு, பக்.26-27
3. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.84
4. இராஜம்கிருஷ்ணன், காலந்தோறும் பெண், ப.95
5. மேலது, ப.109
6. மேலது, ப.10
7. மேலது, ப.11
8. மேலது, ப.12
9. மேலது, ப.13
10. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.12
11. இராஜம்கிருஷ்ணன், இந்திய சமுதாயம், ப.80
12. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.15
13. இராஜம்கிருஷ்ணன், காலந்தோறும் பெண், ப.34
14. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.8
15. க.பஞ்சாங்கம், புனைவுகளும் உண்மைகளும், ப.7
16. இரா.பிரேமா, இலக்கியத்திறனாய்வு, ப.87
17. இரா.காஞ்சனா, பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் மொழியும், பக்.9.10
18. இரா.பிரேமா, பெண்ணியம், ப.91
19. மேலது, ப.92
20. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.81
21. இராஜம்கிருஷ்ணன்-, காலந்தோறும் பெண், ப.2
22. திருவள்ளுவர், திருக்குறள், குறள்: 55
23. மேலது, ப.3
24. மேலது, ப.2
25. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.129
26. இராஜம்கிருஷ்ணன், இந்திய சமுதாயம், ப.81
27. க.பஞ்சாங்கம், புனைவுகளும் உண்மைகளும், ப.118

28. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.83
29. மேலது, ப.83
30. சுப்பிரமணிய பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.178
31. மேலது, ப.206
32. மேலது, ப.202
33. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.152
34. மேலது, ப.136
35. இரா.செல்வி, பெண்மையச்சிந்தனைகள், ப.33
36. இராஜம்கிருஷ்ணன், இந்திய சமுதாயம், ப.85
37. மேலது, ப.95
38. மேலது, ப.99
39. மேலது, ப.101
40. மேலது, ப.48
41. மேலது, ப.107
42. தொல். பொருள், களவியல், ப.79
43. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.39
44. மேலது, ப.24
45. மேலது, ப.27
46. மேலது, ப.27
47. இளம்பூரணர் (உ.ஆ) தொல்காப்பியம், பொருள், நூற்பா.77
48. மேலது, ப.147
49. மேலது, ப.331
50. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.99
51. மேலது, ப.32
52. மேலது, ப.31
53. மேலது, ப.70
54. மேலது, ப.27
55. இரா.காஞ்சனா, பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண்மொழியும், ப.18
56. இராஜம்கிருஷ்ணன், பெண்விடுதலை, ப.78
57. மேலது, ப.174
58. மேலது, ப.179

# இயல் - 4

# குடும்பச்சிக்கல்கள்

மங்கையராகப் பிறப்பதற்கு மாதவம் செய்ய வேண்டுமென இலக்கியங்கள் பெருமைப்பட்டுக் கொண்டாலும், நிஜவாழ்க்கை பெண்ணுக்குக் கசப்பையே வழங்கிக் கொண்டிருக்கிறது. பெண்ணின் உடலமைப்பு ஆணின் உடலமைப்பைப் போன்று மகிழ்ச்சிக்குரிய ஏதுக்களைக் கொண்டதாக அமையாமல் பல்வேறு வலிகளுக்கான மூலங்களை உட்கொண்டுள்ளது. பூப்படைதல், மாதவிடாய், கருவுறுதல், கருசுமத்தல், குழந்தைப்பேறு ஆகிய அனைத்திலும் சிக்கல் நிறைந்த உயிரியாகப் பெண்ணை இயற்கை உருவாக்கி வைத்துள்ளது. இயற்கை கேள்விக்கப்பாற்பட்டது என்பதாலும், தீர்வுக்கு அப்பாற்பட்டது என்பதாலும் அதன் மீது குற்றம் சுமத்த முடியாது. இயற்கையின் விதிக்குட்பட்டு பெண் வாழ்க்கை வாழ்ந்து முடிக்க வேண்டியுள்ளது. ஆனால், ஆணால் உருவாக்கப்பட்ட பெண் அடிமைத்தனங்கள் மாற்றத்திற்கான சாத்தியப்பாடுகளைக் கொண்டவை. விஞ்ஞான உலகத்தில் கருவிலிருக்கும் போதே பெண் கரு மீதான சமூகத்தின் அதிருப்தி கவிந்து விடுகிறது. பெண் குழந்தை மனிதப் பிறவியாகி மண்ணுக்கு வந்தபின் மிகுதியான சிக்கல்களைச் சந்திக்க நேரிடுகிறது. ‘தான் ஒரு பெண்’ எனும் தன்னுணர்வு எப்போதும் அவள் முன் சுமையாக அழுத்திக் கொண்டிருக்கிறது. வீடு, திருமணம் குடும்பம், சமூகம், சாதி, மதம், கலை, பண்பாடு சட்டம், ஊடகம் என அனைத்திலும் பெண் ஆணின் விதிக்குட்பட்டு வாழும் வினோத உயிரியாக உருமாற்றப்பட்ட அவலம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. சமுதாயத்திற்குள்ளும், குடும்பத்திற்குள்ளும் தான் விரும்பும் வாழ்க்கையை பெண்ணால் வாழ இயலவில்லை. ஆண் விரும்பும் வேடத்தைப் புனையும் நிலை பெண் மீது திணிக்கப்படுகிறது.

பகுத்தறிவுக் கோட்பாடுகள் விஞ்ஞான வளர்ச்சி, கல்வி மேம்பாடு, பெண் அரசியல், மகளிர் இயக்கங்கள், பெண்ணியம் போன்ற பெண்ணுக்குச் சாதகமான அம்சங்கள் பெண் பற்றிய புதிய

புரிதல்களைச் சமூகத்தில் உருவாக்கின. பெண்ணியமானது ஆணாதிக்கத்தை அடித்தளமாகக் கொண்டு கட்டியெழுப்பப்பட்ட அனைத்துக் கருத்துக் கட்டுமானங்களையும் உடைத்றெிந்தது புதிய மதிப்பீடுகளையும் உருவாக்கியது. பெண் மீது திணிக்கப்பட்ட பிற்போக்குப் படிமங்களை மறுபரிசீலனை செய்தது. கடைக்கோடி முதல் கடவுளின் உலகம் வரையிலான அனைத்துப் பக்கங்களிலும் பெண்ணை மீட்டெடுக்கும் பொறுப்பைப் பெண்ணியம் முன்னின்று செய்தது. காலங்காலமாகப் பெண் மேல் படிந்த ஆணாதிக்கத்தின் அழுக்குகளை அகற்றி தூய்மை செய்யும் புனிதப் பணியைப் பெண்ணியம் மேற்கொண்டது. பெண் என்பவள் ஆணின் அடக்குமுறைக்குள் அடங்கிக் கிடக்கும் பரிதாபத்துக்குரிய உயிரி என்பதைப் பெண்ணுக்கு உணர்த்துவதே விழிப்புணர்வின் முதற்படியாக அமைந்தது. இராஜம் கிருஷ்ணனின் நாவல்கள் மற்றும் சிறுகதைகள் ஆணாதிக்கச் சூழலில் சிக்கித் தவிக்கும் பெண்ணின் வடிவை வெளிக்கொணர்கின்றன. இதனால் இப்பிரதிகளுக்குள் பெண்ணின் பல்வேறு சிக்கல்களும் முகம் காட்டுகின்றன. இவ்வியல் இராஜம்கிருஷ்ணனின் புனைகதைளில் வெளிப்படுத்தப்படும் பெண் சார்ந்த சிக்கல்களை ஆராய்கிறது. இராஜம் கிருஷ்ணனின் சித்திரிப்பு அடிப்படையில் பெண் சந்திக்கும் சிக்கல்களைக் கீழ்க்கண்டவாறு பகுத்துக் கொள்ளலாம்.

4.1. திருமணத்துக்கு முன் பெண் சந்திக்கும் சிக்கல்கள்

4.2 திருமணத்துக்குப்பின் குடும்பத்துக்குள் பெண் சந்திக்கும் சிக்கல்கள்

என்பனவாகும்.

## 4.1. **திருமணத்துக்கு முன் பெண் சந்திக்கும் சிக்கல்கள்**

பெண் பிறப்பிலிருந்தே சிக்கல்களோடுதான் வாழும் நிலை உள்ளது.

> “ஆணாதிக்கம் நிறைந்த உலகில் தந்தை ஆதிக்கத்தால் உருவாக்கப்பட்ட சமுதாயத்தில், பெண்ணின் வாழ்க்கை முறையானது சிதறடிக்கப்பட்டு விடுகிறது. பெண்ணின் வாழ்க்கையானது அவளது உளநிலையில் தங்கியிராது

> புறநிலைகளின் மேல் தங்கி விடுகிறது. இதனால் அவள் ஆளுமையும் மனநிலையும் உடைக்கப்பட்டு அவள் உலகை வேறு ஒருவரின் கண்களின் மூலம் பார்க்கத்தலைப்படுகிறாள்"[1]

என்று சிமொன் -தி-பவார் எனும் பெண்ணியவாதி குறிப்பிடுவது முற்றிலும் பெண் பற்றிய உண்மையை வெளிப்படுத்துகிறது. பிறக்கும் குழந்தையெல்லாம் ஆணாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படும் சமூகம், பெண்ணே இல்லாத உலகத்தின் பயங்கரம் குறித்துச் சிந்திப்பதில்லை. ஒவ்வொரு குழந்தை பிறப்பு குறித்தும் கேட்டறியும் உறவுகள், பெண்ணின் பிறப்பு பற்றிய அதிர்ச்சியை மட்டும் வெளிப்படுத்தத் தவறாத நிலை உள்ளது. கிராமங்களில் வாழும் அடித்தட்டு மக்கள் பெண் குழந்தை பிறப்பதை வேதனையோடு எதிர் கொள்ளுகிறார்கள். ஆண் குழந்தைகள் வளர்ந்து பெற்றோரைக் கவனிக்காத நிலையே பெரும்பான்மையும் நிலவி வந்தாலும், ஆண் குழந்தை பெற்றெடுக்கவே பெற்றோர்கள் பேரார்வம் காட்டுகின்றனர். பிறக்கும் குழந்தையின் பாலியல் அடையாளத்தைத் தீர்மானிக்கும் உரிமையை இயற்கை பெற்றோர்கள் கையில் வழங்காததால் மட்டும் பெண் உயிரினத் தொடர்ச்சி நிகழ்வதாகக் கருத முடிகிறது. பெண் கருவை அழித்தல், பெண் சிசுக்கொலை போன்ற சமூகக் குற்றங்கள் பெண்பாலின உற்பத்தியின் எண்ணிக்கையைக் குறைப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன. பெண் குழந்தை உலகுக்கு வந்தபின் அதன் வளர்ப்பு முறை மற்றும் சமூக எதிர்பார்ப்புக் காரணமாக தனது சுய ஆளுமையை முற்றிலும் இழந்து விடுகிறது. பருவம் எய்திய பெண்ணின் காலமும், புழங்குவெளியும் கடுமையான கட்டுப்பாட்டுக்குள் சுருக்கப்படுகின்றன. ஆணுடன் பழகும் உரிமை மறுக்கப்படுகிறது. திருமணம் என்ற அமைப்பில் நுழைய, பெண்ணின் எதிர்பார்ப்புகள் கேட்டறியப்படாத கொடுமையும் பரவலாக இருந்து வருகிறது. இராஜம் கிருஷ்ணனின் புனைகதைகளில் குழந்தைப் பருவம் முதல் திருமணம் வரை பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. திருமணத்துக்கு முன் பெண்கள் சந்திக்கும் சிக்கல்களாகக் கீழ்க்காணுபவற்றைக் குறிக்க முடிகிறது.

4.1.1. பெண் குழந்தை பிறப்புக்கு வரவேற்பின்மை
4.1.2. பெண்ணாகப் பிறப்பதால் வரும் சிக்கல்கள்
4.1.3. வளர்ப்பு முறை வேறுபாடு
4.1.4. சாதனைகள் புகழப்படாமை
4.1.5. முதிர் கன்னிகள் இகழப்படுதல்
4.1.6. ஆணுடன் பழகும் உரிமையின்மை
4.1.7. காதலிக்கும் உரிமையின்மை
4.1.8. சுதந்திரமின்மை
4.1.9. காலம் கட்டுப்படுத்தப்படுதல்
4.1.10. புழங்குவெளி சுருக்கப்படுதல்
4.1.11. வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமையின்மை
4.1.12. கருப்புநிறப் பெண் புறக்கணிக்கப்படுதல்

ஆகிய சிக்கல்களை எதிர்கொள்ளும் பெண்கள் பற்றிய சித்திரிப்பை இராஜம் கிருஷ்ணன் கதைகள் வழங்குகின்றன.

### 4.1.1. பெண் குழந்தை பிறப்புக்கு வரவேற்பின்மை

பெண் குழந்தை உலகுக்கு வந்து சேர்ந்ததுமே சிக்கல்களைச் சந்திக்கத் தொடங்கி விடுகிறது. ஆணின் பிறப்பு கொண்டாடப்படுவதைப் போலப் பெண்ணின் பிறப்புக் கொண்டாடப்படுவதில்லை. பெண் குழந்தை பிறப்பு ஆண்களால் மட்டுமின்றி பெண்களாலும் இழிவுபடுத்தப்படுகின்றது. பெண் குழந்தையின் பிறப்பு வரவேற்கப்படாமைக்குக் கணேசலிங்கன் கீழ்க்காணும் காரணத்தைச் சுட்டுகிறார்.

> "பெண் குழந்தையாகக் குடும்பத்தில் பிறந்ததுமே வேண்டாத உருவம் ஒன்று குடும்பத்தில் வந்து விட்டதாகவே குடும்பத்தவர் அனைவரும் கருதிக் கொள்கின்றனர். அன்றே வேண்டாத பெரிய பொறுப்பு ஒன்று வீட்டுக்குள் புகுந்து விட்டதாகவும், குடும்பத்தில் எண்ணிக் கொள்ளுகின்றனர். பெற்ற தாயே அவ்வாறு கருதும் கேவல நிலைக்குச் சமூக அமைப்பு இறங்கி விட்டது"[2]

எனச்சமூக இழிநிலை படம் பிடித்துக் காட்டப்படுகிறது.

பெண்குழந்தை பிறந்ததும் உறவுகளால் கீழ்க்காணும் நிலைகளில் கொச்சைப்படுத்தப்படுகின்றன.

4.1.1.1. செலவு எனக் கருதப்படுதல்

4.1.1.2. வசை மொழிகளால் தாக்கப்படுதல்

ஆகிய சிக்கல்களைக் காணமுடிகிறது.

### 4.1.1.1. செலவு எனக் கருதப்படுதல்

ஆண் வளர்ந்த பின்னர் வரதட்சணை வாங்கிப் பொருளாதார உயர்வுக்கு வழிவகுப்பதால் அவன் வரவாகக் கருதப்படுகிறான். பெண் வரதட்சணை கொடுத்து செல்வத்தைப் பெயர்த்துச் செல்வதால் செலவாகக் கருதப்படுகிறாள். ஆண் கல்வி கற்றல், வேலைக்குச் செல்லுதல், பொருளீட்டுதல் ஆகியவற்றொடு தொடர்புபடுத்திப் பார்க்கப்படுவதால் அவன் வரவாகக் கருதப்படுகிறான். பெண் வீட்டுக்குள் இருந்து உணவு உட்கொண்டு, அணிகலன்கள் அணிந்து இறுதியில் வேறொரு வீட்டுக்குப் பெயர்ந்து செல்வதாகக் கணக்குப்போடும் சமூக வக்கிரமே அவளைச் செலவு என்ற சொல்லாடலால் அவமதிக்கக் காரணமாகிறது.

'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவலில் வரும் வெள்ளைச்சாமி குடும்பக்கட்டுப்பாட்டு அறுவை சிகிச்சை செய்து கொண்டபோது அவனது மனைவி ஆண் குழந்தை இல்லாத நேரத்தில் இப்படிச் செய்தமைக்காகப் பெரிதும் வருந்தினாள். அவளுக்கு ஏற்கனவே பெண் குழந்தை இருந்தும், ஆண் குழந்தை இல்லாததால் அவள் கலங்கநேர்ந்தது. இந்நாவலில் அழகாயி தனது மூன்று பெண் குழந்தைகளையும் சுரண்டிச் செல்லும் சுமைகள் என்றும், வரவில்லாத செலவுகள் என்றும் இன்னோரிடத்தில் கூறுகிறாள்.[3]

### 4.1.1.2. வசை மொழிகளால் தாக்கப்படுதல்

பெண் குழந்தையின் செவிப்புலன் செயல்படுவதற்கு முன்னரே ஆணின் மொழி அவளுக்கெதிரான இழிசொற்களை காற்றில் மிதக்க விடுகிறது. பெண் குழந்தை என்ற அழகிய சொல் ‘பொட்டச்சி’ ‘பொடடப்புள்ள’ என்பதாக அருவருப்பாய் உருத்திரிகிறது. விலங்குகளின் பெயர்களோடும், ஆபாசச் சொற்களோடும் பெண் எனும் பெயர்ச்சொல் இணைத்துக் காட்டப்படுகிறது.

அழகாயி இவளுக்கு மட்டுமின்றி, அவள் மகள் பூவுக்கும் ஆண் குழந்தை பிறக்க வேண்டும் என்று ஆசைப்பட்டது கதையின் பிற்பகுதியில் கூறப்பட்டுள்ளது. பூவுக்குப் பெண் குழந்தை பிறந்தபோது அதைச் சனியன் எனச் சின்னாயி சொல்லுகிறாள்.[4]

‘கோடுகளும் கோலங்களும்’ நாவலில் வரும் சின்னம்மா கருவுற்றிருக்கும் போது கணவனை இழந்து விடுகிறாள். பிறந்த குழந்தை ஆணாக இருக்க வேண்டும் என உறவுக்காரர்கள் விரும்பினார்கள். ஆனால் பிறந்தது ஒரு பெண் குழந்தை. பெண் குழந்தை பிறந்ததும் அக்குழந்தையும், அதன் தாயும் பல்வேறு இழிமொழிகளால் தாக்கப்படுகின்றனர். முட்டைக்கண்ணும் கூரில்லாத மூக்குமான நோஞ்சான் பெண் குழந்தைக்கு உறவுகளிடம் எவ்வித வரவேற்பும் இல்லை. குழந்தை ‘பொட்டை’ எனும் சொல்லால் தாக்கப்படுகிறது.

> “புருசன்தா போனா. ஆம்பிளப்புள்ளையைப் பெத்துக்கக் கூடாதா? பொட்டை? இது இன்னும் என்ன பேரக்கொண்டு வருமோ என்று இடித்தார்கள்”[5]

ஆண் குழந்தையைப் பெற்றெடுக்காதவளுக்கு சுற்றம் வழங்கும் அவமரியாதைகளுக்குக்கான சான்று இது.

பெண் குழந்தைகள் மொழியைக் கற்றுக் கொள்ளும் முன்பே மொழியிலுள்ள தடித்த சொற்களால் அவமானப்படுத்தப்படும் அவலத்தை இந்நிகழ்வு கண்முன் கொண்டு வருகிறது.

### 4.1.2. பெண்ணாகப் பிறப்பதால் வரும் சிக்கல்கள்

உடலியல் சார்ந்தும், குழந்தைப்பேறு சார்ந்தும் ஏற்படும் சுமைகள் பெண்ணுக்கு மட்டுமே இயற்கையால் வழங்கப்பட்டுள்ளன. ஆணின் தவறுகளை உடல் அடையாளங்கள் வெளிச்சம் போட்டுக் காட்டுவதில்லை. பெண்ணின் தவறுகளை உடல் வெளிக்காட்டி விடுகிறது. ‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவல் பெண்ணாகப் பிறந்தாலே துன்பம்தான் என்கிறது.

“பொம்பிளயாய் பெறந்தாலே, நொம்பரந்தே..
ஆம்பிளக்கென்ன? செமக்கிறதும், தும்பப்படுகிறதும்,
நெஞ்சு நோக, கண்ணு பூக்க, அதுங்களப் பாக்குறதும்,
ஆம்பிளக்கி என்ன இருக்கு?”[6]

என ஆண் சுமைகளற்றவனாகவும், பெண் சுமை சுமப்பவளாகவும் காட்டப்படுகின்றனர்.

இயற்கை பெண்ணுக்கு வழங்கும் சுமைகள் இயல்பானவை என்றால் சமூகம் வழங்கும் சுமைகள் செயற்கையானவை. இவை தாழ்வு மனப்பான்மையை பெண்ணிடம் உருவாக்கி விடுவதை இராஜம் கிருஷ்ணனின் நாவல்கள் புலப்படுத்துகின்றன.

இராஜம் கிருஷ்ணனின் கதாப்பாத்திரங்கள் பெண்ணுக்கு மாத்திரம் வழங்கப்பட்டுள்ள குழந்தைப் பேற்றுச் சுமையைக் கேள்வி கேட்கின்றன. ‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவலில் வரும் அழகாயி ஆண் குழந்தைகளை ஆண்களும், பெண் குழந்தைகளைப் பெண்களும் பெற்றெடுக்க வேண்டும் என்று இயற்கையை அமைக்காத இறைவனைப் பாரபட்சமானவன் எனக் குற்றம் சாட்டுகிறாள்.[7]

### 4.1.3. வளர்ப்பு முறை வேறுபாடு

ஆணும், பெண்ணும் பிறப்பால் உடலியல் கூறுகளில் வேறுபட்டவர்களே தவிர மன அளவில் வேறுபாடுகளற்றவர்கள். ஆனால் வளர்ப்புமுறை, ஆணுக்கு ஒருவகைப்பட்டதாகவும், பெண்ணுக்கு மற்றொரு வகைப்பட்டதாகவும் அமைந்துள்ளது. ஆண்

வன்மையானவனாகவும், பெண் மென்மையானவளாகவும் வளர்க்கப்படுகின்றனர். ஆண் புறத்துக்குரியவனாகவும் பெண் வீட்டுக்குரியவளாகவும் வார்த்தெடுக்கப்படுகின்றனர். ஆணுக்கு வீரம் வேண்டும் என்றும் பெண்ணுக்கு அச்சம் வேண்டும் என்றும் சிறுவயது முதலே கற்பிக்கப்படுகிறது.

ஒரு பெண் பெண்ணாகப் பிறப்பதில்லை, பெண்ணாக உருவாக்கப்படுகிறாள் என்று பெண்ணியம் கருதுகிறது.

ஆண் பெண் வளர்ப்புமுறை வேறுபாட்டுச் சிக்கல்களைக் கீழ்க்காணுமாறு பகுத்துக் கொள்ளலாம்.

4.1.3.1. உணவு வேறுபாடு

4.1.3.2. வேலைப்பழு வேறுபாடு

4.1.3.3. மதிப்பு வேறுபாடு

ஆகியவற்றில் ஆண் - பெண் வளர்ப்பு முறை வேறுபடுகிறது.

## 4.1.3.1. உணவு வேறுபாடு

ஆண் குழந்தைக்கு ஊட்டச்சத்துக்கள் அதிகமாக வழங்கப்படவேண்டும் என்று கருதும் சமூகம், பெண் குழந்தைக்கு அதே பராமரிப்பு முறையைக் கொள்வதில்லை. ஆண் உழைக்கப்பிறந்தவன் என்று கருதி அவனுக்குத் தரமான உணவு வழங்க சமூகம் முன்வருகிறது. பெண் வீட்டுக்குள் இருப்பவள் என்ற மனநிலையின் காரணமாக அவளை ஓரங்கட்டுகிறது. பெண் குழந்தை வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச்சத்துக்களை வழங்காமல் தனது எதிர்ப்பைக் காட்டுகிறது. 'கோடுகளும் கோலங்களும்' நாவலில் சின்னம்மாளுக்குத் தாய்ப்பால் இல்லாத நேரம் அப்பெண் குழ்நதைகளுக்குப் பசும்பால் கொடுக்க முயன்றபோது செவந்தியின் அம்மாவிடமிருந்து கடும் எதிர்ப்பு வந்தது. படித்து வரும் ஆண் குழந்தைக்குத்தான் பால் கொடுக்கப்படவேண்டும் என்றும், பெண்குழந்தைக்குக் கஞ்சி காய்த்துக் கொடுக்கும் படியும் சின்னம்மா அறிவுறுத்தப்படுகிறாள்.[8]

### 4.1.3.2. வேலைப்பழு வேறுபாடு

வீட்டுவேலைகள் அக்காவிடமும் தங்கையிடமும் மட்டுமே திணிக்கப்படுகின்றன. அண்ணனும், தம்பியும் சமையலில் உண்பதைத் தவிர எந்த உதவியும் செய்வதில்லை. விளக்குமாறுகளோ, அகப்பைகளோ, பாத்திரங்களோ ஆண் குழந்தைகள் கையில் வேலைக்கென கொடுக்கப்படுவதில்லை. இவ்வகை வளர்ப்பு ஆணை ஊர் சுற்றியாகவும், பொறுப்பற்றவனாகவும் மாற்றி விடுகிறது. 'கூடுகள்' நாவலில் வரும் கனகா இதற்கெதிராகக் கேள்வி தொடுக்கிறாள்.

> "நான் சுதந்திரமாக இருக்கக்கூடாது வினு சுதந்திரமாக இருக்கக்கூடாது. ஆனால் பையன்களை உயர்வாகவே மதிக்கிறார்கள் இந்த மூடத்தாய்மார். சேகர் என்றேனும் தட்டு கூடக் கழுவுவதில்லை. கடைசாமான் வாங்கி வருவதில்லை. மாவு அரைக்கச் செல்வதில்லை. அம்மாவுக்கு உடல்நிலை சரியாக இல்லை என்றாலும், அன்றைக்குப் பள்ளிக்கூடம் இருந்தாலும் அடுப்படியைக் கனகாதான் பார்க்க வேண்டும். அவன் ஆண்பிள்ளை, இப்படி ஒரு மனப்பான்மையே புழுக்கடிபோல் பெண்ணின் நல்வளர்ச்சியைப் பாதிக்கிறது."[9]

என ஆண் சமூகம் குடும்பப் பொறுப்புகளில் அங்கம் வகிக்காமல் கட்டற்றுத் திரிவது கண்டிக்கப்படுகிறது. இதில் வீட்டுவேலைக்கென்றே அர்ப்பணிக்கப்பட்டு பிறப்பெடுத்தவளாக உருமாற்றப்படும் பெண் வளர்ப்பு முறைக்கோளாறு குத்திக்காட்டப்படுகின்றது.

'விலங்குகள்' நாவலும் இதே வளர்ப்பு முறையில் கடைப்பிடிக்கப்படும் இரண்டு அணுகுமுறைகள் பற்றிப் பேசுகிறது. ஆண் பழு எதனையும் சுமக்க வேண்டியதில்லை என்றும், பெண் மட்டும் வீட்டுக்குள் பாரம் சுமக்க வேண்டும் என்றும் எழுதப்படாத சட்டங்களில் குழந்தைகள் வளர்க்கப்பட வேண்டியுள்ளது என்பது நாவல் தரும் செய்தியாகும்.

"ஒத்த வயசுடைய குழந்தைகளாக இருந்தாலும் ஆணுக்கு ஒருவகை பெண்ணுக்கு ஒருவகை. அருணாவும் ரமணியும் தண்ணீர் இறைக்கின்றனர். பாத்திரம் கழுவி துணிமடித்து உதவி செய்கின்றனர். சோமுவுக்கும் சுந்தரத்துக்கும் ஒருவேலை கிடையாது"[10]

என வேலை செய்தலில் இரண்டுவகை பாலினத்தாரும் வேறுபாடு காட்டப்படுவது பற்றி நாவல் சிந்திக்கிறது.

### 4.1.3.3. மதிப்பு வேறுபாடு

ஆண் குழந்தைகள் வீட்டில் அதகிகமாக மதிக்கப்படுகின்றன. ஆண் குழந்தைகள் அதிகபாசமுடன் வளர்க்கப்படுகின்றன. இப்படி ஆணைக் கொண்டாடுவதில் பயனேதும் விளையப்போவதில்லை என 'நிழற்கோலம்' ரேவதி உறுதிபடப் பேசுகிறாள். ரேவதி வீட்டில் அவளையும் சேர்த்து மூன்று பெண் குழந்தைகள், இவர்கள் நடுவே ஒரே ஒரு ஆண் குழந்தையாகப் பாபு எனும் உடன் பிறப்பு இருந்தான். ஆண்பிள்ளை என்பதனால்அவனுக்கு மரியாதையும் பாசமும் மிகுதியாகக் கிடைத்தன. வெளிநாட்டுக்குச் சென்ற பாபு தன் பெற்றோரையோ சகோதரிகளையோ கவனிக்காமல் மறந்து போனான். தன் வாழ்வில் சகோதரனுக்கான முக்கியத்துவம் பயனற்றுப் போனதை, பொதுவான ஆண் பற்றிய உண்மையாக ரேவதி அறிவிக்கிறாள்.

"மூன்று பெண்களுக்கு நடுவில் ஒரு பிள்ளை, ஒரு பையன் என்று உயர்வை அவன்மீது ஏற்றிக் கொண்டாடினார்கள். அந்தப் பையன் உண்மையில் அவனை நம்பியுள்ள குடும்பத்தை நினைக்கிறானா?"[11]

என்று ரேவதி குடும்பப் பொறுப்பற்ற ஆண் குழந்தைகள் குறித்துக் கோபமாகப் பேசுகிறாள். ஒரு குடும்பத்துக்குத் தேவையான பணிகளைச் செய்தல், கடமைகளை நிறைவேற்றுதல், பொறுப்புகளைச் சுமத்தல், பெற்றோரைக் கவனித்தல், உடன்பிறந்தோரிடம் அன்பு செய்தல் ஆகியவற்றில் ஆண்கள் பெண்களை விடப் பின் தங்கியிருப்பதையும் ரேவதி கதாப்பாத்திரம் பேசுகிறது.

"பெண், பெண்தானே என்றெல்லாம் விஷநாவால் கொட்டிக் கொட்டி பெண்ணே பெண்ணை ஒன்றுக்கும் உதவாதவளாக ஆக்குகிறாள். இல்லையாடி? பையன் பையன் என்று சொல்லி பையன்கள் என்ன சாதிக்கிறார்கள்?"[12]

எனும் வினாவை எழுப்புகிறாள்.

இவ்வாறு ஆண்குழந்தையை வளர்ப்பதற்கும், பெண் குழந்தையை வளர்ப்பதற்கும் இரண்டு வகையான முறைகள் பின்பற்றப்படுவதை இராஜம்கிருஷ்ணனி கதாப்பாத்திரங்கள் கேள்விக்குட்படுத்துகின்றன. ஆணை மரியாதையாக நடத்தும் பெற்றோர்கள், ஆண்களால் பிற்காலத்தில் மரியாதையாக நடத்தப்படுவதில்லை என்ற உண்மையையும் இவை உணர்த்தி நிற்கின்றன. வளர்ப்பில் பெண்ணுக்கு அநீதி நிகழ்த்தப்பட்டாலும் அவள் பெற்றோரைப் பாதுகாப்பதில் அதிக அக்கறையுடன் செயல்படுவதையும் இப்பாத்திரங்கள் விளக்குகின்றன.

### 4.1.4. சாதனைகள் புகழப்படாமை

வீட்டிலும், வெளியிலும் ஆணின் சாதனைகள் தூக்கிப்பிடிக்கப்படுகின்றன. அவனது சாதனைகளுக்குரிய வரவேற்பும், பாராட்டும் காத்து நிற்கின்றன. பெண்கள் கல்வி, அறிவியல், விளையாட்டு, விஞ்ஞானம் என எத்துறையில் சாதனை நிகழ்த்தினாலும் அது ஆணின் சாதனையைப் போல் உரத்திப் பேசப்படுவதில்லை.

'சுழலில் மிதங்கும் தீபங்கள்' நாவலில் கிரிஜா செங்கல்பட்டு அருகே எந்த வசதியுமில்லாத ஒரு பள்ளியில் எட்டாண்டுகள் பணியாற்றி அப்பள்ளிக்கு நற்பெயர் ஈட்டிக் கொடுத்த சாதனை யாராலும் பாராட்டப்படவில்லை. வேலைப்பார்த்துக் கொண்டே எம்.ஏ. ஆங்கில இலக்கியம் பயின்றதை வீட்டுக்குள் யாரும் பாராட்ட முன்வரவில்லை. கிராமப்புறத்தில் வேலை பார்ப்பதை அவனது அண்ணன் விரும்பவில்லை. முதுகலை பயின்றமையால் மாப்பிள்ளை தேடுவது சிக்கல் நிறைந்ததாகி விட்டது என்று அவன் கூறுகின்றான்[13]

இவ்வாறு பெண்ணின் சாதனைகள் மழுங்கடிக்கப்படுவதை நாவல் எடுத்துக் காட்டுகிறது.

### 4.1.5. முதிர் கன்னிகள் இகழப்படுதல்

திருமண உறவுக்குள் நுழைவது என்பது பெண்ணுக்குச்சிக்கல் மிகுந்தது என்றால், திருமண பந்தத்துக்குள் நுழையாமலிருப்பதும் சிக்கலையே விழைவிக்கிறது. பருவம் எய்தியதிலிருந்தே அவளது திருமணத்தைச் சுற்றி பல்வேறு கேள்விகள் எழுப்பப்படுகின்றன. பாதுகாப்பு வளையமாகக் கருதப்படுகிற திருமணம் சூழலால் தள்ளிப்போகும் நிலையில் ஏதாவது ஒரு ஆடவன் அவளைக் குலைக்கும் ஆபத்தும் அருகிலேயே இருக்கிறது. தங்கத்தைச் சேமித்து வைக்காத பெண்ணுகளுக்குத் திருமணம் கைகூடாத நிலையும் தொடர்கிறது. பருவப்பெண்ணை வீட்டில் வைத்திருப்பது பழிச்சொற்களை சமூகத்திலிருந்து கொண்டு வந்து சேர்க்கிறது. திருமணத்துக்கு முந்தைய காலகட்டத்தில் பெண் மிகவும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டியுள்ளது. ஆண் எச்சிலைத் தின்று விட்டு சந்தனத்தைப் பூசிக்கொண்டு பெண்ணைக் குலைத்தாலும் அவனை உலகம் பழிப்பதில்லை. பெண்ணின் நிலை இதற்கு நேர்மாறானதாக உள்ளது. கடுகளவு சுகத்துக்கும் விலை கொடுத்தாக வேண்டிய நிலையில் பெண்ணின் வாழ்வு அமைந்துள்ளது. பெண் சிரிப்பது, பாடுவது, பூப்பது எல்லாமே சீக்கிரமாகக் கலைந்து விடுகின்றன[14] என்று ‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவல் உணர்த்துகின்றது.

### 4.1.6. ஆணுடன் பழகும் உரிமையின்மை

திருமணமாகாத பெண் ஒரு ஆடவனுடன் பேசிப்பழகுவதால் சமூகம் அதனைத் தவறான பார்வையிலேயே பார்க்கிறது. ஆடவனுடன் பேசுவதற்கும் பழகுவதற்குமான தடை பெண்ணுக்குத் திருமணம் நிகழ்ந்த பின்னும் மாறுவதில்லை. வேற்று ஆடவனுடன் பழகினால் அவள் பாலியல் உந்துதலுக்காட்படுவாள் எனச் சமூகம் நம்புகிறது. அவளது வயதை வைத்துக்கூட இதிலிருந்து

விலக்களிக்கப்படுவதில்லை. எந்த வயதானாலும் அவள் ஒழுக்கம் சார்ந்த ஐயங்களுக்குட்படுபவளாகவே நோக்கப்படுகிறாள். பிற ஆடவருடன் பேசுதல், பழகுதல், ஒன்றாக நடத்தல் ஆகியவை சமூகத்தின் கோணப் பார்வையால்தான் விகாரமாக்கப்படுவதாக இராஜம்கிருஷ்ணன் விளக்கியுரைக்கிறார்.

பிற ஆணுடன் பழகுவதால் திருமணமான பெண் சந்திக்கும் சிக்கலைவிட பருவப்பெண் சந்திக்கும் சிக்கல் அதிகமானது. பருவப் பெண்ணின் அருகில் ஓர் ஆடவன் இருப்பானேயாகில் அவளது மொழிசார்ந்த தொடர்பியல் உரிமைகள் மறுக்கப்படுகின்றன அல்லது கட்டுப்படுத்தப்படுகின்றன. ஏற்புடையவை, தவிர்க்கப்பட வேண்டியவை என்பன சமூகத்தால் தீர்மானிக்கப்படுகின்றன. பெண்ணின் கருத்து வெளிப்பாடு மீது சமூகத்தின் அதிகாரம் மேலேறிச் செல்கிறது. ‘மாயச்சுழல்’ நாவலில் வரும் யசோதை மணமாகாத காலகட்டத்தில் ஒருநாள் தனித்திருக்கும்போது நடராஜன் இயல்பாகப் பேச முயல்வதை அவளால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதற்கான காரணம் அவளது சுயம் சார்ந்ததாக அமையாமல் சூழல் சார்ந்ததாகவே அமைந்தது.

> “ஒரு பருவமடைந்த பெண் இளைஞன் ஒருவனுடன் தனித்துப் பேசுவதே தவறு என்று அபிப்பிராயம் ஊறிய மக்களிடையே வளர்ந்திருந்த அவளுக்கு அவன் அத்தகைய விதமாக வார்த்தையாடியதில் தவறு இருந்ததாகப் பட்டதில் வியப்பில்லை”[15]

எனப் பருவமடைந்த பெண் இன்னோர் ஆடவனுடன் பேசவும், பழகவும் இயலாத சமூகச் சூழல் சொல்லப்படுகிறது.

“கோடுகளும் கோலங்களும்’ நாவலில் வரும் செவந்தி ஆளுமை மிக்கத் தலைமைப் பாத்திரமாகக் காட்டப்படுகிறாள். ஆனால் அவளிடமும் பெண் பற்றிய தவறான பார்வைகள் உள்ளன. அதிலொன்று, பருவப்பெண் ஆண்களிடம் உரையாடக் கூடாதென்பது ஆகும். செந்திலிடம் பேசிய தன் மகள் சரோஜாவைச் செவந்தி கண்டிக்கிறாள். படிக்கச் செல்லும் பெண் ஆணுடன் பேசக்கூடாது எனக் கண்டிப்பாக மகளுக்கு அறிவுறுத்துகிறாள். வானொலியில்

திரைப்படப் பாடல் கேட்பதற்கும் சரோஜாவுக்குத் தடைவிதிக்கிறாள். சரோஜாவின் தாமதமான வருகையையும் தவறு என்கிறாள்.

சரோஜா வீட்டில் பெண் ஒழுக்கம் தொடர்புடைய விவாதங்கள் எழுப்பப்படும் அதே வேளையில் செந்தில் வீட்டில் ஆண் ஒழுக்கம் தொடர்புடைய கலந்துரையாடல்கள் நடைபெறாதது கவனிக்கத்தக்கது. சரோஜா ஆண்களுடன் சரிசமமாகப் பழகுவதனை செவந்தியால் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு முக்கியக் காரணம் சமூகத்தின் அலர் தூற்றலே ஆகும். அலரும் அம்பலும் ஆண்வாழ்வைப் பெரிதாகப் பாதிப்பதில்லை. ஆனால் ஒழுக்கமற்றவள் எனும் வதந்தியே ஒரு பெண்ணின் வாழ்வைக் குலைக்க வல்லதாக உள்ளது. எனவே ஆண்களுடன் பேச சரோஜா மீது செவ்வந்தி அதிருப்தி கொள்கிறாள்.

> “ஏற்கனவே இவள் சைக்கிளில் பள்ளிக்கூடம் செல்வதும் பையன்களுடன் பேசுவதும் ஏற்கும் படியாக இல்லை. பிறகு ஒன்றுமில்லாததற்குக் கண் வைத்து மூக்குவைத்துப் பேசுவார்கள்”[16]

இதில் கண் வைத்து, மூக்குவைத்து என்றும் கவித்துவமான பேச்சுவழக்கு ஊதிப்பெருக்கப்படும் தவறான பிம்பங்களை நினைவூட்டுவதாக உள்ளது.

### 4.1.7. காதலிக்கும் உரிமையின்மை

களவியல் தோன்றிய மண்ணில் பெண்ணுக்குக் காதலிக்கும் உரிமை மறுக்கப்படுவது தற்காலகத்தின் கசப்பான உண்மையாக உள்ளது. தற்காலத்தில் அறத்தோடு நிற்க தோழியும் செவிலியும் இல்லை. பரிந்து பேசும் நற்றாய்களும் இல்லை. தந்தையும் உடன்பிறந்த சகோதரர்களும் பெண்ணின் காதல் உரிமைகளைப் பறிக்கும் சக்திகளாகப் பெரும்பாலும் மாறிவிடுவதைத் தற்காலத் தமிழிலக்கியங்கள் மற்றும் ஊடகப்புனைவுகள் வெளிப்படுத்துகின்றன. குடும்பத்திலுள்ள ஆண்களின் அதிகாரச் செயல்பாட்டால் களவியலின் அடுத்த கட்டமான கற்பியலுக்கு நகரமுடியாமல் தேக்க நிலைக்குத் தள்ளப்படுவதை இலக்கிய வழக்கிலும் உலகியல் வழக்கிலும் காணமுடிகிறது. ‘மாயச்சுழல்’ நாவலில் அருணகிரியும் யசோதையும்

காதலர்களாகக் காட்டப்படுகின்றனர். அருணகிரி யசோதை வீட்டில் சென்று பெண் கேட்டமையால் அவளது அண்ணன் முருகேசன் கோபம் கொள்கிறார்.

> “சட், வாயைமூடு! அவராம்! வெட்கமில்லே? தானாக மாப்பிள்ளை தேடிக்கிட்டு முருகேசன் தங்கைன்னு என்னை நம்ம மனிதர்களே ஏசும்படி தலை நீட்ட வொட்டாமல் செய்திட்டியே? நம்ம குடும்பம், குலம், வழக்கம் எல்லா வரம்பையும் மீறி இந்தப்பெண் இப்படியும் நடக்குமான்னு அம்மா தலையே தூக்காம படுத்திட்டாங்க”[17]

என்ற முருகேசன் கூற்றில் காதலிப்பது என்பது வெட்கத்தைத் தவறவிட்ட செயலாகச் சொல்லப்படுகிறது. இதில், குடும்பம், குலம், மரபு அனைத்து மரபுகளையும் மீறிய எல்லை தாண்டிய பயங்கரவாதமாய்க் காதலை கருதும் ஆணின் எண்ணவோட்டமும் வாசகர் முன் கொண்டு வரப்படுகிறது.

### 4.1.8. சுதந்திரமின்மை

நவீன காலத்தில் பெண் சுதந்திரம் என்னும் பொருண்மை அதிகமாக விவாதிக்கப்படுகிறது. பெண்ணியவாதிகள் பெண்விடுதலைக்கான போராட்டங்களையும், எழுத்துக்களையும் முன்னெடுத்துச் செல்லும் அதே வேளையில் பொது மேடைகள், பட்டிமன்றங்கள், சமய அரங்குகள், திரைப்பட உலகம் எனப் பல்வேறு தரப்புகளில் பெண் விடுதலைக்கு எதிரான கருத்துக்கள் விவாதிக்கப்பட்டு வருகின்றன. பெண் விடுதலை என்பது ஆபத்து நிறைந்தது; தேவையற்றது என்னும் முன் முடிவுகளைப் பதித்துக் கொண்டு இவ்விவாதங்கள் எழுப்பப்படுகின்றன. ஆண் விடுதலையின் அபாயங்கள் குறித்த அதிர்வுகள் எவையும் இத்தகைய விவாதங்களில் இடம் பெறுவதில்லை.

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் சமூகத்தில் படிந்து போன பெண் விடுதலைக்கெதிரான மனநிலையானது பாத்திரங்கள் வழி எடுத்துக்காட்டப்படுகிறது. இந்நாவலில் சம்முகம் மகள் காந்தி, சாலி என்பவனோடு உடன்போக்குச் சென்றபோது சாலி என்ற ஆணின் சுதந்திரம் வினாவுக்குட்படுத்தப்படவில்லை. காந்தியின் சுதந்திரமே கேள்விக்குள்ளாகிறது. சம்முகத்தின் நண்பர் பெண்விடுதலை தேவையற்றது என்ற கருத்தைச் சொல்கிறார்.[18]

### 4.1.9. காலம் கட்டுப்படுத்தப்படுதல்

திருமணமாகும் வரை பெண்களின் காலம் ஆண்களால் அல்லது ஆணாதிக்கக் குடும்பச் சூழலால் கட்டுப்படுத்தப்படுகிறது. மகளின் காலம் தந்தையின் கட்டுக்குள் இருப்பதைக் ‘கோபுரபொம்மைகள்’ நாவல் கூறுகின்றது. தந்தையாதிக்கத்தின் பிடியிலிருக்கும் தாயும் தந்தைக்கு உடந்தையாக இருக்கிறாள். அதற்கான முக்கிய காரணம் வீட்டிற்குப் புறத்தே பெண்ணின் காலத்தை ஆணாதிக்க சமூகம் கையில் வைத்துள்ளது. பெண்ணின் தாமதமான வருகை புறவெளியில் ஏதோ ஒரு அபாயத்தைக் கொண்டிருக்கிறது. ஆணிடமிருந்து வரும் தாக்குதலிலிருந்து தப்பிக்கவே காலம் பற்றிய உணர்வைப் பெண் எப்போதும் சுமந்து திரிய வேண்டியிருக்கிறது. ஆண் எவ்வளவு தாமதமாக வீடு திரும்பினாலும் புறத்திலுள்ள பெண்களால் எவ்வித அபாயமும் அவனுக்கு நேர்வதில்லை. ஆனால் பெண்ணின் நிலை இதற்கு நேர்மாறான நிலையில் உள்ளது. ‘கோபுர பொம்மைகள்’ நாவலில் சுநீதா வீட்டிற்குத் தாமதாக வந்த போது அவளது தந்தை ளிப்படுத்தும் கருத்தானது சமூகத்தின் அழுக்கான உண்மையை உணர்த்துகிறது.

> “இந்தக் காலத்தில் பெண்களை வெளியில் அனுப்பவே பயமா இருக்கு அதற்காகவே ஒரு கல்யாணத்தைப் பண்ணிடனும், எனக்கு அஞ்சுக்கு ஆபிஸ் முடிஞ்சு, பஸ்பிடிச்சு, அஞ்சேகாலுக்கு இது தெருமுனையில் வரலேன்னா, இதும்மா, என்னை வீட்டில் இருக்க

விடமாட்டா, இன்னிக்கு ஆறும், ஆயிட்டதா நான் வரவேண்டியதாயிற்று"[19]

என்ற சுநீதாவின் தந்தை சமூகத்தில் நடமாடும் ஒரு தந்தையாகவே காட்சியளிக்கிறார்.

'சேற்றில் மனிதர்கள்' நாவலில் வரும் அம்சு மாலை ஆறுமணிக்கு மேல் குடத்தை எடுத்துக்கொண்டு குளிக்கப் புறப்பட்டபோது அவளது தாய் நேரத்தைக் காரணம் காட்டித் தடை செய்கிறாள். வேலை செய்து உடல் முழுக்க மண்ணும், வியர்வையுமாய் இருக்கும் அம்சு, அம்மாவுக்குக் கீழ்ப்படிந்து குளிப்பதைத் தவிர்க்கிறாள். அம்சு குளிக்கக் கிளம்பும்போது லட்சுமிக்கும் அம்சுக்கும் இடையே நடைபெறும் உரையாடல் பெண்ணின் காலமும் சுதந்திரமும் கட்டுக்குள் இருப்பதைப் புலப்படுத்துகிறது.

"எங்கடி? தண்ணி இருக்கே?"

"போம்மா, மேலெல்லாம் மண்ணு குளிக்கணும்"

"எந்நேரண்டி நீ குளிக்கிறது, இருட்டில் ஆத்துக்குப் போயி"

"கொளத்துல வெளக்கு வெளிச்சம் இருக்கும்மா?

"குளிக்க வாணாம், இப்ப நீ உள்ளற போ, ஈரமா இருந்தா சீலய அவுத்து மாத்திக்க"[20]

இவ்வுரையாடலில் மகளின் காலம் தாயின் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதைப் போன்ற தோற்றம் உள்ளது. ஆனால் வீட்டுக்குப் புறத்தே பெண்ணுக்கெதிரான ஆணின் வன்முறைகள் பெண்ணின் காலத்தையும், இடத்தையும் சுருக்குவதற்கான காரணியாக அமைவதை இப்பகுதி மறைமுகமாக நினைவூட்டுகிறது.

### 4.1.10. புழங்குவெளி சுருக்கப்படுதல்

கிராமங்களில் ஒரு பெண் பருவமடைந்தபின் வீட்டைவிட்டு வெளியிலெங்கும் செல்லக்கூடாது என்ற எழுதப்படாத தடை உள்ளது. 'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவலில்

"பூவு ஆளான பிறகு வெளியே செல்வதில்லை
பொன்னுவும் ராக்குவும் தானே"[21]

எனப் பருவமடைந்த பெண்களின் புழங்குவெளி சுருக்கப்படுவது எடுத்துக்காட்டப்படுகிறது.

### 4.1.11. வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமையின்மை

திருமணத்திற்குப்பின் காலம் முழுவதும் இணைந்து வாழுவதற்குரிய துணையைத் தேர்வு செய்யும் உரிமை பெண்ணுக்கு வழங்கப்படுவதில்லை. வரப்போகும் கணவன் எப்படிப்பட்டவனாக இருக்க வேண்டும் என்ற விருப்பமானது பெண்ணிடம் கேட்கப்படுவதில்லை. சமூகம் புனிதம் எனக் கருதும் 'இல்லறம்' என்ற அமைப்பில் பெற்றோரின் அதிகாரம் மட்டுமே மிஞ்சி நிற்கிறது.

வருங்காலத் துணையைத் தேர்வு செய்யும் உரிமை, நிராகரிக்கும் உரிமை எவையும் பெண்ணுக்கு வழங்கப்படாமையைப் பிரேமலதா ஆய்வொன்றில் எடுத்துக் காட்டுகிறார்.

"யாரைத் திருமணம் செய்ய வேண்டுமென்பதும் எப்படி குடும்பம் நடத்த வேண்டுமென்பதும் ஆணின் விருப்பத்திற்கு உட்பட்டவையே. தன் விருப்பத்தை மட்டுமல்ல விருப்பமின்மையைத் தெரிவிக்கக்கூடப் பெண்ணுக்கு உரிமையில்லை"[22]

என்கிறார்.

'சேற்றில் மனிதர்கள்' நாவலில் வரும் காந்தி நன்கு பயின்று உயர்நிலைக்கு வரப் போராடிக்கொண்டிருப்பவள் என்பது தெரிந்தும் அவளது வருங்காலத்துணை அவளது விருப்பமின்றியே தீர்மானிக்கப்படுகிறது. காந்தியின் தந்தை முற்போக்கு அரசியல் இயக்கங்களோடு தொடர்பு வைத்திருந்தாலும் மகளது திருமணத் தேர்வில் முற்போக்கு பார்வை உள்ளவராக இல்லை. பொன்னடியான்தான் காந்தியின் வருங்காலக் கணவன் எனப் பெரியோரால் பேசப்படுகிறது. தனக்குத் திருமணம் இப்போது

வேண்டாம் என்பதாக எதிர்ப்பு காட்டும் காந்தியால் இந்த மாப்பிள்ளை வேண்டாம் என்று பேச இயலாதது கவனிக்கத்தக்கது.

### 4.1.12. கருப்புநிறப் பெண் புறக்கணிக்கப்படுதல்

குழந்தை பிறந்தவுடன் அது பற்றி எழுப்பப்படும் வினாக்களுள் மிக முக்கியமானது அதன் நிறம் பற்றியதாகும். பெண்ணாகப் பிறப்பெடுப்பதை விரும்பாத சமூகம், குறிப்பாக அவள் கருப்பு நிறம் கொண்டவளாக இருந்தால் அதனை ஏற்றுக் கொள்வதில்லை. பருவமடைந்த பின் திருமணத்தை நோக்கிச் செல்லும்போது பெண்ணின் கருப்புநிறம் திருமணத்தடைகளில் ஒன்றாக அமைந்து விடுகிறது. ‘தோட்டக்காரி’ நாவலில் சுமதி நன்கு படித்து அரசுப் பணி ஆற்றிய பின்னரும் அவளுக்கு ஏற்ற வரன் வராததற்குக் காரணமாய் அவளது கருப்பு நிறம் சொல்லப்படுகிறது.

> “தாயைக் கொண்டு மேனிநிறம் சிவப்பாகப் பிறக்காமல் தந்தையைக் கொண்டு கருப்பாகப் பிறந்திருந்ததால் கல்யாணச் சந்தையில் கறுப்புப் பணத்துக்குக் கிராக்கி இருந்ததே ஒழிய கருப்புப் பெண்ணுக்கு மதிப்பில்லையே”[23]

எனக் கருப்புநிறம் திருமணத்தடைகளில் ஒன்றாகச் சொல்லப்படுகிறது.

## 4.2 திருமணத்திற்குப்பின் குடும்பத்துக்குள் பெண் சந்திக்கும் சிக்கல்கள்

குடும்பம் என்பது ஆணும் பெண்ணும் தனது அகத்தேவைகளை நிறைவு செய்து, மனிதகுல உற்பத்தியின் தொடர்ச்சியில் தம்மை இணைத்து ஒருவருக்கொருவர் துணையாக வாழ உருவாக்கப்பட்ட அமைப்பு ஆகும். மூத்தத் தலைமுறையினரைப் பராமரித்தல், எதிர்காலத் தலைமுறையின் வளர்ச்சியை முன்னெடுத்துச் செல்லுதல் ஆகியவையும் குடும்ப அமைப்பு உருவாக்கப்பட்டதன் முக்கிய நோக்கங்களாகும். கட்டற்ற வாழ்வியலின் பலவீனங்களைக் கருத்தில் கொண்டு கட்டுப்பாடு மிக்க அமைப்பாக இது உருவாக்கப்பட்டது.

புரிந்து கொள்ளுதல், விட்டுக்கொடுத்தல், பாதுகாத்தல், அரவணைத்தல், துயரங்களில் பங்கேற்றல், ஒழுங்குக்குட்பட்டு இயங்குதல், சமமான பணிப்பங்களிப்பு செய்தல் போன்றவை குடும்பம் என்ற அமைப்பின் இடையூறற்ற இயக்கத்துக்குத் துணைபுரிகின்றன. குடும்ப அமைப்பு உருவாக்கப்பட்டதன் நோக்கங்கள் ஈடேறாமற்போனது அவ்வமைப்பு பற்றிய ஐயங்களை மக்கள் மனதில் எழுப்பியது. ‘கணவனே கண்கண்ட தெய்வம்’ ‘கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்’ போன்ற பழங்காலக் கற்பிதங்கள் தற்காலத்தில் பொருளிழக்கத் தொடங்கி விட்டன. ஆண் ஆளுபவனாகவும், பெண் இணங்குபவளாகவும் இருந்து குடும்ப அமைப்பைக் கட்டிக் காப்பதில் படித்த சமூகத்துக்கு உடன்பாட்டு இல்லை. கல்வியறிவும், நாகரிக வளர்ச்சியும், மேற்கத்திய தாக்கமும், உலகியல் அறிவும் அனைவருக்கும் கிடைக்கத் தொடங்கிய போது பழைய கருத்தியல்கள் மதிப்பிழக்கத் தொடங்கின. மத அமைப்பும், சமூகமும் குடும்ப அமைப்பைத் தீவிரமாக ஆதரிப்பதால். அதனை விமர்சிப்பதும் புத்தாக்கம் செய்வதும் சிக்கல் நிறைந்ததாக உள்ளது. ஆயினும் பெண்ணியவாதிகளும், சீர்திருத்தவாதிகளும் குடும்ப அமைப்பின் குறைகளை உற்று நோக்கி வெளிக்கொணரத் தலைப்பட்டனர். குறிப்பாக ஆணின் சர்வாதிகாரப் போக்கை எதிர்ப்பதை இவர்கள் நோக்கமாக கொண்டியங்கினர். தமிழ்ப்படைப்பாளர்கள், திறனாய்வாளர்கள், சமூக ஆர்வலர்கள் ஆகியோர் குடும்ப அமைப்பின் குறைகளை நீக்குவதற்குத் தமது பங்களிப்பைச் செய்து வருகின்றனர்.

குடும்பம் என்ற அமைப்பு அன்பு, பாசம், என்பனவற்றைத் தொலைத்து விட்டு ஆணின் அதிகாரத்தை மட்டுமே தக்கவைத்திருப்பதைப் பிரேமலதாவின் கருத்து புலப்படுத்துகிறது.

> “இன்று குடும்பம் என்றாலே, சண்டை, சச்சரவுகள், ஆணின் சர்வாதிகாரம், ஆணின் தவறுகள் தண்டிக்கப்படாமல் போற்றப்படல், பெண் எனில் சுமை தாங்கி, மனைவி எனில் மிதியடி என்ற நிலைகளே பெரும்பாலும் நிலவி வருகின்றன”[24]

என ஆணின் அமைப்பாகக் குடும்பம் இருப்பது உணர்த்தப்படுகிறது.

மதநூற்கள், இலக்கியங்கள், ஊடகங்கள் அனைத்தும் குடும்ப அமைப்பைப் புனிதமாகச் சித்தரிப்பதில் ஆர்வம் காட்டுகின்றன. ஆனால் அப்புனித ஒளியின் கீழ்விழும் இருட்டை வத்ஸலா காட்டுகின்றார்.

> “நம் நாட்டு ஊடகங்கள் குடும்பத்தைக் கோயிலாக, பல்கலைக்கழகமாக உரத்த குரலில் புகழ்பாடுகின்றன. அதுவும் ஒருவிதத்தில் சரிதான். ஏனெனில் ஒரு சில கோயில்களில் சிறு மடங்களில் சிறு பல்கலைக்கழகங்களில் உள்ளது போல குடும்பங்களிலும் வலுவுள்ளோரின் சர்வாதிகாரம், வன்முறை போன்ற பிரச்சனைகள் உண்டு”[25]

எனக் குடும்பத்துக்குள் சர்வாதிகாரம் தலைகாட்டுவதை எடுத்தியம்புகிறார்.

பெண்ணுக்குப் பாதுகாப்பையும், மரியாதையையும், தரும் அமைப்பாகக் குடும்பத்தை மதிப்பிடும் இராஜம் கிருஷ்ணன் சில இடங்களில் அதனை விமர்சிக்கவும் தவறவில்லை.

> “குடும்பம் மெல்லிய இழைகளால் மக்களையும் சுற்றத்தையும் இணைக்கும் நிறுவனம். இது கால காலமாக வந்த மரபில் பின்னப்பட்டது. இன்று இராட்சத முட்புதராக அது பெண்ணினத்தை வருத்துகிறதென்றால்....? முதலே தவறா?”[26]

இதில் குடும்ப அமைப்புப் பெண்ணுக்கு எதிராகக் கட்டமைக்கப்பட்டிருப்பதால் அதன்மீது விமர்சனத்தைத் தொடுக்கிறார்.

> “ஒரு மனிதப்பிறவியான பெண்ணை இயந்திரத்தையும் விட மோசமாக நடத்த ஓர் ஆணுக்கும் அவனைச் சார்ந்தவர்களுக்கும் உரிமை வழங்கும் ஓர் அமைப்புத்தான் குடும்பம்”[27]

எனக் குடும்பத்துக்குப் புதிய விளக்கத்தை இராஜம் கிருஷ்ணன் தருகிறார். ஆணின் கட்டுப்பாட்டில் இருக்கும் குடும்ப அமைப்புக்குள் பெண்கள் சந்திக்கும் சிக்கல்களை மக்களிடம் கொண்டு செல்வதற்குப் பெண்ணியப் படைப்பாளிகள் எழுத்தை ஆயுதமாக எடுத்தனர். இராஜம் கிருஷ்ணனும் தனது நாவல் மற்றும் சிறுகதைகளில் குடும்ப

அமைப்புக்குள் சிக்கிச் சிதைவுறும் பெண்ணின் இருப்பைப் பல கோணங்களில் இருந்து பார்க்கிறார். இராஜம் கிருஷ்ணனின் புனைகதைகளை ஆராயும் போது குடும்ப அமைப்புக்குள் பெண்கள் கீழ்க்காணும் சிக்கல்களைச் சந்திப்பதாகக் கருதமுடிகிறது. அவை.

4.2.1. வேலைக்காரியாக்கப்படுதல்.
4.2.2. பாலியல் கருவியாக்கப்படுதல்
4.2.3. பேச்சுரிமையின்மை
4.2.4. அடக்கப்படுதல்
4.2.5. அடித்துத் துன்புறுத்தப்படுதல்
4.2.6. சொற்களால் துன்புறுத்தப்படுதல்
4.2.7. திறமைகள் மதிக்கப்படாமை
4.2.8. மேலாண்மைத் திறன் அங்கீகரிக்கப்படாமை
4.2.9. வேலைக்குச் செல்ல தடை
4.2.10. பிறந்த வீட்டோடு உறவு பாராட்டத்தடை
4.2.11. விருப்புகள் புரிந்து கொள்ளப்படாமை
4.2.12. நம்பிக்கையின்மை
4.2.13. திருமண விலக்கம்

ஆகிய சிக்கல்களைப் பெண்கள் சந்திக்க நேரிடுகிறது. அவை அனைத்திலும் பிரச்சினையின் ஊற்றுக்கண்ணாக ஆண் இருப்பதனையும் இராஜம் கிருஷ்ணன் நாவல் வழியாக உணர முடிகிறது.

### 4.2.1. வேலைக்காரியாக்கப்படுதல்

தற்காலத்தில் அலுவலகம் சென்று பொருளீட்டும் வேலையே வேலை என்ற பட்டியலில் சேர்க்கப்படுகிறது. வீட்டுக்குள் வேலை செய்வது வேலையாகக் கருதப்படுவதில்லை. அலுவலகப் பணியை விட வீட்டு வேலைகள் கடுமையானவை என்ற உண்மை புறக்கணிக்கப்படுகிறது.

வீட்டில் பல்வேறு கடினமான பணிகளைச் செய்யும் பெண்ணுக்கு ஊதியம் எதுவும் வழங்கப்படாமையிலிருக்கும் அநீதியை விளக்கும் அமரந்தாவின் கருத்து இங்குக் கருதத்தக்கது.

> "உணவு தயாரித்தல், வீட்டைப் பராமரித்தல், பிள்ளைபெறுதல் குழந்தைகளை வளர்த்தல், குடும்பத்தினரின் உடல் - மன நலன் பேணுதல், சமூகஉறவுகளைக் கட்டிக்காத்தல் ஆகிய பெண்களுக்கென ஒதுக்கப்பட்டிருக்கும் சேவைப்பணிகளுக்குச் சமூக உழைப்பு என்ற அங்கீகாரமோ பண மதிப்போ வழங்கப்படுவதில்லை. மொத்தத்தில் திருமணம் என்ற சடங்கின் மூலம் நிறுவப்படும் குடும்ப அமைப்பில் ஆண்களின் சுகவாழ்விற்கான எல்லாத் தேவைகளையும் ஊதியம் பெறாமல் செய்வதற்காகவே பெண்கள் ஆண்களுடன் இணைந்து வைக்கப்படுகிறார்கள்."[28]

இதில் ஆண்வர்க்கத்துக்கு மனைவி எனும் இலவச வேலைக்காரி கிடைப்பது குறித்த கீழான எண்ணத்தில்தான் திருமண ஒப்பந்தம் செய்யப்படுவதாக உணர்த்தப்படுகிறது.

நடுத்தர வர்க்கத்தில் பெண் குடும்பத்துக்காக உழைக்கும் உயிரியாக மட்டும் கருதப்படுவதாகப் பத்மபிரியா குறிப்பிடுகிறார்.

> "மத்தியதர வர்க்கத்தைச் சார்ந்த குடும்ப வாழ்வில் கணவனுக்கு மனைவியாக பிள்ளைக்குத் தாயாக, குடும்பத்துக்கு அச்சாணியாக, மாடாய் உழைக்கும் மானிடப் பெண்ணாக உலகறிவு பெறுவதற்குரிய சாளரங்கள் ஒவ்வொன்றும் மூடப்பட்டு விடுவதால் குறிப்பிட்ட மரபு வழிப் பாதையிலேயே செலுத்துவிக்கப்படுகின்றனர்"[29]

எனப் பத்மபிரியா குடும்பத்துக்குள் காணப்படும் பெண்ணுக்கெதிரான சூழலை விளக்குகிறார்.

இப்படிப் பெண்கள் வெறும் வேலைக்காரி வேடம் தாங்கி வாழ்ந்து முடிப்பதை இராஜம் கிருஷ்ணன் பாத்திரங்கள் மூலம் கேள்விக்குட்படுத்துகிறார்.

'மாறி மாறிப்பின்னும்' நாவல் வீட்டுவேலையின் கடுமையை உணர்த்துகிறது. "அலுவலக வேலையை விட வீட்டுவேலை பத்து மடங்கு அதிகம் உழைப்புக்குரியது. ஊதியமற்றது, வார, மாத விடுமுறைகளற்றது"[30] என வீட்டுவேலையின் பழு குறித்து நாவல் பேசுகிறது.

பெண் பட்டங்கள் பயின்றிருந்தாலும் கணவனின் வீட்டுக்குள் சமையல்காரியாக இருப்பதை 'சுழலில் மிதக்கும் தீபங்கள்' நாவல் கண்டிக்கிறது. எம்.ஏ., பி.எட்., படித்திருந்த கிரிஜா, கணவன் வீட்டில் மாமியாருக்கு அடங்கியவளாக இருந்து சமையல்காரியாகவே வாழுவதை ரத்னா இடித்துரைக்கிறாள்.

"உனக்கென்ன பிடிவாதம்? அந்த அழுக்குச் சமையல் அறையின் கீழே உட்கார்ந்து எல்லோருக்கும் எல்லாம் வைத்து விட்டு மிச்சம் மீதியைக் கொட்டிக் கொண்டு சாப்பிட நீ நாலு கால் இனமா? நீ எதற்காக எம்.ஏ., பி.எட்., பண்ணிட்டு வருஷம் வேலையும் பண்ணினே"[31]

எனக் கல்வியறிவு இருக்கும் பெண்களும் வீட்டுக்குள் அ∴றிணைகள் போல் வாழும் இழிந்த நிலையைச் சாடுகிறாள்.

### 4.2.2. பாலியல் கருவியாக்கப்படுதல்

காமம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவான உணர்வு ஆகும். ஆனால் ஆணாதிக்கம் தனது பாலியல் வேட்கையை நிறைவுசெய்து கொள்வதற்கான ஊடகமாய் மட்டுமே பெண்ணைக் கருதுகிறது. மனைவியின் பாலியல் வேட்கைகள் கணவனால் புரிந்துகொள்ளப்படுவதில்லை. கணவனுக்குப் பாலியல் உந்துதல் ஏற்பட்டால் மனைவி அவனுக்கு ஒத்துழைத்தாக வேண்டிய இடத்தில் இருக்கிறாள். அவளது அகமன எழுச்சியற்ற உணர்வு வேளைகளில்

ஆணின் அதிகாரம் உடல்மேல் சீறிப் பாய்கிறது. வேலைப்பழு, மன உழைச்சல், நோய்கள், சோர்வு, இயலாமை, உடல்சார்ந்த சிக்கல்கள் என்பவை பெண்ணின் வேட்கைக்குத் தடையாக அமைந்தாலும் அதுபற்றிய தனது உணர்வுகளைப் பெண் வெளியிட முடியாது. அது கணவரையே எதிர்த்ததாகக் கருதப்படும். இத்தகு தருணங்களில் கணவனே மனைவியை வன்புணர்வு செய்வது என்பது சாதாரண நிகழ்ச்சியாக உள்ளது.

> “பாலியல் சார்ந்த நடவடிக்கைகளில் ஆண்களின் விருப்பிற்கு எப்போதும் உடன்படுவோராகவும், அது குறித்த சொந்த விருப்பு வெறுப்புகள் அற்றவர்களாகவும் இருப்பதே ஒழுக்கமுள்ள பெண்களின் இயல்பாக நிலைநாட்டப்படுகிறது”[32]

எனப் பாலியல் செயல்பாடு ஆணின் முடிவுக்குட்பட்டதாய் அமைவது அமரந்த்தாவால் எடுத்துக்காட்டப்படுகிறது. பாலியலைத் தீர்மானிக்கும் சக்தியாக ஆண் அதிகாரம் செலுத்துவதை இராஜம் கிருஷ்ணன் எதிர்க்கிறார்.

கணவனின் உடல் பசிக்கு எப்போதும் இரையாகும் பாலியல் உணவாகப் பெண் இருப்பது என்பது ஒரு குடும்ப வன்முறையே ஆகும். பெண்ணின் அகம் குறித்த புரிதல்களற்று ஆணால் நிகழ்த்தப்படும் உடல் புணர்ச்சியை இராஜம் கிருஷ்ணன் மிருக இச்சையுடன் ஒப்பிடுகிறார்.

> “அபிராமி அந்தக் குடும்பத்துக்குச் சமைத்துப் போட்டுக்கொண்டு, நினைத்தபோது அவனுடைய மிருக இச்சைக்குக் கருவியாக இருந்திருப்பாளா?”[33]

என அபிராமி சுதந்திரப்போராட்ட தியாகியான நாதனின் கீழ் அடிமையாக இருந்த சோகத்தைப் பதிவு செய்கிறார்.

‘மாறிமாறிப்பின்னும்’ நாவலில் ரேவதியின் கணவன் மல்லிநாதன் அவளை அதிகாரம் செய்கிறான். இதயமற்றவனாகவும், பேச்சுரிமை வழங்காதவனாகவும், விலங்குத் தன்மை மிக்கவனாகவும் அவன் காட்டப்படுகிறான். மனைவி சமைத்து வைத்தவற்றைச் சாப்பிடாமல் உணவு விடுதியிலே அவன் உணவருந்தி வருகிறான். வீட்டிற்கு வந்து

சேர்ந்ததும் குடிப்பதற்குப் பால் கொண்டுவரும்படி ஆணையிடுகிறான். ரேவதி பாலை எடுத்துச்சென்று கட்டிலுக்குப் பக்கத்தில் வைக்கிறாள். அவன் அவளை இழுத்துக்கட்டிலில் தள்ளிவிட்டு, கதவைச்சாத்துகிறான். ரேவதி மனதுக்குள் கணவனை வெட்கம் கெட்ட பிறவி என்றும், விலங்கு என்றும், இராட்சசன் என்றும் திட்டுவதைத் தவிர வேறெந்த எதிர்ப்பும் காட்டமுடியாமல் திணறுகிறாள். கணவன் செத்தாக்கூட அழக்கூடாது என்றும் நினைக்கிறாள். அவனது அறுபது கிலோ உடல் அவளை அழுத்துகிறது”[34] என மனைவியின் விருப்பு வெறுப்புகளைக் கேட்காமல் புணர்தலொன்றையே நோக்கமாகக் கொள்ளும் கணவனின் செயல்பாடு குறிக்கப்படுகிறது.

### 4.2.3. பேச்சுரிமையின்மை

பெண் குடும்ப உறுப்பினராகக் கருதப்பட்டாலும் அவளது உரிமைகள் கணக்கிலெடுத்துக்கொள்ளப்படுவதில்லை என மா. இராமலிங்கம் குறிப்பிடுகிறார்.

குடும்பத்துக்குள் பெண்ணுக்குப் பல்வேறு உரிமைகளைத் தடைசெய்து வைத்திருந்தாலும் அதில் பேச்சுரிமையின்மை என்பது முக்கிய இடத்தைப் பிடிக்கிறது. குடும்ப அமைப்பில் பெண் பேசாமடந்தையாகவே வாழ்ந்தாக வேண்டிய கட்டாயத்தைச் சமூகம் உருவாக்கியுள்ளது. வீட்டுக்குள் பெண் பேச வேண்டியவற்றைப் பேசினால் கூட அதிகப் பிரசங்கி, வாயாடி போன்ற பட்டங்களைச் சுமக்க வேண்டியதாகி விடுகிறது. மௌனம், புன்னகை, பாராட்டுதல் வழிமொழிதல், கணவன் சொன்னதைத் திருப்பி சொல்லுதல் ஆகிய உரிமைகள் மட்டுமே அவளுக்கு வழங்கப்பட்டுள்ளன. அகவேட்கையை வெளியிடுதல், அதிருப்தியைப் புலப்படுத்துதல், கோபமாகப் பேசுதல், கணவனை விமர்சித்தல், எதிர்த்துப் பேசுதல் போன்ற உரிமைகள் பேச்சு சார்ந்து பெண்ணுக்கு மறுக்கப்படுகின்றன.

பெண்ணுக்கு வீட்டுக்குள் பேச்சுரிமை மறுக்கப்படுவதைச் ‘சூழலில் மதிக்கும் தீபங்கள்’ நாவல் உணர்த்தி நிற்கிறது. இந்நாவலின் கதைத் தலைவி கிரிஜா கணவனால் அடிமையாக நடத்தப்படுகிறாள். வீட்டுக்குள் அவளுக்குப் பேச்சுரிமை

மறுக்கப்படுகிறது. மெல்லிய குரலில் தனது அதிருப்தியை அவள் வெளிப்படுத்தினால் கூட கணவனுக்குக் கோபம் மேலிடுகிறது. பேசாத சமையலறை இயந்திரமாக வாழ மட்டுமே அவள் அனுமதிக்கப்படுகிறாள். தனக்குப் பேச்சுரிமை இல்லாமல் போனதை அவள் சுட்டிக்காட்டிய போது அவன் சோற்றுத்தட்டைத் தூக்கி எறிகிறான். தன்னீர்க் குவளையை வீசி உடைக்கிறான். பேசினால் வீட்டை விட்டு வெளியேறும்படி உத்தரவிடுகிறான். பெண் தன் அதிருப்தியை பேச்சின் வழி வெளிப்படுத்தக் கூட உரிமையற்ற நிலையைக் கிரிஜா பாத்திரம் செவ்வனே விளக்குகிறது.

> "பதினேழுவருஷம் அடிமைச் சேவகம் செய்து, குழந்தைகளைப் பெற்று வளர்த்த இவளுக்கு ஒரு பேச்சு, ஒரு குரல் எழுப்ப உரிமை இல்லையா? அப்படியும் உரத்த குரல் கூட இல்லை. அந்த ஒரு பிசிறைக்கூட பொறுக்க முடியாத ஒரு கூடு இது...? ரத்னா கூறினாற்போன்று, இது எவ்வளவு மோசமான கடுமையான, வெளிக்குத் தெரியாத அடக்குமுறை? வசதியான வீடு, நவீனமான வாழ்க்கை வசதிகள் என்ற ஆடம்பரங்கள் ஒரு பெண்ணுக்குத் தன் உரிமைக் குரலில் இலேசான ஒலியைக் கூட எழுப்பவிடாத அழுத்தங்கள் வேறென்ன?"[35]

என ஆணைப்பற்றிய எதிர்ப்புணர்வின் மெல்லிய குரல்கூட நசுக்கப்படுவதை நாவல் எடுத்தியம்புகிறது.

### 4.2.4. அடக்கப்படுதல்

குடும்ப அமைப்பு பெண்ணை இல்லாள் எனும் பெயரில் நாகரிகமாக அழைக்கிறது. இல்லாள் என்பதற்கு வீட்டை ஆட்சி செய்பவள் என்று பொருள். ஆனால் வீட்டின் மன்னராகவும் மகாராணியாகவும் ஆணே ஆட்சி செலுத்துகிறான். 'இல்லாள்' என்ற பெயருக்கும் பெண்ணின் இல்லற வாழ்வுக்கும் தொடர்பு எதுவும் இல்லை ஆண்கட்டளை பிறப்பிக்கிறான். பெண் அதன்படி நடக்கிறாள். ஆணின் கட்டுப்பாட்டுக்குள் பெண்ணின் முழுவாழ்வும் அடங்கி முடிந்து விடுகிறது.

குடும்ப அமைப்பு ஆணுக்கு அதிகாரத்தையும் பெண்ணுக்கு அடக்கத்தையும் கற்பித்துள்ளது. ஆண் உணர்ச்சி வசப்பட்டாலும் பெண் அன்பு செய்யப்பழகிக் கொள்ள வேண்டும். ஆண் அதிர்ந்து பேசினாலும் பெண் நிதானத்தைப் பின்பற்ற வேண்டும் என்பதாகவே பெண்ணுக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளன. குடும்ப அமைப்பின் சிதைவைத் தவிர்ப்பதற்காக் கற்பிக்கப்பட்ட விழுமியங்களைக் கடைப்பிடிக்கும் குடும்பத் தலைவியாக யசோதை காட்டப்படுகிறாள்.

> “ஆழ்கடல் கொந்தளித்தாலும் மரக்கலத்தைச் செலுத்துபவன் நிதானத்தைக் கைவிடலாமா? அப்போதுதானே அதிக கவனம் செலுத்திச் சுயபுத்தியை உபயோகிக்க வேண்டும்? குடும்பத்தலைவி பெருமரமாக இருக்கக்கூடாது. அவள் பெரும் காற்றுக்குத் தலைவணங்கிச் சிலிர்த்துச் சிரித்து ஆற்றங்கரையில் அழகுடன் விளங்கும் நாணலைப்போல உணர்ச்சிகளின் கரையிலே நின்று கடமையைச் செவ்வனே ஆற்ற வேண்டும்”[36]

எனப் பொறுமையுடன் அடங்கிச் செல்லும் வாழ்வு மட்டுமே பெண்ணுக்கு விதிக்கப்பட்டுள்ளதை நாவல் உணர்த்துகிறது. அடக்குதல், அடங்குதல் என்ற முரண்களின் ஒத்திசைவில்தான் குடும்ப அமைப்பு இயங்குவதை நாவல் புலப்படுத்துகிறது.

அடிப்பதும், அழுத்துவதும், அதிகாரம் செய்வதும் ஆணின் உரிமையாக உள்ளது என்று ‘சுழலில் மிதக்கும் தீபங்கள்’ நாவல் கூறுகின்றது. இதற்கு மாறாக இருக்கும் பெண்ணின் நிலைமையையும் அது சொல்கிறது. சேவிப்பதும், பூசிப்பதும், பாதுகாப்பதும் பெண்ணின் கடமை யாக்கப்பட்டிருப்பதாக நாவல் கூறுகின்றது.[37]

பெண்ணை அடக்க ஆண் சில உத்திகளைக் கையாளுகிறான். அவை

தொன்மக்கதைகளைச் சொல்லி அடக்குதல்,
இலக்கிய மேற்கோள்களைச் சொல்லி அடக்குதல்,
வன்முறை வழி அடக்குதல்,
ஆகிய வழிமுறைகளில் பெண் அடக்கப்படுகிறாள்.

### 4.2.5. அடித்துத் துன்புறுத்தப்படுதல்

குடும்பமும் சமூகமும் கணவனுக்குப் பல்வேறு உரிமைகளை வழங்கியுள்ளன. மனைவியின் குறையைக் கண்டுபிடிக்கும் உரிமை, அடிக்கும் உரிமை, உதைக்கும் உரிமை போன்றவை அவற்றில் அடங்கும். அடித்துத் துன்புறுத்தப்படும் பெண்ணுக்காக நீதி கேட்க சமூகம் வெகுண்டெழுவது இல்லை. சட்ட நடவடிக்கைகளும் புதிய சிக்கல்களுக்குள் தள்ளுகின்றன. கணேசலிங்கன் எனும் பெண் விடுதலை பேசும் ஆணறிஞர், குடும்ப வன்முறை குறித்துப் பேசும் போது,

> "மனைவியுடைய வேலைகளில், சமையல்களில் குறை கண்டுபிடிப்பதற்கும் கணவனுக்கு அதிகாரமுண்டு. அதுமட்டுமல்ல, அடிப்பதற்கும் உதைப்பதற்கும் உரிமையுண்டு. வலி தாங்காது மனைவி சத்தமிடினும் அயலார் எவரும் தலையிடமாட்டார்கள். குடும்பச் சண்டை, கணவன் மனைவி தகராறு என அயலவர் கூறிவிடுவர். சட்ட நடவடிக்கைக்கு எந்தப் பெண்ணும் செல்வதில்லை. ஏனெனில் அவள் மனைவி என்ற அந்தஸ்தை இத்தகைய நடவடிக்கை மூலம் இழக்க நேரிடும்"[38]

என்றுரைக்கிறார்.

பெண்ணை அடித்துத் துன்புறுத்தும் ஆணாதிக்கத் தீவிரவாதம் அடித்தட்டு முதல் மேல்தட்டுவரை எங்கும் பரவிக்கிடக்கிறது. இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் அடிக்கும் கணவன்கள் மூவகைப்பட்டவர்களாக உள்ளனர்.

4.2.5.1. பொருள்கேட்டு அடிப்பவர்கள்

4.2.5.2. நடத்தை மீது ஐயுற்று அடிப்பவர்கள்

4.2.5.3. காரணமின்றி அடிப்பவர்கள்

ஆகிய மூன்று வகையினரைக் காணமுடிகிறது.

### 4.2.5.1. பொருள்கேட்டு அடிப்பவர்கள்

'மண்ணகத்துப்பூந்துளிகள்' நாவலில் பழனிச்சாமி என்பவனுக்குப் அழகாயியின் மகள் பூவுவை மணமுடித்துக் கொடுக்கிறார்கள். பழனிச்சாமி குடிப்பழக்கம் உடையவனாக இருந்தான். அவன் பொன், பொருளுக்காக அவளை அடிக்கிறான். பூவுவின் காதுகளில் கிடந்த குடைஜிமிக்கியைக் கழற்றி எடுத்துக்கொள்கிறான். தினந்தோறும் குடித்து விட்டு வந்து பூவுவை அடிக்கிறான். அதனைத் தட்டிக்கேட்ட அழகாயியையும் மிருகத்தனமாகத் தாக்குகிறான். கருவுற்றிருந்த பூவுவையும் பலமுறை அடித்துத் துன்புறுத்துகிறான். தடித்த வார்த்தைகளை வீசுகிறான். தாய் வீட்டுக்கு வந்த பின்னும் பூவுவை அடித்து உதைக்கிறான். குடிகாரக் கணவனால் ஏற்படும் கொடூரங்கள் பழனிச்சாமி கதாப்பாத்திரம் வழியாக உணர்த்தப்படுகிறது.

> 'அலைவாய்க்கரையில்' என்ற நாவலில் மரியானின் தந்தை குடிப்பதற்குப் பணம் கேட்டு மனைவியை அடித்துத் துன்புறுத்துகிறார். குடித்து விட்டு எங்கேனும் நிலைதவறி விழுந்து கிடக்கிறார். மற்றவர்கள் அவரைக் கைத்தாங்கலாக வீட்டில் கொண்டு விடுகிறார்கள். கணவனின் இச்செயலில் அதிருப்தியுறும் அவரது மனைவி தன் எதிர்ப்புணர்வை பெருமூச்சாக மட்டுமே வெளியிடுகிறாள். எதிர்த்துக் கருத்தெதுவும் கூற முடியாத அடிமைத்தனத்துக்குள் வாழுகிறாள்.[39]

இக்கொடுமையை மரியான் தட்டிக்கேட்கிறான். மனைவியை அடிக்கும் உரிமை கணவனுக்கு இருப்பதாக அவளது தந்தை கூறுகிறார்.

> "அவெவ வீட்டில அவெவ பெஞ்சாதிய அடிக்காம யாரை
> அடிப்பா? போ... லே"[40]

என மனைவியை அடிக்கும் வன்முறையை ஆண் குலத்துக்குப் பொதுமைப் படுத்தியும், நியாயப்படுத்தியும் பேசுகிறார்.

'ஓசைகள் அடங்கிய பிறகு' நாவலில் வரும் ஆயா வறுமையின் காரணமாக ஆரோக்கியவரத்துக் கான்வென்டில் பாத்திரம் துலக்கி, குறைந்த கூலி பெற்று வீட்டுக்கு வந்தால் அவளுடைய கணவனின் கொடுமைகளுக்கு ஆளாகிறாள். ஆயாவின் கணவன் அவளது வருவாயைப் பிடுங்கிக் கொள்பவனாகவும், அடுத்துத் துன்புறுத்துபவனாகவும் நாவலில் காட்டப்படுகிறான். அவன் வேறு தவறு செய்து சிறை சென்று மீண்டு வந்தபின் நேரடியாக அவள் வேலை செய்யும் இடத்துக்குச் சென்று தொல்லை கொடுக்கிறான். அவர்களது மகனான மாணிக்கத்தின் கழுத்தில் கிடந்த சிலுவையை அவிழ்த்து எறிகிறான். ஆயா வீட்டு வேலைசெய்து சம்பாதித்த காசையும் குடிப்பதற்காகப் பிடுங்கி கொள்கிறான்.

இதே நாவலில் வரும் சாரங்கன் மீனாவை அடிக்கிறான். அதைத் தட்டிக்கேட்ட நளினியிடம் மனைவியை அடிக்கும் உரிமை கணவனுக்கு இருப்பதாக வாதிடுகிறான்.

> "என் பெண்சாதி அவ... அவளை அதட்ட அடிக்க உரிமையுள்ளவன் நான், நீ யாரடி... அதுக்குக் குறுக்கவர"[41]

என மனைவியை அடிக்கும் உரிமை கணவனுக்கு வழங்கப்பட்டிருப்பதாகக் கூறுகிறான்.

### 4.2.5.2. நடத்தை மீது ஐயுற்று அடிப்பவர்கள்

'நீலக்கடல்' சிறுகதையில் லில்லியின் தந்தை குடித்துவிட்டு வந்து அவனது மனைவியின் புடைவையைக் கிழித்தெறிகிறான். கெட்ட வார்த்தைகளால் திட்டுகிறான். நடத்தையை ஐயுற்று வார்த்தைகளைக் கொட்டுகிறான். கடற்கடை கிராமங்களில் குடிப்பதும், மனைவியை அடிப்பதும் சாதாரண நிகழ்வாக இருப்பதை அச்சிறுகதை சித்திரிக்கிறது.

> ‘‘கூலிக்கு வேலைக்காரனாச் சென்று, கிடைப்பதில் தொண்ணூறு விழுக்காட்டையும் குடித்துவிட்டு வந்து அடிக்கும் கணவனிடம் எத்தனை நாட்கள்தான் உறவு பற்றிக்கிடக்கும்’’[42]

எனக் குடிகாரக் கணவனின் கொடுமை சொல்லப்படுகிறது.

### 4.2.5.3. காரணமின்றி அடிப்பவர்கள்

‘மாறிமாறிப் பின்னும்’ நாவலில் சாந்தி எனும் பாத்திரம் கணவனின் கொடுமைகளைச் சந்தித்த சிறு பாத்திரமாக அமைக்கப்பட்டுள்ளது. சாந்தியின் கணவன் நெருப்பால் அவளுக்குச் சூடு வைக்கும் கொடூரனாக இருந்தது சொல்லப்படுகிறது.[43]

இதே நாவலின் தலைவி ரேவதி கணவனால் கொடுமையாகத் துன்புறுத்தப்படுகிறாள். ரேவதியின் கணவன் பேய், மிருகம், இராட்சசன் ஆகிய படிமங்களால் கண் முன் நிறுத்தப்படுகிறான். அவன் பேய் போல் அவளது முகத்திலும் உடலிலும் அடிக்கிறான். கெட்ட வார்த்தைகளால் திட்டுகிறான். மனரீதியாகவும் உடல்ரீதியாகவும் கணவனால் துன்புறுத்தப்படும் பெண்ணாக ரேவதி காட்டப்படுகிறாள்.[44]

இவ்வாறு மனைவியைக் காரணமின்றி அடிக்கும் கணவன்கள் பற்றிய சித்திரிப்பைக் காணமுடிகிறது.

### 4.2.6. சொற்களால் துன்புறுத்தப்படுதல்

உடல் சார்ந்த வன்முறையால் குடும்பத் தலைவியர் பாதிக்கப்படுவதோடு, வார்த்தைகளால் நிகழ்த்தப்படும் வன்முறைக்கும் அவர்கள் ஆளாகின்றனர். இவர்களது கணவன்கள் உச்சரிக்கும் வசைமொழிகள் பெரும்பான்மையும் பெண்ணைக் கொச்சைப்படுத்துவனவாகவே அமைகின்றன. உடல் சார்ந்த வன்முறைகள் தெள்ளத் தெளிவாய்த் தெரிவதைப் போல மனதைக் காயப்படுத்தும் வார்த்தையின் வன்முறைகள் வெளிப்படையாகத் தெரிவதில்லை. அதனால் ஆண்கள் எவ்வித குற்ற உணர்ச்சியுமின்றி வசைச்சொற்களை வாரி வீசுகின்றனர். பெண்ணின் நடத்தை மீதான ஐயப்பாடுகள், பிறந்த வீடு

பற்றிய கேலிகள், ‘அனைத்துப் பெண்களையும் இழிமொழிகள் என்ற வகையில் வசை மொழிகள்’ ஆண்களால் கட்டமைக்கப்படுகின்றன. பிரச்சினைக்குரிய நேரத்தில் ஒலிப்பதிவுகளுக்கும் எடுத்துச்செல்ல முடிவதில்லை. வசைச் சொற்களால் தாக்கப்படும் பெண்கள் மன உளைச்சலாலும் ஆறாத வடுவாலும் துயருறுகின்றனர்.

தமிழில் ஆண்களைச் சிறப்பிக்கும் மரியாதைக்குரிய சொற்களுக்கு நிகரான பெண்பாற்சொற்கள் அதிகமாகக் காணப்படவில்லை. மன்னன் என்பதற்கு நிகரான மன்னி என்ற சொல் வைக்கப்படவில்லை. கவிஞன் என்பதற்கு நிகராகக் ‘கவிஞர்’ என்ற சொல் முன்னர் வழக்கிலிருந்ததில்லை. ஆனால் வசைச்சொற்கள் பெரும்பான்மையும் பெண்ணின் உடலையும், பண்புகளையும் கொச்சைப்படுத்துகின்றன. ஆணைத் திட்டுவதற்குக்கூட பெண்சார்ந்த வசை மொழிகளே மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

பெண்ணைக் குத்திக் குதறும் வசைமொழிகள் இருவழிகளில் செயற்படுகின்றன.

4.2.6.1.மனைவியை நேரடியாகத்தாக்குபவை

4.2.6.2.தாய்மையைக் கொச்சைப்படுத்துபவை

என்ற வகையில் பெண்மையானது சொற்களின் வழி இழிவு படுத்தப்படுகிறது.

### 4.2.6.1 மனைவியை நேரடியாகத் தாக்குபவை:

‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவலில் வரும் மீனாவை, ஒழுக்கமற்ற பெண்ணைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் தடித்த வசைச் சொல்லால் தங்கவேலு திட்டுகிறான். பேட்டைகளில் எழும் பெண்ணுக்கெதிரான வசைக் சொற்கள் பற்றி விவரிக்கும் இராஜம் கிருஷ்ணன் “மட்டரகமான வசைகள் அவளைத் தாக்குகின்றன. மீனா எந்த வகையான சலனமும் காட்டவில்லை. இத்தகைய கலவரங்கள் அந்தப் பேட்டைக்குப் புதிதில்லை. ஒரு பெண்ணை முன்னிட்டு தகராறுகள், வசைகள் எதிர்த்தொடுப்புகள் மிகச்சாதாரணமான நிகழ்ச்சிகள். இவை குழாயடி, பொதுக்கழிப்பறை என்று நிர்ப்பந்தமானதோர் கூட்டுத்தேவைகளின்

இன்றியமையாத சந்தர்ப்பங்களில் பொறிபடர்ந்து, மனிதப் பண்புகளின் எல்லை தகர்ந்த நகரச் சூழலில் முழுக்காட்டும்''[45] என்று குறிப்பிடுகிறாள். ஆண் பெண்ணுடலைக் கொச்சைப்படுத்தும் வசைமொழியைப் பயன்படுத்துவது போலவே, சில பெண்களும் அதே வசை மொழியைப் பயன்படுத்துகின்றனர். பெண்ணுக்கெதிராக ஆணால் உருவாக்கப்படும், கற்பிக்கப்பட்ட இவ்வசை மொழிகள் பெண்களாலும், பயன்படுத்தப்பட்டு வருவதைச் சில இடங்களில் நாவலாசிரியர் வெளிப்படுத்தியுள்ளார்.

'மாறிமாறிப்பின்னும்' நாவலில் மனைவிக்குப் பல ஆண்களுடன் உறவு இருப்பதாகக் கருதி கணவன் கெட்ட வார்த்தைகளால் திட்டுகிறான்''[46]

இக்கதைகளிலிருந்து மனைவியை நேரடியான சொற்கள் வழி தாக்கும் கணவர்களின் தொடர்பியல் பயங்கரவாதத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது.

### 4.2.6.2 தாய்மையைக் கொச்சைப்படுத்துபவை:

இராஜம்கிருஷ்ணன் தாய்மையைக் கொச்சைப் படுத்தும் செயலுக்காய்க் கவலை கொள்ளுகிறார்

> ''குடிசைப்புறத்திலே மிக மோசமான வசை மொழிகள் கூட ஒரு பெண்ணின் ஒழுக்கக் கேட்டையும் கயமையையும் குறிப்பதாக இருக்கிறது. இதற்கு மேலான பண்புச் சீரழிவு கிடையாது என்பதைக் குறிக்க ஒழுக்கம் கெட்டவள் மகனே, மகளே என்று விளிப்பதுதான். குறைந்த பட்சம் ஒரு ஆணை வசைகொண்டு தாக்குவதற்குக் கூட அவன் தாயைப் பதிதையாக்குவது நியாயமாகக் கருதப்படுகிறது''[47]

என்று தெளிவுற விளக்குகிறார். மேற்காட்டிய சொல்தாக்குதல்கள் தாய்மையைக் குறிவைத்துக் கொச்சைப்படுத்துபவையாகும்.

### 4.2.7 திறமைகள் மதிக்கப்படாமை:

இயற்கை ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமான ஆற்றல்களை வழங்கியுள்ளது. அறிவும், திறமையும் இருபாலருக்கும் சமமாகவே உள்ளன. ஆனால் ஆணின் திறமைகள் மரியாதை செய்யப்படும் அளவுக்குப் பெண்ணின் திறமைகள் மதிக்கப்படுவதில்லை. கல்வியறிவு ஆளுமைத்திறன், தொழிற்புலமை ஆகிய அனைத்திலும் பெண் ஆற்றல் மிக்கவளாக இருந்தாலும், பெண் எனும் பாலின அடையாளம் அவளைக் கீழ்நோக்கி இழுக்கிறது. பாலின அடையாளத்தைக் காரணமாகக் கொண்டு பெண்ணினம் மதிக்கப்படாமலிருப்பதை இராஜம் கிருஷ்ணன் கண்டிக்கிறார்.

> "பெண் படித்தாலும், தொழில் செய்தாலும், புத்திசாலியாக இருந்தாலும், திறமையைக் காட்டினாலும் எல்லாவற்றுக்கும் எந்த மதிப்பும் அதிகமாகக் கிடையாது. பெண் பெண்தான். இந்தக் கசப்பான உண்மையை மீனாவால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை."[48]

இக்கசப்பான உண்மை 'ஓசைகள் அடங்கிய பிறகு' மீனாவால் மட்டுமல்ல, அனைத்துப் பெண்களாலும் ஏற்றுக்கொள்ள முடியாத சமூக அநீதியாக உள்ளது.

### 4.2.8 மேலாண்மைத்திறன் அங்கீகரிக்கப்படாமை:

குடும்பம், சமூகம், அலுவலகம், அரசியல் ஆகிய அனைத்திலும் ஆணின் தலைமைக்கு இணங்கிச் செல்லும் பெண்மையையே சமூகப் பொதுப்புத்தி அங்கீகரிக்கிறது. ஆண் தலைமையின் எண்ணவோட்டங்களை அப்படியே நடைமுறைப்படுத்தும் இரண்டாம் நிலையில் பெண் இருக்கும் வரை ஆண் சமூகத்துக்குக் கவலை எதுவும் இல்லை. தலைமையேற்றல், அதிகாரத்தைக் கைப்பற்றுதல், ஆணையிடுதல், கொள்கை உருவாக்குதல், பதவியேற்றல், மேலாண்மை செய்தல் ஆகிய உயர்நிலைக்குப் பெண் வரும் பொழுது ஆணின் எதிர்ப்புப் பல வடிவங்களில் கிளம்புவதை நடைமுறை வாழ்வில் காணமுடிகிறது. மட்டதட்டுதல், எதிர்கருத்துருவாக்குதல், ஒழுக்கம் பற்றிய ஐயங்களை எழுப்புதல், பயமுறுத்துதல், வன்முறையில் ஈடுபடுதல் போன்ற பல உத்திகளை

வகுத்துப் பெண் மேலாண்மைக்கெதிராக ஆண் சமூகம் செயல்படுவதைப் பெண்ணியப் பிரதிகள் கண்டனம் செய்கின்றன.

‘கோடுகளும் கோலங்களும்’ நாவலின் தலைமைப்பாத்திரமான செவ்வந்தியின் கணவன் ரங்கன் தன் நிலங்களைப் பயன்படுத்தி விவசாயம் செய்யாமல் தரிசாகப் போட்டிருந்த நிலையில் செவ்வந்தி விவசாயத்தைத் தனது கையிலெடுக்க முயலுகிறாள. அரசின் உதவியுடன் புதிய தொழில் நுணுக்க விவசாய முறைகளை நடைமுறைப்படுத்த முயன்ற போது ரங்கன் அதனை மட்டந்தட்டிப் பேசுகிறான்.

பெண் சாதியின் மேட்டிமைத்தனம் ரங்கனால் பொறுக்கமுடிமா என்ற ஆசிரியர் கூற்று மேலாண்மையை மேட்டிமைத்தனமாகக் கருதும் ஆணாதிக்கப் பார்வையை உணர்த்துகிறது. படிப்பறிவுக்கும், பயிரறிவுக்கும் வேறுபாடு இருப்பதாக அறிவுப் பூர்வமான உரையாடலை நிகழ்த்துபவனைப் போலவே ரங்கன் பேசுகிறான். ஆனால் அவனது பேச்சிற்குள் பெண் பற்றிய தட்டையான புரிதல் தென்படுகிறது.

> ‘‘என்னமோ ரெண்டு பொம்பளைங்க ஜீப்ல வந்து ஏறங்கி பயிரு வைக்கற பாடம் நடத்துனாங்களாம். இவங்களுக்குத் தலகால் புரியல, நாலு புஸ்தகத்த, அதுவும் இங்கிலீஷ் புஸ்தகத்தைப் படிச்சிட்டுப் பயிர் வைக்கிறதாம். உரமருந்து பூச்சி மருந்து அது இதுன்னு கெடங்கில் வெலயில்லாம கிடந்திச்சின்னா தலையில கட்ட இப்படி ஒரு சூட்சுமம் போல’’[49]

எனப் பெண்ணின் விவாசயம் சார்ந்த புதிய அணுகுமுறைகளை ரங்கன் நகையாடுகிறான்.

### 4.2.9.வேலைக்குச் செல்ல தடை:

பிறந்த வீடு பெண்ணின் கல்விக்குத் தடைவிதிக்கிறது. என்றால், புகுந்தவீடு பெண் வேலைக்குச் செல்வதற்குத் தடை விதிக்கிறது. பெண், கல்வியில் உயர்ந்து வேலைக்குச் சென்று விட்டால் கணவனை மதிக்கமாட்டாள் என்ற ஆணின் தாழ்வு மனப்பான்மையே அவளது வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுகிறது. மனைவி பொருளாதாரத்தில்

மேம்பாடு அடைந்து விட்டால் அதிக தன்னம்பிக்கை பெற்று கணவனின் தேவையற்ற மேலாண்மையைத் தகர்த்துவிடுவாள் என்ற எண்ணமும் இவ்வநீதிக்குக் காரணமாகிறது. படித்து வேலைக்குச் செல்லும் பெண் தலைக்கனம் மிக்கவளாக இருப்பாள் என்ற சமூகத்தின் பரவலான நம்பிக்கையும் பெண் வேலைக்குச் செல்வதைத் தடை செய்யும் காரணியாக உள்ளது.

மீனாவின் கணவனாகிய சாரங்கன் அவள் வேலைக்குச் செல்லக்கூடாது எனக் கண்டிப்பாகப் பேசுகிறான். ஒரு அழகான பெண் வெளியில் சென்றால் ஆண்களின் கண்கள் இச்சையாய் அவளை மொய்க்கும் என்பதால் பெண் வெளியில் செல்லக்கூடாது என்றும், வீட்டுக்குள் மட்டுமே இருக்க வேண்டும் என்றும் சாரங்கன் கூறுகின்றான்.

> ‘‘என் வீட்டைப் பாத்திட்டு எனக்கு குழந்தை பெற்றுக்கொடுத்து அவங்களைப் பார்த்துக்கிட்டாப் போதும். என் குடும்பத்திற்கு நான் மட்டுமே தலைவனாக இருக்கனும், என் வீட்டுக்கு மட்டுமே நீ....’’[50]

என் குடும்பம், என்வீடு, என் குழந்தை என்று கூறும் ஆணின் சுய நலத்துக்குக்கு உறுதுணையான கருவியாகப் பெண் மாற்றப்படுவதை இது உணர்த்துகிறது. பெண்ணின் புறம் சார்ந்த தொழில் வாழ்வு முடக்கப்பட்டு வீட்டுக்குள் அவள் சிறை வைக்கப்படுவதை இந்நிகழ்வு வெளிக்கொணர்கிறது. இன்னோரிடத்தில் சாரங்கன், பெண் வேலைக்குப் போவதற்குக் காரணமாகக் கல்வி அமைவதால், அப்பெண் கல்வி தடை செய்யப்பட வேண்டுமென்ற கருத்தைச் சொல்லுகின்றனர்.[51]

### 4.2.10 பிறந்த வீட்டோடு உறவு பாராட்டத்தடை:

திருமணம் முடிந்தபின் பெண் என்பவள் கணவன் வீட்டில்தான் வாழவேண்டும் என்று ஆணாதிக்கச் சமூகம் வகுத்து வைத்துள்ளது. கணவனின் வீட்டுக்குச் செல்லும் பெண் அதன் பின்னர் பிறந்த வீட்டோடு உறவு பாராட்ட பெரும்பான்மையும்

அனுமதிக்கப்படுவதில்லை. வீட்டு விழாக்கள், இழப்புகள் போன்ற நிகழ்வுகளுக்கு மட்டும் கடமைக்காக அவள் சென்று வர அனுமதிக்கப்படுகிறாள். பிறந்த வீட்டு உறவுகளோடு அன்பு பாராட்டுதல், அடிக்கடி விருந்துக்குச் செல்லுதல், பெண் வீட்டார் கணவன் வீட்டுக்கு வருதல், பிறந்த வீட்டில் யாராவது நோயால் துயருறும் போது கவனிக்கச் செல்லுதல், பொருளாதார உதவி செய்தல் ஆகியவற்றுக்குக் கணவன் வீட்டில் மறை முகத்தடை விதிக்கப்படுகிறது. பெண் தன் வீட்டு உறவுகளை முழுமையாகத் துடைத்தெறிந்து விட்டு, திருமண உறவுக்குள் நுழைய வேண்டும் என்ற நடைமுறை பெண்ணுக்கு இழைக்கப்படும் அநீதிகளில் ஒன்றாக விளங்குகிறது.

'மாறிமாறிப் பின்னும்' நாவலின் கதைத் தலைவியான ரேவதியைப் பார்க்க அவளது உடன்பிறப்பான வேம்பு வந்து சென்றதனை அவளது கணவன் எதிர்க்கிறான். தனது சட்டைப் பையிலிருந்த பேனாவை வேம்பு திருடிச்சென்று விட்டதாகவும் பழி சுமத்துகிறான். அதன் பிறகு வேம்புவும் ரேவதியும் சந்திப்பது என்பது எப்போதாவது நடைபெறும் நிழச்சியாகிவிடுகிறது.[52]

'தோட்டக்காரி' நாவலில் சரயுவின் மகள் சுமதி கல்லூரிப் பேராசிரியரை மணந்து அடக்குமுறைக்கு உள்ளாகிறாள். அவள் அரசுப்பணியாற்றுவதால் குழந்தைகளைப் பெற்றோர் வீட்டில் விட்டு வளர்க்கிறாள். தாய் வீட்டிற்குச் சென்று அக்குழந்தைகளை அடிக்கடி பார்ப்பதற்குக் கூட அவளுக்கு சுதந்திரம் இல்லாதிருப்பதை அந்நாவல் குறிப்பிடுகிறது.[53]

### 4.2.11 விருப்புகள் புரிந்து கொள்ளப்படாமை:

குடும்பம் என்ற அமைப்பில் பெண் என்பவள் ஆணுடைய விருப்பு வெறுப்புகளைப் புரிந்து நடந்து கொள்ளுகிறாள். ஆணோ மனைவியின் விருப்பங்கள் எதனையும் அறிந்து கொள்வதில்லை. அவற்றை நிறைவேற்ற முயலுவதுமில்லை. மனைவிக்குப் பிடித்த உணவு, உடை,

நிறம், பொழுதுபோக்கு இன்னபிற ஈடுபாடுகளைப் பற்றி ஆண் கவலைப்படுவதில்லை. கற்பியல் வாழ்வில் பெண்ணின் சுய விருப்புகளுக்கு முக்கியத்துவம் இல்லாமல் போய்விட்டது. அப்படியே பெண் தன் விருப்புகளை வெளிப்படுத்தினாலும் ஆணென்னும் அகம்பாவம் அதனை நிராகரித்து விடுகிறது.

'மாறிமாறிப் பின்னும்' நாவலில் ரேவதி கணவன் பாத்திரம் மூலம் மேற்காட்டிய கருத்தை விளக்குகிறார். ரேவதி படிப்பதற்குப் புத்தகங்களோ, இதழ்களோ வாங்கிக் கொடுப்பதில்லை. ஆசையாக ஒரு முழம் பூ கூட வாங்கிக் கொடுத்ததில்லை. ரேவதியின் ஆசை எதனையும் புரிந்து கொள்ளாத கணவனாக அவன் காட்டப்படுகிறான்.[54]

'கோபுரபொம்மைகள்' நாவலில் அபிராமியின் கணவன் நாதன் எனும் சுதந்திரப் போராட்ட தியாகி ஆவார். அவர் நாட்டுக்காகக் கடுமையான தியாகங்களை நிகழ்த்தியுள்ளதாக அனைவராலும் பாராட்டப்படுகிறார். ஆனால் வீட்டுக்குள் அவரது பங்களிப்பு மிகவும் மோசமானதாக உள்ளது. அவர் கைவைத்தால் அபிராமி பலியாடு மாதிரி அனைத்திற்கும் உடன்பட வேண்டிய நிலை காட்டப்படுகிறது. மனைவிக்குப் பூ வாங்கிக் கொடுப்பதில்லை. ஆடைகள் வாங்கிக் கொடுத்து மகிழ்ச்சிப்படுத்துவதில்லை. இசை போன்ற புறநிகழ்ச்சிகளுக்கு அழைத்துச் செல்வதில்லை. சாப்பிட்டாயா? என்று ஒரு நாளிலும் விசாரிப்பதில்லை. அவள் வீடு எனும் குறுகிய புழங்கு வெளிக்குள் ஆணி அடித்து நிறுத்தப்படுகிறாள்.[55]

இவ்வாறு பெண்ணின் விருப்புகளுக்கு மதிப்பளிக்கப்படாமையைக் கோபுர பொம்மைகள் நாவல் நுவலுகிறது.

### 4.2.12 நம்பிக்கையின்மை:

பெண்ணின் ஒழுக்கத்தை ஆண் சமூகம் பல வடிவங்களில் ஐயுறுகிறது. வீட்டுக்குத் தாமதமாக வரும் மகளின் நடத்தை மீது தந்தை ஐயம் கொள்கிறார். ஆணுடன் இயல்பாகச் சிரித்துப் பேசினால் குடும்பத்தார் மற்றும் ஊராருக்கு ஐயம் எழுகிறது. அலுவலகத்துக்குச்

சென்று வரும் பெண்கள் மீது கணவன்களுக்கு ஐயம் எழுகிறது. பெண் கருவைச் சுமக்கும் போது குழந்தையின் தந்தை பற்றிய ஐயம் சில ஆண்களுக்கு எழுகிறது. நன்கு அலங்கரித்து வெளியில் செல்லும் பெண் பிற ஆடவரை மயக்கச் செல்லுவதாகக் கருதுவோரும் உள்ளா். உடன்பிறந்த சகோதரனிடம் பழகுவதைக் கூட ஐயுறும் கணவன்களையும் காணமுடிகிறது. இவ்வித அனைத்து ஐயங்களையும் கொண்டவனாக 'ஓசைகள் அடங்கிய பிறகு' சாரங்கள் காணப்படுகிறான். குறிப்பாக, மீனா அவளது அண்ணன் மாணிக்கத்திடம் பாசமாக இருப்பதற்குச் சாரங்கன் தவறான பொருள் கற்பிக்கிறான்.

> ''குப்பத்து அண்ணன் தங்கை உறவுக்கு எனக்குப் பொருள் தெரியாதுன்னு நினைக்காதே. அங்கே கூட பிறந்த அண்ணன் தங்கை உறவே.. உறவில்லை''[56]

என்கிறான். மீனாவுக்கும் ராமலிங்கத்துக்கும் உறவு இருப்பதாகவும் சாரங்கன் ஐயுறுகிறான். மேலும் இராமலிங்கத்தின் மகனுக்கும் மீனாவுக்கும் ஐயத்தின் மொத்த உருவகமாகச் சாரங்கன் காட்டப்படுகிறான். பெண்ணைச் சுற்றி கட்டியெழுப்பப்படும் ஆணின் ஐயங்கள் பற்றிய புரிதலை இவ்வகைக் கதாப்பாத்திரங்கள் உருவாக்குகின்றன.

### 4.2.13 திருமண விலக்கம்:

ஆணும், பெண்ணும் இணைந்து வாழ்வதற்காக உருவாக்கப்பட்ட அமைப்பான திருமணம் தோல்வியில் முடிவதை இராஜம் கிருஷ்ணன் தனது நாவல்களில் வெளிப்படுத்துகிறாா். மனைவியைத் திட்டுதல், அவமானப்படுத்துதல், அடித்தல், தாக்குதல் எனப் பல அதிகாரச் செயல்பாடுகளை நிகழ்த்தும் அவன், இறுதியில் அவளை விலக்கி விடுவதற்கும் காரணமாக அமைந்து விடுகின்றான். திருமண உறவின் அா்த்தமின்மையைத் தொடா்ந்து நிரூபிப்பதில் பெரும்பான்மையும் ஆணே முன்னிலை வகிக்கின்றான். கணவனால் கைவிடப்பட்டு குழந்தைகளைக் காப்பாற்ற போராடும் பெண்களைச் சமூகத்திலும்

பெண் எழுத்தாளர் தம் படைப்புகளிலும் காணமுடிகிறது. கணவனைப் பிரிந்து அல்லது கணவனால் விலக்கப்பட்டு புகுந்த வீட்டிலிருந்து தாய்வீட்டிற்குத் திரும்பிய பெண்ணுக்கு வாழாவெட்டி எனும் சிறப்புப் பெயரை வழங்கும் சமூகம், ஆணுக்கு 'வாழா வெட்டன்' என்ற பட்டம் வழங்கிச் சிறப்பிப்பதில்லை. குடும்ப வன்முறையின் உச்சமாக மண விலக்கத்தைக் குறிப்பிட முடிகிறது. 'சேற்றில் மனிதர்கள்' நாவலில் குப்பனின் இளைய மகள் பஞ்சமி கணவனின் வீட்டில் துன்புறுத்தப்பட்டுத் துரத்தப்படுகிறாள். தாய் வீட்டிற்குத் திருப்பியனுப்பப்பட்டவளாக அவள் காட்டப்படுகிறாள்.[57]

குடும்ப வாழ்வு ஆணுக்கொரு நீதியையும் பெண்ணுக்கொரு நீதியையும் வகுத்துப் பின்பற்றுகிறது. திருமணமான பின் பெண்ணுக்கு ஏதேனும் உடற்குறை இருந்தால் அதனைப் பெரிதாக்கி அவளுக்குத் தாழ்வு மனப்பான்மையை உருவாக்கி இறுதியில் குடும்ப உறவிலிருந்து அறுத்து அகற்றிவிடும் அநீதிகளை அரங்கேற்றி வருவதைப் 'புயலின் மையம்' நாவல் உணர்த்துகிறது.

காத்யாயனிக்கும் அவளது அத்தை மகனுக்கும் திருமணம் நடைபெற்றது. கோவா விடுதலைக்குப் போராடிய அவருக்கு மனநிலை பாதிக்கப்பட்டது. திருமண உறவின் உடல் தேவைகள் எதுவும் நிறைவேறாவிடினும் காத்யாயனி தன் கணவருடனேயே வாழ்ந்து வந்தாள். இதனை வசந்தி கண்டிக்கிறாள். பெண்ணுக்குக் குறையிருந்தால் அவளைக் குடும்ப உறவிலிருந்து துண்டித்து விடும் சமூகம் ஆணுக்குக் குறையிருந்தால் மட்டும் மௌனத்தைக் கடைபிடிப்பதனை வசந்தி விமர்சிக்கிறாள்.

> ''நானாக இருந்தால் எப்பவோ விடுதலை வாங்கிட்டுப் போயிருப்பேன். பெண்ணுக்கு மட்டும் ஏன் ஒரு நியாயம்? இதுவே ஆணாக இருந்து, பெண்ணுக்கு ஏதேனும் ஒரு கோளாறுன்னா உடனே அவளைப் பிறந்த வீட்டுக்கு

அனுப்பிட்டு, அவகிட்டேந்து எழுதி வேற வாங்கிண்டு கல்யாணம் செய்யலாம்”[58]

என்று நீதிகளிலிருக்கும் இரட்டை நிலைப்பாட்டைப் பேசுகிறாள். மணவிலக்குத் தேவைப்படும் பெண்கள் மணவிலக்குக் கோரமுடியாமையும், மணவிலக்குத் தேவைப்படாத பெண்கள் மணவிலக்குமூலம் துன்புறுத்தப்படுவதும் குடும்ப வன்முறையாகவே தோற்றமளிக்கின்றன.

இவ்வியலில் திருமணத்துக்கு முன் பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள் விரிவாக எடுத்துக்கூறப்பட்டுள்ளன. திருமணத்துக்குப்பின் குடும்ப அமைப்புக்குள் பெண்கள் சந்திக்கும் சிக்கல்களும் ஆராயப்பட்டுள்ளன. வேலைக்காரியாகவும், பாலியல் கருவியாகவும் உருமாற்றப்படும் பெண்ணின் துயரங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. பெண்ணிடமிருந்து பறிக்கப்பட்ட உரிமைகள் குறித்தும் விவாதிக்கப்பட்டுள்ளன. காலமும் வெளியும் கட்டுப்படுத்தப்படுதல் குறித்தும் பேசப்பட்டுள்ளன. குடும்பத்துக்குள் காணப்படும் ஆணின் அதிகாரம், அரசியல் ஆகியவையும் விளக்கப்பட்டுள்ளன.

## சான்றெண்விளக்கம்

1. அரங்க.மல்லிகா, அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.94
2. செ. கணேசலிங்கன், பெண்ணடிமை தீர, ப.2
3. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.32
4. மேலது, ப.162
5. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.61
6. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப்பூந்துளிகள், ப.54
7. மேலது, ப.66
8. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.61
9. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், ப.263
10. இராஜம்கிருஷ்ணன், விலங்குகள், ப.114
11. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், ப.50
12. மேலது, ப.50
13. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.37
14. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், பக்.163-164
15. இராஜம்கிருஷ்ணன், மாயச்சுழல், ப.38
16. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.91
17. இராஜம்கிருஷ்ணன், மாயச்சுழல், ப.241
18. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.149
19. இராஜம்கிருஷ்ணன், கோபுரப்பொம்மைகள், ப.26
20. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், பக்.52-53
21. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.43

22. அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.119

23. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.8

24. பிரேமலதா, அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர் அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.117

25. மேலது, ப.84

26. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.54

27. மேலது, பக்.102-103

28. அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.71

29. பத்மபிரியா, பெண்ணிய இலக்கியப்பதிவுகள், ப.23

30. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், பக்.54-55

31. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள் ப.18

32. அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.72

33. இராஜம்கிருஷ்ணன், கோபுரப்பொம்மைகள், ப.47

34. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப் பின்னும், பக்.39-40

35. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.59

36. இராஜம்கிருஷ்ணன், மாயச்சுழல், ப.17

37. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.59

38. கணேசலிங்கன், பெண்ணடிமை தீர, ப.23

39. இராஜம்கிருஷ்ணன், அலைவாய்க் கரையில், ப.27

40. மேலது, ப.149

41. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.27

42. இராஜம்கிருஷ்ணன், அவள், ப.52

43. இராஜம்கிருஷ்ணன், மாறி மாறிப் பின்னும், ப.134

44. மேலது, ப.127

45. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.166

46. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப் பின்னும், ப.87

47. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு பக்.245, 246

48. மேலது, ப.71

49. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.17

50. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.218

51. மேலது, ப.227

52. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப் பின்னும், ப.24

53. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, பக்.15-16

54. இராஜம்கிருஷ்ணன், கோபுரப் பொம்மைகள், ப.11

55. இராஜம்கிருஷ்ணன், கோலங்களும் கோடுகளும், ப.25

56. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.263

57. மேலது, ப.263

58. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.13

## இயல்-5

## சமுதாயச் சிக்கல்கள்

இலக்கியங்கள் சமுகத்தைப் பிரதிப்பலிக்கும் கண்ணாடியாக விளங்குகின்றன. சமுதாய மறுமலர்ச்சிக் காலகட்டத்தில் தோன்றிய இலக்கிய வகைமையாகிய நாவலிலும் சமுதாயம் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. மக்கட்தொகுதியின் ஒருங்கமைவு, வாழ்வியல், பண்பாடு, உறவுமுறைப்பிணைப்பு, சிக்கல்கள், போராட்டங்கள், முரண்கள் போன்றவற்றைப் படைப்பாக்கம் செய்யும் சமூகப்பார்வை மிக்கப் படைப்புகள் தமக்கென தனித்த இடத்தைப் பிடித்துள்ளன. தூய கலைவாதிகளின் எதிர் தாக்குதல்களைப் பொருட்படுத்தாமல் வளர்ந்து வரும் இவ்விலக்கிய வகையின் இருப்பு முக்கியமானது. சமுதாயத்தின் பெருமிதங்களைப் பதிவு செய்யும் சமுதாய நாவல்கள், அவலங்களை விமர்சிக்கத் தவறுவதில்லை. தனிமனித விநோத மனங்களை விவரிப்பதைவிடச் சமூகத்தைச் சித்திரித்தல் என்பது தாழ்வானதன்று. அகவேட்கை, பிறழ்வு உளவியல், விதிவிலக்கான நடத்தைக்கோலம் ஆகியவற்றை எழுதுவதுதான் உயர்ந்த கலைப்படைப்பு என்று கருதப்படுவது ஏற்புடையதன்று. ஏனெனில் நாளைய தலைமுறைக்கான இன்றைய சமூக வரலாற்று ஆவணம் இலக்கியமே ஆகும். சமுதாயத்தை எழுத்துக்குள் தேக்கி வைக்கும் பணியை நவீன இலக்கியங்கள் செவ்வனே செய்து வருகின்றன. மேற்கத்திய இசங்களுக்குள் சமுதாய நாவலை அடக்க முடியாமை அதன் குறையன்று. செல்வத்தில் மிதக்கும் மேலைச்சமூகத்தின் அறிவு அளவுகோல்களால் மூன்றாம் உலக நாடுகளின் இலக்கியத்தரத்தை மதிப்பிடுதல் இயலாது. மூன்றாம் உலக நாடுகள் எண்ணற்ற சிக்கல்கள் நடுவே உழன்று கொண்டிருப்பவை. இந்தியாவும் மூன்றாம் உலக நாடுகளில் ஒன்றாகவே கருதப்படுகிறது. இந்தியாவில், குறிப்பாகத் தமிழ் எல்லைக்குட்பட்ட பகுதியில் சமுதாயத்தின் உள்ளும் புறமும் மண்டிக்கிடக்கும் அவலங்களை வெளிக்கொணர்வதும் தீர்வுகளைத் தேடுவதுமே இன்றைய தேவையாக

உள்ளது. இராஜம் கிருஷ்ணன் சமுதாயச் சிக்கல்களைக் கதையோட்டத்தின் நடுவே விளக்கிச் செல்கிறார். இராஜம் கிருஷ்ணன் புனைகதைகளில் கீழ்க்காணும் சமுதாயச் சிக்கல்களைக் காணமுடிகின்றன. அவை:

5.1. பெண் சிசுக் கொலை
5.2. குழந்தைத் தொழிலாளர் பிரச்சினை
5.3. குழந்தைத் திருமணம்
5.4. பெண்கல்வி மறுக்கப்படுதல்
5.5. வரதட்சணை
5.6. இம்சைக் கலாச்சாரம்
5.7. ராகிங் கொடுமை
5.8. பாலியல் சுரண்டல்
5.9. வன்புணர்வு
5.10. பரத்தமை
5.11. கைம்பெண் சிக்கல்கள்
5.12. வேலைக்குச் செல்லும் பெண்களின் சிக்கல்கள்
5.13. ஊடகச் சீர்கேடுகள்
5.14. அதிகார வன்முறை
5.15. கலாச்சார நெருக்கடி

என்பனவாகும்.

**5.1. பெண் சிசுக்கொலை:**

கருவறை முதல் கல்லறை வரை பெண் எதிர்கொள்ளும் சிக்கல்கள் எண்ணற்றவையாகும். ஆண்கள் சந்திக்கும் சிக்கல்களினின்று இவை வேறுபட்டவையாகும். பெண் பூமியில் மனிதப் பிறவியாகத் தோன்றும் முன்னரே அவளைச் சுற்றிச் சிக்கலின் வலை பின்னப்பட்டு வருகிறது.

ஆறுகளையும், நாட்டையும், பூமியையும் பெண்ணாகப் பார்க்கும் மண் என்று மார்தட்டிக் கொள்ளும் இந்தியச் சமூகம் மனித குலத்தில் மட்டும் பெண்ணுக்கு உரிய மரியாதை வழங்காமலிருப்பதை அதன் முரண் எதிர்வாகக் கொள்ளமுடிகிறது. ஆணை ஆளப்பிறந்தவனாக

மதிப்பிடும் சமூகம் பெண்ணை மாளப் பிறந்தவளாக புரிந்து கொள்கிறது. பிறக்கப்போகும் குழந்தை ஆணாக இருக்க வேண்டும் என்ற வேண்டுதல்கள் பல்வேறு கடவுளரை நோக்கி இந்தியச் சமூகத்தில் எழுப்பப்படுகின்றன. பெண் குழந்தை பெற்றெடுத்தால் தாயின் உயிரையே பறித்துவிடுவதாக மிரட்டும் கணவன்களும் இங்கு மலிந்து காணப்படுகின்றனர். பிறக்கப்போகும் குழந்தையின் பாலினத்தைத் தீர்மானிக்கும் பொத்தான் தாயின் கையில் இல்லை என்று தெரிந்த பின்னரும், பெண் குழந்தையின் பிறப்புக்குத் தாய்மீது பழிபோடும் செயல்களும் மிகுந்து காணப்படுகின்றன. ஆண்களிடம் பெண் குழந்தையை வரவேற்கும் எண்ணவோட்டம் இல்லாதிருக்கும் அதே பொழுதில், பெண்களே பெண் குழந்தை பிறப்பதற்கு எதிரியாக இருப்பதையும் சமூகத்தில் காணமுடிகிறது. பெண் குழந்தை பிறப்பதை மனதளவில் ஏற்கமுடியாத மக்கட் தொகுதியின் ஒரு கூட்டம் அப்பெண் குழந்தையைக் கருவுக்குள்ளேயே அழிக்க முயலுகிறது. வயிற்றுக்குள்ளிருக்கும் குழந்தையின் பாலின அடையாளத்தைத் தெரிவிக்கும் நவீனத் தொழில் நுட்பம் கருவிலேயே பெண் சிசுவை நசுக்குவதற்கு ஏதுவான ஒரு காரணியாக உள்ளது. கருவிலிருக்கும் குழந்தை ஆணா? பெண்ணா என்று பார்த்துச் சொல்லப்பட மாட்டாது என அரசுக்குப் பயந்து கூறிக்கொள்ளும் மருத்துவ அறிவுக் கூட்டத்தின் ஒரு பகுதி சட்டத்தை மீறிப் பாலியல் அடையாளத்தைச் சுட்டிவிடுவதையும் சில இடங்களில் காணமுடிகிறது. பெண் சிசுக்கொலையை இராஜம் கிருஷ்ணனின் எழுத்து எதிர்க்கிறது. பெண் சிசுக்கொலை நிகழ்வதற்குக் கீழ்காணும் காரணங்களைச் சுட்டமுடிகிறது.

அவை

5.1.1. பெண் குழந்தையை வெறுக்கும் தாய்

5.1.2. கணவனின் எதிர்ப்பு

5.1.3. வரதட்சணை போன்ற சமூகக்கொடுமைகள்

5.1.4. மருத்துவ வளர்ச்சி

என்பனவாகும்.

### 5.1.1. பெண் குழந்தையை வெறுக்கும் தாய்

பெண் குழந்தையைப் பெண்ணே வெறுக்கும் கொடிய நிலை உள்ளது. 'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவலில் வெள்ளைச்சாமி குடும்பக்கட்டுப்பாட்டு அறுவை சிகிச்சை செய்த பின்னர் அவனது மனைவி அழகாயி கருவுற்று விடுகிறாள். மூன்று பெண் குழந்தைகள் இருந்தும் அதில் நிறைவுறாத அழகாயி, ஆண் குழந்தை வேண்டும் என ஆவல் கொள்கிறாள். பாட்டியும் ஆண் குழந்தை பெறாத ஆண் ஆணல்ல என்ற கருத்தைப் பதிய வைக்கிறாள். வேற்று உறவால் பிறந்த அக்குழந்தை பெண்ணினம் சார்ந்ததாக இருந்தது. பிறந்தது பெண் குழந்தை என்பதால் அது பெற்ற தாயான அழகாயியால் கொல்லப்படுகிறது.

> "அன்று.... அந்தச் சிசுவை, பாட்டி அகன்றதும் சுவாசத்தில் இரண்டு நெல்மணிகளைப் போட்டு முடித்துவிட்டாள். விடிந்து செய்தி கேள்விப்பட்டு வந்த புருஷன் செத்த பிண்டத்தை அந்தக் கொல்லையில்தான் புதைத்தான்"[1]

எனப் பெண்சிசுக்கொலையில் பெண்ணே முன்னிற்பது சொல்லப்படுகிறது.

### 5.1.2. கணவனின் எதிர்ப்பு

பெண் குழந்தை பிறப்பதை எதிர்க்கும் கணவனும், பெண் சிசுக்கொலை நிகழக்காரணமாகிறான் என்பதற்கு ஒரு நிகழ்வை இவ்விடத்து எடுத்துக்காட்டுவது பொருத்தமானது. மருத்துவமனையில் ஒரு பெண் முதலிரண்டு பெண் குழந்தைகளைத் தொடர்ந்து, மூன்றாவதும் பெண் குழந்தையாகப் பிறந்தபோது அழுகிறாள். மூன்றாவது பெண் குழந்தை பிறந்தால் அவளது கணவன் அவளைக் கொன்று விடுவான் என்று கூறி அழுகிறாள். அதிகாலையில் தாயும் மகளும் மருத்துவமனையிலிருந்து தலைமறைவாகி விடுகின்றனர். பெண் குழந்தை பிறந்தால் அவற்றைக் கொன்றுவிடும் வழக்கம் அப்பகுதியில் இருப்பதாகப் பெண் மருத்துவர் கூறுகின்றார்."[2]

‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவலும் பெண் சிசுக்கொலைக்கு கணவனின் எதிர்ப்பைக் காரணமாகக் காட்டுகிறது. பெண் குழந்தை பிறந்தால் தாயைக் கொன்று விடுவதாக மிரட்டும் கணவன் இந்நாவலில் ஒரு பாத்திரமாய்ப் படைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.[3]

மேலும், பெண் குழந்தை பிறந்தால் தாயைக் கொன்று விடுவதாக மிரட்டும் கணவர்களின் செயல்பாடு பெண் சிசுக்கொலைக்கான முக்கிய காரணமாக அமைவதை நாவல் சுட்டுகிறது. எல்லா ஊரிலும் பெண் சிசுக்கொலை நிகழ்வதாக ‘மண்ணத்துப் பூந்துளிகள்’ நாவல் கூறுகிறது.[4]

### 5.1.3. வரதட்சணை போன்ற சமூகக்கொடுமைகள்

வரதட்சணை பயத்தால் முன்னரே பெண் குழந்தையைக் கொல்லும் கொடுமையும் சொல்லப்படுகிறது. பூவுக்குப் பெண் குழந்தை பிறந்த போது அதனைக் கொன்று விடும்படி அவளுக்கு அறிவுறுத்தப்படுகிறது. அதற்கான காரணம் பிற்காலத்தில் திருமணத்திற்கு வரதட்சணை கொடுக்க இயலாது என்பதுதான்.

> “முப்பது ஏக்கர் சம்சாரி வீட்ல ரெண்டாவது பொட்டபுள்ள வாணாமின்னு எருக்கம்பாலக் குடுத்துக் குழியில் போட்டுட்டாங்க. வெர பெரசின்னா அதுக்குத் தக்கினபடி வீங்கணுமில்ல? நூறு பவுன் கொண்டாங்கிறான். நீ கஞ்சி குடிக்க நாதில்லாம, அடுப்பாண்ட வெந்தே, இந்தப் பொட்டயா ஒங்குடும்பத்த இனிமே வெளங்க வெக்கப்போவது? எதுக்கு இந்த சனிய? இதத் தொலச்சி கெனாப் போல நினைச்சிட்டு நல்ல கொணமா, வாஞ்சனையா ஓராம்புளய கெட்டிவையி இதென்னாத்துக்கு”[5]

‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவலில் ஏராளமான பெண் சிசுக்கொலைகள் காட்டப்படுகின்றன. பெண் பிறந்தால் பிற்காலத்தில் வரதட்சணை கொடுக்க வேண்டியது வரும் என்பதற்காகவே பல பெண்சிசுக் கொலைகள் நிகழ்ந்ததாகக் காட்டப்படுகிறது.

### 5.1.4. மருத்துவ வளர்ச்சி

விஞ்ஞான வளர்ச்சி கருவிலேயே குழந்தையின் பாலினத்தை அடையாளப்படுத்தி, பெண் சிசுவைக் கொலை செய்ய வழிவகுக்கிறது.

> “டவுனில் நாலுமாசம் ஆவுமின்னியே, பொட்டயா ஆணான்னு கண்டுபுடிக்கிறாங்களாம், பொட்டன்னா ஊசி போட்டுக் கரப்பாங்களாம்”[6]

என மருத்துவ வளர்ச்சி பெண்ணைக் கருவிலேயே அழிப்பதற்குத் துணை போவதையும் மண்ணகத்துப் பூந்துளிகள் நாவல் சொல்லுகிறது.

## 5.2. குழந்தைத் தொழிலாளர் பிரச்சினை

தொழிற்சாலை, வியாபாரம், வீட்டுவேலை போன்ற எந்த வேலையிலும் குழந்தைத் தொழிலாளர்கள் பயன்படுத்தக்கூடாது என்று அரசு உறுதிபடச் சட்டமியற்றினாலும் குழந்தைத் தொழிலாளர்களைப் பல்வேறு தொழில்களில் காணமுடிகிறது. பீடி சுற்றுதல், தீப்பெட்டித் தொழிற்சாலை, பட்டாசுத் தொழிற்சாலை, உணவு விடுதி போன்ற பல்வேறு தொழில்களில் அவர்கள் ஈடுபடுத்தப்படுகின்றனர். வறுமையும் வயிற்றுப்பசியும் அவர்களைச் சிறுவயதிலேயே தொழிற்களங்களில் கொண்டு வந்து நிறுத்துகிறது. குழந்தைத் தொழிலாளர்கள் அதிகமாகப் பயன்படுத்தப்படும் இரண்டு தொழில்கள் பற்றி இராஜம்கிருஷ்ணன் விளக்குகிறார். அவை,

5.2.1. உப்பளத் தொழில்

5.2.2. தீப்பெட்டித் தொழில்

ஆகியவையாகும்.

### 5.2.1. உப்பளத் தொழில்:

உப்பளத்தொழிலில் இரண்டு ரூபாய் கூலிக்காகப் பாத்திமிதிக்கும் சிறுவர்களையும், சிறுமிகளையும், ‘கரிப்பு மணிகள்’ நாவல் காட்டுகிறது.

மாவாக்கப்பட்ட உப்பைப் பெட்டி பெட்டியாகச் சுமந்து கொட்டடிக்குள் குவிக்கும் பணியில், சிறுவர் சிறுமிகள் மிகுந்திருப்பதை நாவல் காட்டுகின்றது. இவ்வாறு ஆண் மற்றும் பெண் குழந்தைகள் ஒருசேர இச்சமூகக் கொடுமைக்கு ஆளாவதை நாவல் சுட்டிக்காட்டுகிறது.

### 5.2.2. தீப்பெட்டித்தொழில்:

‘கூட்டுக்குஞ்சுகள்’ நாவல் குழந்தைத் தொழிலாளர் பிரச்சினைகளை விரிவாகப் பேசுகிறது. குழந்தைகளின் பெற்றோர் வருமானத்துக்காகக் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பாமல் தீப்பெட்டித் தொழிற்சாலைக்கு அனுப்புகின்றனர். அதிகமான கட்டைகள் அடுக்கும்படி பெற்றோர்கள் குழந்தைகளுக்கு நெருக்கடி கொடுக்கின்றனர். பதினான்கு வயதுக்கு மேற்பட்டவர்கள் தீப்பெட்டித் தொழிற்சாலையில் வேலை பார்க்க வேண்டும் என்ற அரசு விதியை மீறுவது பற்றிய குற்றவுணர்ச்சி எதுவும் அவர்களிடம் இல்லை. குழந்தைகள் அதிகாலை ஐந்து மணிக்கே தொழிற்சாலைக்கு அழைத்து வரப்படுகின்றனர். தொலைவிலிருக்கும் குழந்தைகள் அதிகாலை மூன்று மணிக்கே எழுப்பி விடப்படுகிறார்கள். பகலுணவுக்கென்று தனியாக நேரம் எதுவும் ஒதுக்கப்படுவதில்லை. நாள் முழுக்க பதினான்கு மணிநேரம் வேலை செய்ய அக்குழந்தைகள் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். குழந்தைகள் சரியாக வேலை செய்யவில்லையென்றால் கணக்கப்பிள்ளையால் அடிக்கப்படுகிறார்கள். இவ்வாறு குழந்தைத் தொழிலாளர் சந்திக்கும் சிக்கல்கள் குறித்துக் ‘கூட்டுக்குஞ்சுகள்’ நாவல் பேசுகிறது.

### 5.3. குழந்தைத் திருமணம்:

பெண் குழந்தை பிறந்தவுடனே அதற்கான கணவன் யாரெனச் சுற்றத்தாரால் தீர்மானிக்கப்படும் கொடுமை இந்திய விடுதலைக்கு முன்னர் மிகுந்திருந்தது. சட்டத்தின் வழியாக அக்கொடுமை பெரிய அளவில் குறைக்கப்பட்டாலும் பருவம் எய்தியவுடனே மணம் முடித்துக் கொடுக்கும் கொடுமை இன்றளவும் நீடிக்கிறது. பதினெட்டு வயது தாண்டிய பின்னர்தான் ஒருபெண் மனதளவிலும், உடலளவிலும் முழுமையாக வளர்ச்சி பெறுகிறாள் என்று மருத்துவத்துறையின் அறிவுறுத்தல்களைச் சில இடங்களில் பொருட்படுத்தப்படாத நிலை உள்ளது. பெண்ணின் கல்வி, வேலை வாய்ப்பு, சுயபொருளீட்டல், மனப்பக்குவம் ஆகிய அனைத்தையும் கருத்தில் கொள்ளாமல் குழந்தைத் திருமணங்கள் நடைபெற்ற வண்ணம் உள்ளன. இச்சிக்கல் குறித்த மேலோட்டமான செய்திகளை இராஜம்கிருஷ்ணனின் புனைகதைகளில் காணமுடிகிறது.

'மாறிமாறிப் பின்னும்' நாவலில் வரும் ரேவதிக்கு ஒன்பதாம் வகுப்பு படிக்கும் போது திருமணம் நடைபெறுகிறது. பதின்மூன்று வயதில் பத்தொன்பது வயது கொண்ட மல்லிநாதன் என்பவனை மணக்கிறாள். பெண்ணுக்கான திருமண வயது பதினெட்டு என அரசு அறிவித்த பின்னரும் சிறுவயதுத் திருமணங்கள் நடைபெறுவதை இது எடுத்துக்காட்டுகிறது.

நாட்டு விடுதலைக்கு முந்தைய கால கட்டத்தில் மூன்று வயதிலும், ஐந்து வயதிலும் பெண்ணுக்கு மணம் முடித்துவைத்தமையை 'மானுடத்தின் மகரந்தங்கள்' நாவல் நினைவூட்டுகிறது.[7]

### 5.4 பெண்கல்வி மறுக்கப்படுதல்:

ஆண் உயர்கல்வி கற்பதை வரவேற்கும் சமூகம் அதே அளவுக்கான ஏற்றத்தைப் பெண்கல்விக்கு வழங்குவதில்லை. பொருளாதார நெருக்கடி, படிப்புக்கேற்ற மணமகன் கிடைப்பதிலுள்ள சிக்கல், படிப்பதால் கூலி வேலைக்குப் போகமுடியாமை,

பெண்கல்வியின் சிறப்பை உணராமை போன்ற காரணிகள் பெண்கல்விக்குத் தடையாக இருக்கின்றன.

பெண்ணுக்குக் கல்வியை வழங்காததின் பின்னணியில் ஆணாதிக்கத் தந்திரம் மறைந்துள்ளது. கல்வி கற்கும் பெண்ணின் சிந்திக்கும் திறன், வினா எழுப்பும் ஆற்றல், மேலாண்மைத்திறன் ஆகிய அறிவுத்திறன்கள் மேலோங்கும் போது ஆணின் அதிகாரம் நீர்த்துப்போய் விடுகிறது. அத்துடன் கல்வியில் சாதிக்கும் பெண் வேலைவாய்ப்புப் பெற்று பொருளாதார மேம்பாடடைந்தால் அவள் ஆணைச் சார்ந்திருக்க வேண்டியதில்லை என்பது அவனை அச்சப்படுத்துகிறது. கல்வி, வேலை ஆகிய காரணங்களைச் சொல்லி பெண் தனது நேரத்தைப் புறத்தில் செலவிடுவது அவளது வெளியை விரிவாக்கி விடும் என்பதாலும் ஆணாதிக்கம் அவளது கல்வி வளர்ச்சியை முடக்குகிறது. பெண் கல்விக்கான தடை பற்றிப் பேசும் க.பஞ்சாங்கம்,

> “அதிகாரம் அறிவினால் கட்டப்படுகிறது என்பதால் இயற்கையாகவே ஆண் பெண் உறவு முறையில் ஏற்படும் அதிகாரப் போட்டியில் தனது அதிகார மேலாண்மையைக் காட்ட முயன்ற ஆண் மையச் சமூகம், முதலில் பெண்ணுக்கான அறிவு வளர்ச்சியைக் கட்டுப்படுத்தப் பல தந்திரங்களைக் கையாண்டுள்ளது”[8]

என்கிறார். சிறுவயதிலேயே பெண்ணை மணம் முடித்துக் கொடுத்து விடுவது என்பது பெண் கல்வியைத் தடை செய்யும் காரணங்களில் ஒன்றாக அமைந்து விடுகிறது. பொருளாதார நெருக்கடியால் வறுமையான குடும்பங்களில் உள்ள பெண்கள் கல்வியைத் துறந்து வேலைக்குச் செல்ல வேண்டியுள்ளது. இத்தகைய வறுமைச் சூழலும் பெண்கல்வியைத் தடைசெய்யும் மற்றொரு காரணியாக அமைந்து விடுகிறது.

“நடுத்தரவர்க்கக் குடும்பங்களில் ‘திருமணச்சந்தை’ என்ற சமூகம் சார்ந்த கவலைதான் பெண்கல்விக்குப் பெரிதும் முட்டுக்கட்டையாக விளங்குகிறது என்றால் ஏழைக் குடும்பங்களில் வெளியே கூலிக்குப் போயும், உள்ளே வீட்டுவேலை செய்தும் பெற்றோர்க்குச் சம்பாதித்துத் தரவேண்டிய பொருளாதார நெருக்கடி பெரும்தடையாக விளங்குகிறது”[9]

என நடுத்தர மற்றும் அடித்தட்டு மக்களிடம் பெண்கல்வி தடைபடுவதன் காரணங்களைக் க.பஞ்சாங்கம் விளக்குகிறார்.

பெண்கல்வி தடைபடுவதற்கான காரணங்களை இராஜம் கிருஷ்ணனின் கதைச் சூழல்கள் வழி அறிந்து கொள்ள முடிகிறது. அவையாவன:

5.4.1. பொருளீட்டல்
5.4.2. வீட்டு வேலை செய்தல்
5.4.3. வரதட்சணை
5.4.4. திருமணம்
5.4.5. குடும்பச் சூழல்
5.4.6. பாலினம்
5.4.7. பெண்கல்வியை ஊக்குவிக்காத தாய்

என்பனவாகும்.

### 5.4.1.பொருளீட்டல்

‘கோடுகளும் கோலங்களும்’ நாவலின் தலைமைப் பாத்திரமான செவந்தி தலைமைத்தன்மை மிக்கவளாகக் காட்டப்பட்டாலும், அவள் தனது மகளுடைய கல்வி ஈடுபாட்டை ஊக்குவிக்காத முறையிலேயே பல இடங்களில் பேசுகிறாள். வரதட்சணைக்கான பொருளீட்டும் பொறுப்பு பெண்ணைச் சார்ந்தது என அவள் கருதுகிறாள்.

"இந்தத் தெருவில எந்தப் பெண்ணும் பத்துக்கு வரவில்லை. ஆறு, ஏழு, எட்டு வயசுக்கு வந்ததும் நிறுத்தி விடுவார்கள். மகாலெட்சுமி, பூரணி, யாரும் படிக்கவில்லை நடவு களையெடுத்தல், அறுப்பு என்று போய் காசு சம்பாதிக்கிறார்கள். வருபவன் பத்து இருபது சவரன், வாட்ச், கட்டில், பீரோ, ரேடியோ, டி.வி. என்று கேட்கிறானே? சமர்த்தாக சீட்டுக்கட்டிப் பண்ட பாத்திரம் வாங்குகிறார்கள்"[10]

என்றும்,

"இவபடிச்சிட்டு உட்கார்ந்திருப்பா, இவர்களுக்கு மேல படிச்சவனுக்கு ரொக்கம் குடுக்க கட்ட எங்க போக"[11]

என்றும் பாத்திரங்கள் உரையாடுகின்றன.

இதில் வரதட்சணை கொடுப்பதற்குரிய பொருளீட்டும் சுமையை வளரிளம் பருவத்திலேயே சுமக்கும் பெண் குழந்தைகளின் நிலை சொல்லப்படுகிறது. பொருளீட்டுவதற்காகப் பாதியிலேயே படிப்பைக் கைவிடும் வாழ்வை பெண்கள் மீது திணிக்கும் சமூகம் இதில் காட்டப்படுகிறது.

### 5.4.2. வீட்டு வேலை செய்தல்

வீட்டிலுள்ள வேலைகளைக் கவனிக்கும் பொறுப்பு பெரும்பான்மையும் தாயைச் சார்ந்தது. தாயின் வீட்டுப் பணியில் துணை செய்யும் கடமை தமக்கிருப்பதாகத் தந்தையோ, ஆண் குழந்தைகளோ நினைப்பதில்லை. தாயின் பாரத்தைச் சுமக்கும் இடத்தில் பெண் குழந்தைகள் வைக்கப்படுகிறன்றனர். படிக்கச் செல்லும் பெண் குழந்தையால் வீட்டுவேலைகளில் முழுமையாகக் கவனம் செலுத்த முடியாது என்பதால் பெண் கல்வி முடக்கப்படுகிறது.

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் சம்முகம் தன் மகள் காந்தியைப் படிக்க வைக்கிறார். ஆனால் இன்னொரு மகளைப் படிக்கவிடவில்லை. வீட்டுவேலை செய்யும் நோக்கத்தில் அவளுக்கான கல்வி மறுக்கப்படுகிறது.[12]

### 5.4.3. வரதட்சணை

அதிகம் படித்தால் அதிக வரதட்சணை கொடுக்க வேண்டியது வரும் என்ற பயவுணர்வும் பெண் கல்வியைத் தடைசெய்கிறது.

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் சம்முகத்தின் மகளான காந்தி மேற்படிப்புப் படிக்க முயலுவதை அவளது பெரியம்மா அம்சுவிடம் கடுமையாக விமர்சிக்கிறாள்.

மேலும் காந்தியின் பெரியம்மா, படித்த பெண் பிள்ளைகள் ஆணவம் கொண்டவர்களாக இருப்பார்கள் என்று ஆணால் கற்பிக்கப்பட்ட பிற்போக்குகளை முழக்குகிறார். ஏரோட்டுபவனுக்கே மோதிரமும் வாட்சும் போடவேண்டிய நிலை இருக்கும் சமூகத்தில் படித்த பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடுதல் கடினம் என்றும் கூறுகிறாள். பெண் நன்கு படித்தால் பொருள் வசதி மிகும் என்ற நேர் எண்ணம் கிராமங்களில் தோன்றாமல், வரதட்சணை மிகும் என்னும் எதிர் எண்ணமே மேலோங்கி நிற்பதை இது காட்டுகிறது.

### 5.4.4. திருமணம்:

திருமணத்தை முன்னிட்டுப் பெண் கல்வி தடைபடுவதை இராஜம் கிருஷ்ணன் நாவல்கள் எடுத்துக்காட்டுகின்றன. லேடி லிவிங்டன் பள்ளியில் படிக்கும் பத்தாம் வகுப்பு மாணவியின் கல்வியானது திருமணத்தை முன்னிட்டு நிறுத்தப்படுவதை ‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவல் காட்டுகிறது.[13]

சிறுவயதில் திருமணம் செய்யாமலிருந்தால் அப்பெண் மருத்துவராகவோ, பேராசிரியராகவோ, மாவட்ட ஆட்சியராகவோ ஆகியிருக்கக் கூடும் என்பது பாத்திரக் கூற்று வாயிலாகச் சொல்லப்பட்டுள்ளது.[14]

### 5.4.5. குடும்பச்சூழல்

வறுமை, தாய் வேறொருவருடன் உடன் போக்குச் செல்லல், பொறுப்பற்ற தந்தை போன்ற குடும்பச் சூழல்களால் கல்வி தடைபெறுகிறது. ‘மாறிமாறிப் பின்னும்’ நாவலில் வரும் ரேவதி ஒன்பதாம் வகுப்புப் படிக்கும் போது மூன்றாம் வகுப்புப் படிக்கும் அவளது தம்பி, வேம்புவுக்குக் கல்வி கற்றால்தான் முன்னேற்றம் வரும் என்று குறிப்பிடுகிறாள். அவள் படித்து மருத்துவத் தாதியாகவோ, ஆசிரியையாகவோ வரவேண்டும் என்று கனவு கண்டாள். ஆனால் அவளது தாய் குடும்பத்தைக் குலைத்து விட்டு கூத்தரசன் என்ற மருத்துவரோடு சென்றுவிட்டமையால், வீட்டின் நலன் கருதி ரேவதியைத் திருமணம் செய்து கொடுத்து விட்டார் இவ்வாறு குடும்பச் சூழலாலும் பெண் கல்வி தடைபடுவதை அறிந்து கொள்ள முடிகிறது.

### 5.4.6 பாலினம்

ஆண் என்பவன் படித்து வேலைக்கு வந்து பொருளீட்ட வேண்டும் என்றும், பெண் என்பவள் படிப்பதில் பொருளில்லை என்றும் சமூகம் கருதுகிறது. பொருளாதார மேம்பாட்டுத் தகுதியை முடக்குவதன் மூலம் அவளை ஆணுக்கு அடிமையாகத் தொடர்ந்து வைக்க முடியும் என்று சமூகம் தந்திரம் செய்கிறது. இச்சிக்கலை உற்று நோக்கும் போது மனிதப் பிறப்பில் பாலினம் பெண்ணாக அமைந்தால் அதற்குக் கல்வி தேவையில்லை என்ற கருத்து நிலைநிறுத்தப்பட்டுள்ளது.

‘கோடுகளும் கோலங்களும்’ நாவலில் வரும் சிறு பாத்திரமான பாப்பம்மாள் அவளது வாழ்க்கைக் கதையைப் பேசும்போது, அவளுக்குக் கல்வி மறுக்கப்பட்ட நிகழ்வையும் குறிப்பிடுகிறாள்.

> “வணக்கமுங்க... எனக்குப் பேசெல்லாம் தெரியாதுங்க. நாலாவது வரைதான் படிச்சேன். பொம்புளப்புள்ள எதுக்குப் படிக்கணும்னு நிறுத்திட்டாங்க”[15]

எனக் கல்வி மறுக்கப்பட்ட தன் சுயவரலாற்றைப் பேசுகிறாள்.

### 5.4.7.பெண்கல்வியை ஊக்குவிக்காத தாய்:

பெண்கல்விக்கெதிராக ஆண்கள் பேசினால் கூட ஆணாதிக்கம் என்ற முடிவுக்கு வரமுடியும். பெண்ணே, பெண் கல்விக்கு ஆதரவு அளிக்காத நிலை சமூகத்தில் உள்ளது. சமூகத்தின் பிரதிபலிப்பாக அது நாவலிலும் இடம் பெறுகிறது. ‘கோடுகளும் கோலங்களும்’ செவந்தி அடிக்கடி பெண்கல்விக்கெதிரான தன் நிலைப்பாட்டை அறிவிக்கிறாள். ஆனால் புதிய பெண் தலைமுறையோ பழமையின் தடைகளையும் தாண்டி கல்வி கற்கும் ஆர்வத்தை வெளிப்படுத்துகின்றது.

> “அம்மா என்ன எப்பப்பார்த்தாலும் பொம்புளப்புள்ள
> படிச்சிட்டு என்ன கிழிக்கப் போறேன்னு இன்ஸல்ட்
> பண்ணுது. அதக்காகவேனும், நான் படிப்பேன்”[16]

என்று கூறும் சரோஜாவின் குரல் இளந்தலைமுறையின் உரத்த குரலாகும்.

### 5.5 வரதட்சணை

பெண்ணுக்கெதிரான சமூகப் பிரச்சினைகளில் மிக முக்கியமானது வரதட்சணைக் கொடுமையாகும். மாப்பிள்ளை வீட்டாருக்குச் சீர் செய்வதற்காகவே பெண் வீட்டார் பிறப்பெடுத்திருப்பதைப் போன்ற மனநிலை சமூகத்தில் உள்ளது. வரதட்சணை கேட்பது ஆண் வீட்டார் கடமை என்பதாகவும் சமூகப் பொதுப்புத்தி நினைக்கிறது. வாழ்க்கைத் துணையின் அன்பு, பண்பு, அறிவு, ஆற்றல் போன்றவை பின்னிறுத்தப்பட்டு அவளது செல்வம் மட்டுமே திருமணத்தில் முன்னிறுத்தப்படுவது சமூக அநீதியாகத் தோற்றமளிக்கிறது. பெண்ணின் வாழ்க்கைத் துணையாக ஆண் வெறுங்கையைத் தவிர எதையும் பெண்ணுக்காகக் கொண்டுவரத் தேவையில்லை என்ற நிலையே தொடர்கிறது. எந்த வசதியுமற்ற ஆண் மேலும் வசதியை அதிகரித்துக் கொள்ளவும் திருமணம் என்ற நிறுவனம் ஆணுக்குச் சார்பாய்க் கட்டமைக்கப்பட்டுள்ளது.

கையூட்டு வழங்கி உயர்பதவிகளைப் பெறுவது என்பது சமூக அநீதிகளில் ஒன்றாக உள்ளது. சம்பளம் இல்லாத, மரியாதை கிடைக்காத, ஓர் அடிமை வேலைக்கு வரதட்சணை எனும் கையூட்டு வழங்க வேண்டிய நிலை திருமண உறவு உருவாக்கத்தின் கசப்பான உண்மையாக உள்ளது.

> “இந்தியச் சமூகத்தில் பெண் குழந்தை வரப்போகிற ஒரு கணவனுக்காக வாழப்போகிற ஓர் அடிமை. அதற்காகத்தான் நாம் தயாரிக்கப்படுகிறோம் என்ற மனோபாவத்தை அப்பெண் சிறுமியாக இருக்கும்போதே அடையும்படியாகக் குடும்பத்தின் நிர்வாக அமைப்புகள் அமைந்துள்ளன. எனவே ஓர் இந்தியப் பெண் திருமணத்தன்றே மனைவியாக, அடிமை வேலை செய்யத்தயாராகி விடுகிறாள். இந்த அடிமைப்பதவியும் அவளுக்குச் சாதாரணமாகக் கிடைத்துவிடுவதில்லை. வரதட்சணை என்கிற கொடுமையை அவள் கடந்துவரவேண்டியுள்ளது”[17]

என அடிமைப்பணிக்காக வசூலிக்கப்படும் கட்டாய நிதியாக வரதட்சணை பற்றிய தனது கருத்தைக் க.பஞ்சாங்கம் முன் வைக்கிறார்.

பரிசத்திருமணம், வரதட்சணைத் திருமணம் ஆகிய இரண்டு முறைகளுமே ஆண் மையவாதத்தின் இருபெரும் பிரதிபலிப்புகள் என்று மா.பத்மபிரியா குறிப்பிடுகிறார்.

> “இருவகையான திருமண முறைகளிலும் ஆண்களே பொருள்களைப் பெற்று அனுபவிக்கும் நிலையில் உள்ளனர். பெண்கள் இடமாற்றமடையும் நபர்களாக மட்டுமே காணப்படுகின்றனர்”[18]

எனப் பெண்ணிய மானுடவியலின் கருத்தைப் பத்மபிரியா எடுத்தாளுகிறார். பெண்ணும், பொருளும் ஆண்வீட்டுக்கு இடமாற்றம் அடையும் அநீதியை இம்மேற்கோள் உணர்த்துகிது.

பெண் பிறந்த வீட்டின் பெரும்பகுதிச் செல்வத்தை புகுந்த வீட்டுக்காகப் பெயர்த்துச் செல்வதனை இராஜம்கிருஷ்ணன் சமூக அநீதியாக உணர்த்துகிறார். ஒரு ஆணுக்குப் பெண்ணைக் கொடுப்பதுதான் திருமணம் என்றநிலை மாற்றப்பட்டு, பெண்ணுடன் சேர்த்து பணத்தையும் கொடுப்பதாக அது ஆக்கப்பட்டிருப்பதை இராஜம்கிருஷ்ணன் உணர்த்துகிறார்.

> ‘‘இருபதினாயிரம் ரூபாயைக் கட்டிக் கொடுத்து மூத்தவளைக் கல்யாணம் செய்து கொடுத்தார்கள். அவள் கல்யாணம் என்ற பெயரில் அந்த வீட்டின் செல்வத்தையே இன்னொரு வீட்டுக்குப் பெயர்த்துக் கொண்டு போவதுபோல் சுருட்டிக்கொண்டு போய்விட்டாள்’’[19]

எனத்திருமணம் என்பது கொடுத்தல், பெயர்த்தல், சுருட்டலாக உருத்திரிந்தமை உணர்த்தப்படுகிறது.

‘கூடுகள்’ நாவலிலும் வரதட்சணை எனும் சிக்கல் பற்றிப் பேசப்படுகிறது. இந்நாவலில் வரதட்சணை கொடுக்க முடியாததால் நாயகி கனகத்தின் திருமணம் தள்ளிப்போகிறது. கனகத்தின் திருமணம் பற்றி உடன் வேலைபார்க்கும் நரசிம்மன் என்ற ஆசிரியர் கேள்வி எழுப்பியபோது கனகம் வரதட்சணையின் பயங்கரம் பற்றிய கருத்துக்களை மொழிகிறாள். பெண் உயர்ந்த வேலை பார்த்துப் பொருளீட்டினாலும் அவள் வரதட்சணை எனும் வலையில் மாட்டாமல் வெளியேற முடியாத நிலையைச் சுட்டிக்காட்டுகிறாள். உழைக்கும் பெண் ஈட்டும் பொருள் வரதட்சணையோடும் வயிரத்தோடும் மட்டுமே பெற்றோரால் இணைத்துப் பார்க்கப் படுவதையும் சொல்லுகிறாள்.[20]

பெண்ணின் வாழ்வு பணக்கணக்குகளோடு பிணைக்கப்பட்டுக் கிடப்பதற்காக அந்நாவல் கவலை கொள்ளுகிறது. உழைத்துப் பொருளீட்டும் பெண் வழங்க வேண்டிய வரதட்சணையின் அளவு மிக உயர்வானதாக இருப்பதை இப்பகுதி புலப்படுத்துகிறது.

மேல்தட்டு, நடுத்தட்டு, அடித்தட்டு மூன்று வர்க்கங்களிலும் வரதட்சணை பொருட்கள் அவரவர் வசதிக்கு ஏற்ப வழங்கப்படுகின்றன.

'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவலில் ஒரு கிராமத்துப் பணக்கார வீட்டுத்திருமணம் காட்டப்படுகிறது. இதில் பெண் வீட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட சீர்வரிசைகள் பட்டியலிடப்படுகின்றன. அரிசி, பருப்பு, வெல்லம், வெற்றிலைக்கூடை, வாசனைப்பாக்குப்பொட்டலம், சீவல், புகையிலை வகையறாக்கள், அதிரசம், முறுக்கு, சர்க்கரை பூத்த சீனிமிட்டாய் வகைகள், கேக்குகள், பூந்தி, லட்டு, வெள்ளிப்பாத்திரங்கள், சமையல் பாத்திரங்கள், செம்பு, பானை இட்டிலித்தட்டு எனப் பெண் வீட்டு சீர்கள் வரிசைப்படுத்தப்படுகின்றன.[21]

மேல்தட்டு வர்க்கத்தில் வழங்கும் வரதட்சணையின் ஒரு பகுதி இதில் காட்டப்படுகின்றது.

மேல்தட்டு வர்க்கத்தைச் சார்ந்த கல்லூரிப் பேராசிரியரை ˙மணம் முடிப்பதற்கு ஐம்பது சவரன் நகையும், ஐந்து கிலோ வெள்ளியும், இருபதாயிரம் ரூபாயும் சீர்வரிசையும் கேட்கப்படுவதைத் 'தோட்டக்காரி' நாவல் சொல்லுகிறது.[22]

'அழுக்கு' நாவலில் வரும் அருணா வசதியான குடும்பத்தைச் சார்ந்தவள். அவள் நல்ல வேலையிலிருக்கும் கணவனை மணக்க அவளுக்கு இருபது சவரன் நகை போடப்படுகிறது.[23]

'கூட்டுக்குஞ்சுகள்' நாவலில் மருத்துவர் ஒருவரை மணக்க இலட்சரூபாய் வரதட்சணை கொடுக்கப்பட்ட நிகழ்வு சொல்லப்படுகிறது.[24]

'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவலில் அழகாயி தன்மகள் பூவுக்குச் சுந்தரம் மணமகனாக வரவேண்டும் என ஆசைப்பட்டும், வரதட்சணை காரணமாக அது நிறைவேறாமல் போனது. சுந்தரத்துக்கு ஐம்பது பவுன் நகையும், ஐம்பதாயிரம் ரொக்கமும் கொடுத்த பெண்ணுடன் திருமணம் நடைபெறுகிறது. இதனை மேல்தட்டு வர்க்கத்தைச் சார்ந்த குடும்பத்தின் வரதட்சணையாகக் கருதமுடிகிறது.

பிறர் தம்மை மதிக்க வேண்டும், கவனிக்க வேண்டும் குறை சொல்லிவிடக்கூாது என்ற துடிப்பில் இயங்கும் நடுத்தர வர்க்கம் திருமணத்திற்கு வரதட்சணை கொடுப்பதில் அளப்பரும் தியாகங்களைச் செய்கிறது. தாய் தன் அணிகலன்கள் அனைத்தையும் துறத்தல், தந்தை நிலபுலன்களை விற்றுவிடுதல், கடன் வாங்குதல் எனக்கடுமையான தியாகங்களைச் செய்து மகளின் திருமணத்தை நடத்தும் நிலையைப் 'பெண்குரல்' நாவல் காட்டுகிறது. இப்பாசி படித்த வழக்கங்களை மாற்ற வேண்டும் என்று நாவல் குரல் கொடுக்கிறது.

'நிழற்கோலம்' நாவலில் வரும் கதாப்பாத்திரமான பூமாவுக்கான வரதட்சணையாக நாலு சவரனில் ஒற்றைவடத் தாலிச்சங்கிலி, இரண்டு வளையல்கள், பாத்திரப்பண்டங்கள் குறிக்கப்படுகின்றன.

நடுத்தர வர்க்கம் தனது கடினமான உழைப்பினால் ஈட்டிய செல்வத்தை இவ்வாறு வரதட்சணை கொடுத்து இழந்து நிற்பது சொல்லப்படுகிறது.

'அலைவாய்க்கரையில்' நாவலில் வரும் தெரசாவின் திருமணம் நடைபெற அவளது பெற்றோர் ஐந்தாயிரம் ரூபாய் பணமும், மாப்பிள்ளைக்குத் தங்க மாலையும் சீதனமாகக் கொடுக்கும் நிகழ்வு சொல்லப்படுகிறது.

### 5.6. இம்சைக் கலாச்சாரம்:

பெண்களுக்கெதிரான வன்முறைகளில் ஈவ்டீசிங் எனப்படும் இம்சைக் கலாச்சாரமும் ஒன்றாகும். தனது இரத்த உறவுகளைத் தவிர பிற மகளிரெல்லாம் கேலி பண்ணப்படுவதற்கு உகந்தவர்கள் என்னும் தவறான மனப்போக்கு, இளைய தலைமுறையை இத்தகு குற்றங்களுக்கு நேராக இழுத்துச் செல்லுகிறது. இதிலுள்ள நகைச்சுவை, கேலி என்பவற்றிற்கப்பால், தனது ஆதிக்கத்தைச் சொற்களின் வன்முறையால் நிறுவும் அதிகாரச் செயல்பாடே மேலோங்கி நிற்பதைக் காணமுடிகிறது. இரட்டை அர்த்தப்பேச்சுகள், தடித்த சொற்றொடர்கள், விரசமான திரை வரிகள், உடல்

வருணனைகள் எனப் பாலுணர்வின் வடிகாலாக இந்தச் சொல்வன்முறைகள் தினந்தோறும் பொது இடங்களில் அரங்கேற்றப்பட்டு வருவதைக் கவனிக்க முடிகிறது. இது ‘ஈவ்டீசிங்’ என அழைக்கப்படுகிறது. ‘பெண்கேலி செய்யப்படும் துர்நிகழ்வை ஊடகங்கள் புனைவுகளுடன் அழுகுபடுத்தித் திரைகள் வழியே பரவலாக்கி வருகின்றன.

இம்சைக் கலாச்சாரத்தை இராஜம்கிருஷ்ணன் வன்மையாகக் கண்டிக்கிறார்.

ஈவ்டீசிங் எனும் சமூகக்கொடுமை நீடிக்கப் பெண்களும் ஒரு காரணம் என்ற ஆணாதிக்கக் கருத்தியல்கள் பல்வேறு தளங்களில் கேட்கின்றன.

‘கூடுகள்’ நாவல் பள்ளிகளில் இருக்கும் இம்சைக் கலாச்சாரம் பற்றிப்பேசுகிறது. பள்ளியில் பயிலும் ஆண் மாணவர்கள் கற்பிக்கும் ஆசிரியைகளையே கேலி பண்ணுவதைப் பற்றி இந்நாவல் பேசுகிறது. ஆசிரியைகளைத் தாயாகப் பார்க்காமல், தவறாகப் பார்க்கும் ஆணின் பிறழ்வு உளவியலாக இந்த இம்சைக் கலாச்சாரம் நிலை பெற்றுவிட்டது. ஈவ்டீசிங் இன்று நாகரீகமாகி வருவதை நாவல் கண்டிக்கிறது. அதே நேரம் நரசிம்மன் என்ற கதாப்பாத்திரம் கூறும் ஈவ்டீசிங் உருவாவதற்கான காரணம் பற்றிய கருத்து பெண்ணியத்தோடு ஒவ்வாமை உடையது.

> ‘‘பள்ளிக்கூடத்தில் கற்பிக்க வரும் பெண் ஆசிரியைகள் இன்னும் கொஞ்சம் அடக்கம் பயின்றால். அலங்காரங்களைக் குறைத்துக் கொண்டால் நலமாக இருக்கும்’’[25]

என்று நரசிம்மன் கூறும் கருத்து ஈவ்டீசிங்குக்கு எதிரானதல்ல. பெண்களுக்கு எதிரானது. பெண், ஆணால் கேலி செய்யப்படுவதற்கு பெண்ணின் ஆடை உடுத்தும் முறையே காரணம் என்ற வழக்கமான ஆணாதிக்கக் கருத்தியலின் தொடர்ச்சியாகவே நரசிம்மனின் கூற்றை

மதிப்பிடமுடிகிறது. இத்தகையோர் இம்சைக் கலாச்சாரத்தின் உண்மைக் குற்றவாளிகளை மறைமுகமாக நியாயப்படுத்துகின்றனர். பிரச்சினையின் காரணியாகப் பெண்ணைப் பொறுப்பேற்கச் செய்யும் ஆணாதிக்கத் தந்திரமாக இதனைக் கொள்ள முடிகிறது. நரசிம்மன் கதாபாத்திரத்தை நீதியின் வடிவமாகக் காட்டும் இராஜம் கிருஷ்ணன், அவரது பெண்ணுக்கெதிரான கருத்தோட்டங்களை விமர்சிக்காமல் வெறும் பதிவாக்கிச் செல்வது நாவலை விமர்சனத்துக்கு உள்ளாக்குகிறது.

**5.7. ராகிங் கொடுமை:**

கல்லூரி வளாகத்திலும், கல்லூரி விடுதியிலும் மாணவிகள், சந்திக்கும் மிக முக்கியமான சிக்கல் ‘ராகிங்’ ஆகும். பழங்காலத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடந்த இக்கொடுமையை ஊடகங்கள் வரவேற்றுப் பிம்பப்படுத்தி, பரவலாக்கிய போது கல்லூரிகள் பாடப்பிரிவின் ஒரு பகுதியைப் போல ராகிங்கை ஏற்றுக்கொண்டன. மன அளவிலும், உடலளவிலும் இக்கொடுமை பெருத்த பின் விளைவுகளை உருவாக்கியது. கிராமப்புற மாணவர்கள் நகரில் கல்வி கற்கச் சென்று இவ்வன்முறைக்குப் பயந்து அந்நியப்பட்டு ஒதுங்கியோடும் நிலை ஏற்பட்டது. முதலாமாண்டு பயிலும் பொழுது ராகிங்-ஐத்தவறு என்றுரைக்கும் மாணவர்கள், மூன்றாமாண்டு பயிலும் போது அதே தவறைச் செய்யத் தவறுவதில்லை. கிராமப்புற மாணவர்கள், பயந்த மாணவர்கள், ஒழுக்கமான மாணவர்கள், பெண்கள் ஆகியோர் ராகிங் கொடுமையில் பெரிதும் பாதிக்கப்படுவோர் ஆவார். பல்வேறு மரணங்கள் ராகிங் மூலம் நிகழ்ந்த பின்னரும் இதனைத் தவறு என உணராததாகவே மாணவ சமுதாயம் உள்ளது. ராகிங்குக்கு எதிராகக் கடுமையான சட்டங்கள் இயற்றப்பட்ட பின்னரும் இளைய சமூகம் ராகிங்கிலிருந்து வெளியே வரவில்லை.

‘கூடுகள்’ நாவல் ராகிங்கில் பெண்கள் பாதிக்கப்படுவது பற்றிப் பேசுகிறது.

> “இந்தக்காலம் பொல்லாத காலம்டா, என் பொண்ணு கூட மேல படிக்கணும்துதான் ஆசைப்பட்டுது இந்தக்காலம் படிக்க வெளிலவுடும்படியா இருக்கு? ராகிங்காம், ராகிங்? டாக்டருக்குப் படிக்கிறதுன்னா அந்தக்காலத்திலியே ஒரு மாதிரிதான், அப்பாலே நல்ல தொழிலு, நிறையப் பேரு போனாங்க. இப்ப? அப்பப்பா... என்ன அக்குரமம் நடக்குது? ராகிங் பத்திக் கோர்ட்டில் வந்து சந்தி கூடச் செய்யத்துணியாததை எல்லாம் சகஜமாகவே காலே பண்றாங்க”[26]

என்பதில் ராகிங் கொடுமையின் உக்கிரம் புலப்படுத்தப்படுகிறது.

**5.8. பாலியல் சுரண்டல்:**

பாலியல் சுரண்டலும், பாலியல் வன்புணர்வும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையவை. சட்டத்தின் பார்வையில் பாலியல் சுரண்டல் வன்புணர்வாகவே கருதப்படுகிறது. வன்புணர்வில் ஆண் தனது உடலின் அதிகாரத்தைப் பெண்ணின் உடல்மீது நிறுவுறுகிறான். இது பெண்ணின் உடன்பாட்டுக்கு மாறாக நிகழ்கிறது. பாலியல் சுரண்டல் என்பது வேலைதருதல், பதவி உயர்வு தருதல், கலையைக் கற்றுத் தருதல், திருமணம் செய்து கொள்வதாகக் கூறுதல் போன்ற நம்பிக்கைகளைப் பெண்ணுக்கு ஏற்படுத்தி அவளது உடலைச் சுரண்டுவது ஆகும். பாலியல் சொல்லாடல்களை உதிர்த்தல், பாலியல் உறவுக்கு மறைமுக அழைப்பு விடுத்தல் போன்றவையும் பாலியல் சுரண்டல்களே ஆகும்.

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் நாயகி காந்தியைச் சாலி என்பவன் காதலிப்பதாகக் கூறி நம்ப வைக்கிறான். காந்தியின் மேற்படிப்புக்குத் தான் பொறுப்பேற்பதாகச் சொல்லி தன்னுடைய வீட்டுக்கு அழைத்துச் செல்கிறான். திருமண ஆசை காட்டி அவளிடம் இன்பம் துய்த்தபின் வேறோரு அரசியல்வாதியின் காமத்துக்குப்

பலிகடா ஆக்குகிறான். காதலனாகக் காட்சி அளித்தவன் கயவன் என்ற உண்மையைறிந்து காந்தி பொங்குகிறாள். பல ஆண்களுடன் உடல் சார்ந்த நட்பு வைப்பதன் மூலம் அரசியலில் உயர்ந்த இடத்தைப் பிடிக்க முடியும் என்று கூறுகிறான். கற்பு என்பது பொருளற்றது என்றும் பாலியல் சுதந்திரமே சிறந்தது என்றும் தத்துவம் பேசுகிறான். பெண்மையை வேட்டையாடும் தந்தைக்கு ஏற்ற மகனாகச் சாலி காட்டப்படுகிறான். பெண்ணின் மென்மையையும் அதன் மீதான ஏக்கத்தையும் பயன்படுத்தி அவளை ஆண்கள் வீழ்த்தி விடுவதாக ஆசிரியர் கூற்று குறிப்பிடுகிறது.

> ‘‘ஒரு பெண்ணை அவளது மென்மையான இயல்பில் பூக்கும் உணர்வுகளை எப்படி கனிய வைத்து அதைக் கொண்டே அவளை வீழ்த்துகிறார்கள் இந்தக் கயவர்கள்’’[27]

என்பதில் மோசமான ஆண்கள் கயவர்களாகச் சித்திரிக்கப்படுகிறார்கள். திருமணம் செய்து கொள்வதாக ஆசைகாட்டி பெண்ணிடம் உடலின்பம் துய்த்துவிட்டு, பின்னர் வேறு பெண்ணை மணக்கும் கொடுமை பற்றி இராஜம் கிருஷ்ணன் பல இடங்களில் பேசுகிறார். ‘சலனங்கள்’ நாவலில் வரும் விஜி தான் மிகப்பெரிய செல்வந்தன் என்றும், வரதட்சணை இல்லாமல் மணம் முடிக்க விரும்புபவன் என்றும் ஏழைப்பெண் மீனாவிடம் சொல்லி அவளை ஏமாற்றி உடலின்பம் கொள்கின்றான். இறுதியில் பணத்துக்காக வேறொரு பெண்ணை மணந்து கொள்ளுகின்றான்.

### 5.9. வன்புணர்வு

எண்வகை திருமண முறைகளில் ஒன்றாக வன்புணர்வு இருந்துள்ளது. பைசாசம், ராக்கதம் ஆகிய மணங்கள் வன்புணர்வுகளே ஆகும். இராஜம் கிருஷ்ணன் வன்புணர்வுக்கெதிராக வினா எழுப்புகிறார்.

> ‘‘பெண்ணை அந்த உயர் நிலையில் இருந்து வீழ்த்த கைக்கொண்ட வழக்கங்களில் கற்பழிப்பு என்ற ஒன்று

தான் முதன்மையாக இருக்கும் என்று கொள்வதில் என்ன தப்பு... அவள் மயக்கமுற்ற நிலையில் கூட அவளைத் தாயாக்கித் திருமணம் என்ற பெயரில் சிறைப்படுத்துவதையும் ஒரு விவாக முறை என்று வகைப்படுத்தவில்லை.''[28]

என்ற கேள்வி எழுப்பப்படுகிறது. இராஜம் கிருஷ்ணன் இதில் 'பைசாசம்' என்னும் திருமண முறையை விமர்சிகிறார்.

''பைசாச மாவது களித்தார் மாட்டுத் துயின்றார் மாட்டுங் கூடுதல்''[29]

என இளம்பூரணர் பைசாசம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

'ராக்கதம்' எனும் வலிதிற்கொள்ளும் திருமண முறை பற்றி இராஜம் கிருஷ்ணன் இவ்விடத்துப் பேசவில்லை. இராஜம் கிருஷ்ணன் பல்வேறு நாவல்களில் வன்புணர்வு குறித்த சமூகப்பதிவுகளைத் தருகிறார்.

'ஓசைகள் அடங்கிய பிறகு நாவல் ஆண்களை நாய் எனும் படிமத்தால் அடையாளப்படுத்துகிறது. குடும்பம் எனும் அமைப்புக்கள் நுழையாத பெண்களுக்கு ஆண்களால் வரும் ஆபத்துக்கள் அதிகம் என்பதை நாவல் விரித்துரைக்கிறது. ஆண்களால் சீரழிக்கப்படும் பாத்திரமாக தேவானை காட்டப்படுகிறாள். ஆணின் பாதுகாப்பில் இல்லாத பெண் ஆண்களால் சீரழிக்கப்படுவாள் என மீனாவை ஆயா எச்சரிக்கிறாள்.[30]

ஆணால் மட்டுமே பெண்ணைச் சீரழிக்கவும் முடியும், ஆணால் மட்டுமே பெண்ணைக் காக்கவும் முடியும் என்பது ஆணின் அதிகாரத்தை அங்கிகரிப்பது போலத் தோற்றமளிக்கிறது.

ஆணால், பெண்ணுக்குக் கிடைக்கும் பாதுகாப்பை 'வேலி' என்ற படிமம் மூலம் ராமலிங்கம் கதாபாத்திரம் உணர்த்துகிறது.

பெண்ணை விளக்கப் 'பழம்' எனும் படிமம் கையாளப்படுகிறது. பெண்ணைப் பண்டமாகப் பார்க்கும் ஆணாதிக்கப் படிமங்கள் இவை

''ஐயோ பாவம், வேலியில்லன்னு தெருவில் போறவன் உள்ளிருக்கிற பழத்தை விட்டுட்டுப் போகமாட்டான்.

தேவையில்லோன்னாக் கூட போறபோக்கில ஒரு அடி அடிச்சிட்டுப் போவான்"[31]

என்பதில் கல்லால் அடித்தல் என்பது உடல் மீதான வன்முறையை உணர்த்துகிறது.

இராஜம் கிருஷ்ணன் வன்புணர்வின் பயங்கரத்தைப் பலகோணங்களில் பதிவு செய்கிறார்.

இதனை,

5.9.1. வன்புணர்வாளர்கள்

5.9.2. வன்புணர்வு அச்சம்

5.9.3. வன்புணர்வின் விளைவு

ஆகிய தலைப்புகளின் கீழ் சுருக்கி ஆராய முடியும்.

**5.9.1. வன்புணர்வாளர்கள்**

பெண்ணைப் பாலியல் வல்லுறவு புரிபவர்களாக கீழ்க்காணுபவர்களின் உடல் அதிகாரம் குறித்து இராஜம்கிருஷ்ணனின் புனைகதைகள் பேசுகின்றன.

5.9.1.1. வலியவர்கள்

5.9.1.2. அதிகாரத்தைக் கையில் வைத்திருப்போர்

5.9.1.3. பாதிரியார்கள்

5.9.1.4. உடன் பணி புரிவோர்

5.9.1.5. உறவினர்கள்

5.9.1.6. காதலன்

5.9.1.7. நண்பன்

5.9.1.8. கணவன்

ஆகியோரால் நிகழ்த்தப்படும் பெண் உடல் மீதான வன்முறை குறித்து ஆராயப்படுகிறது.

**5.9.1.1. வலியவர்கள்:**

மன்னர் காலத்தைவிட மக்களாட்சியில் பெண்களுக்கெதிரான பாலியல் குற்றங்கள் மிகுந்துள்ளதாக 'மானுடத்தின் மகரந்தங்கள்' நாவல் குறிப்பிடுகிறது. மன்னர் கால அந்தப்புரங்கள்

பெண்களுக்குக்கெதிரானவை தான் என்றாலும் அதில் கூட ஒழுங்கு முறை இருந்தது. தற்காலத்தில் வலியவனாக இருப்பவன் யாராக இருந்தாலும் பெண்களை நசுக்கலாம் என்ற நிலை உருவாகி இருப்பதாக இந்நாவல் சொல்லுகின்றது.

> ‘‘இப்போது எதுவும் இல்லை, எல்லா வரைமுறைகளும் போக எல்லா உணர்வுகளும் கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கின்றன. கொழுத்தவன் எவனும் இப்படி நசுக்கிக் கொண்டு சவாரி செய்யலாம்’’[32]

என வலியவர்களின் பாலியல் வன்முறை எடுத்துக்காட்டப்படுகின்றது.

### 5.9.12. அதிகாரத்தைக் கையில் வைத்திருப்போர்:

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் காந்தியின் தாய் லெட்சுமியும் திருணத்திற்கு முன் காவலரால் பாலியல் வன்புணர்வு செய்யப்பட்ட நிகழ்வு சொல்லப்படுகிறது. உண்மை தெரிந்த பின்னும் சம்முவம் லட்சுமியை ஏற்றுக்கொள்ளுகிறார். காவலரின் வன்புணர்வின் விளைவாக நாகு எனும் மனநிலை பாதிக்கப்பட்ட குழந்தை பிறந்ததாகக் கதை சொல்லப்படுகிறது காவலர்களால் நிகழ்த்தப்படும் வன்புணர்வு குறித்து ‘அலைவாய்க்கரையில்’ நாவலும் பேசுகிறது.

### 5.9.1.3. பாதிரியார்கள்:

சாதாரண மனிதர்கள் பெண்களிடம் தவறாக நடந்து கொள்வது குறித்துப் பல நாவல்கள் விவரிக்கும் நிலையில், ‘அலைவாய்க்கரையில்’ நாவலானது கிறித்தவ சமயப் பாதிரியாரொருவரின் தவறான நடத்தை குறித்துப் பேசுகிறது. பெஞ்சமினின் சின்னத்தா மகள் அற்புதம் பாவசங்கீர்த்தனம் செய்யச் சென்ற போது பாதிரியார் அவளிடம் தவறாக நடந்து கொள்ள முயலுவதாகக் கதை சொல்லப்பட்டுள்ளது.[33]

### 5.9.1.4. உடன் பணி புரிவோர்:

'கரிப்புமணிகள்' நாவலில் பொன்னாச்சி சக தொழிலாளியால் வன்புணர்வு செய்யப்படுகிறாள். உப்பள வேலை முடித்து இரவு வீடு திரும்பும் வேளையில் தேரிக்காட்டில் வைத்து இந்தக் கொடுமை நிகழ்கிறது. பொன்னாச்சி ஓடுதல், மூச்சிறைக்க நிற்றல், வன்புணர்வாளன் விரைந்து வந்து அவளை நெருக்குதல், அணைத்தல், முத்தமிடுதல், அவள் திமிருதல், விடுபட உதைத்தல், பிறாண்டுதல், அவன் பேயாக இயங்குதல், அவள் அழுதல், திட்டுதல், அவன் அவளை மணப்பேன் என்று கூறுதல், மன்னிப்புக்கேட்டல், அவள் தளர்ந்த நடையுடன் வீட்டுக்குச் செல்லுதல் என இவ்வன்புணர்வு நிகழ்வு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.[34]

### 5.9.1.5. உறவினர்கள்:

பருவமடையாத பெண்கள் கூட ஆண்களால் பலாத்காரம் செய்யப்படுகின்றனர் என்ற எச்சரிப்பை 'ஓசைகள் அடங்கிய பிறகு' நாவல் வழங்குகிறது. தாயும் தந்தையுமில்லாமல் மாமா வீட்டில் வளர்ந்த தேவானையை அவள் பருவம் எய்துவதற்கு முன்பே மாமன்காரன் வன்புணர்வு செய்வதாகக் கதை சொல்லப்படுகிறது.[35]

### 5.9.1.6. காதலன்:

'சேற்றில் மனிதர்கள்' நாவலின் முக்கியப் பாத்திரமான காந்தி, சாலியைக் காதலித்து உடன்போக்குச் சென்று, காதலனாலேயே சீரழிக்கப்படுகிறாள். காந்தியை அரசியலில் மேலே கொண்டு வருவதற்காக அவளை கட்சிப் பிரமுகர் ஒருவருக்கு சாலி பரிசளிக்கிறான். அந்த மீசைக்கார அரசியல்வாதியின் வன்புணர்வை எதிர்த்துப் போராடி காந்தி தோற்றுப்போகிறாள். வன்புணர்வு வேளை உடல் மீது நிகழ்த்தப்படும் வன்முறையைத் தவிர, அவளது சாதியைச் சொல்லித் திட்டும் சமூக வன்முறையும் நிகழ்கிறது. மீசைக்கார அரசியல்வாதியிடமிருந்து தடித்த சொற்களும் எழுகின்றன. உடலால்

சீரழிக்கப்படும் பெண் மீது வாசகன் இரக்கம் கொள்ளும் படி அந்நிகழ்வை நாவலாசிரியர் காட்சிப்படுத்துகிறார்.

> ‘‘அவளுடைய கனவுகள், கபடமறியாத கற்பனைகள் எல்லாவற்றையும் தகர்த்தெறியும் தூய்மை என்று போற்றக் கூடியதொரு மரபை உடைத்து அவளைப் படுகுழியில் வீழ்த்திவிட்டதான உணர்வை அளித்து விட்டுப் போகிறான். கண்ணாடியில் தெரியும் தன் முகம் மிகவும் கோரமாக இருக்கிறது அவளுக்கு. விம்மி இதயம் உடைய அழுகிறாள். தனது மாயக்கனவுகள் இப்படிக் குலைக்கப்பட்டதை எண்ணி எண்ணித் தேம்புகிறாள்’’[36]

இதில் பாலியல் பலாத்காரம் என்பது வாசகனுக்குக் கிளர்ச்சியூட்டும் வகையில் சித்திரிக்கப்படவில்லை. இராஜம்கிருஷ்ணன் மிகக்கவனமாகச் சொற்களைக் கையாண்டு தனது பெண்ணெழுத்துத்திறனை இதில் நிறுவுகிறார். இந்நிகழ்வை சிறிதும் ஆபாசமின்றி, விழிப்புணர்வூட்டும் வகையில் வடிவமைத்துள்ளார்.

### 5.9.1.7. நண்பன்:

நட்பாகப் பழகி, நண்பியை வன்புணர்வு செய்ய முயலுவது குறித்த கதைச்சூழல் ‘தோட்டக்காரி’ நாவலில் இடம் பெற்றுள்ளது. பெண்ணியவாதியான சரயுவின் மகன் பார்த்தன், ஸில்வி எனும் பெண்ணுடன் நட்பாகப் பழகுகிறான். ஆனால் தனிமையாக அவளோடு இருக்கும் வாய்ப்பு கிடைத்த அன்று அவளைப் பற்றி இழுத்து முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறான்.[37] நண்பர்களிடம் கூடக் கவனமாக இருக்க வேண்டும் என்ற பாடத்தை இது வாசகிகளுக்கு வழங்குகிறது.

### 5.9.1.8. கணவன்:

வழக்கமாக வன்புணர்வு என்பது வேற்றுப் பெண்ணிடம் அவள் விரும்பாமல் உடல் வன்முறை செய்து ஆண் தன்னைத் திணித்துக் கொள்ளும் கொடிய நிகழ்வாகக் கருதப்பட்டு வருகிறது. ஆனால்

கணவனாக இருந்தாலும், அவனது மனைவியின் விருப்பமின்மைக்கு மாறாக அவளை உடலுறு புணர்ச்சிக்கு ஆட்படுத்துவது வன்புணர்வே ஆகும். மனைவியின் சோர்வு, தூக்கம், மாதவிடாய், நோய்கள், பிற சூழல்கள் ஆகிய காரணங்களை முன்னிட்டு உடலின்பத்துக்கு மறுக்கும் பெண்ணின் உணர்வுகளுக்கு மரியாதை கொடுக்காமல் உடலைத்திணிக்கும் ஆணின் செயலை விலங்குணர்வாகவே கருதமுடிகிறது. ‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவலில் வரும் சாரங்கன் அவனது மனைவி மீனாவை வன்புணர்வு செய்வது விளக்கப்படுகிறது. மீனா அவளது அண்ணனை வழியனுப்பி வைத்துவிட்டு கதவைத் தாளிட்டுக் கொண்டு வீட்டுக்குள் நுழைகிறாள். சாரங்கன் அலங்கோலமாகப் படுத்துக்கிடக்கிறான். மீனா சாரங்கனிடம் கூடலுக்கு மறுப்புத் தெரிவிக்கிறாள். அவனை எதிர்த்துத் தள்ளுகிறாள். இறுதியில் சாரங்கன் வெற்றி பெறுகிறான். மனைவி கணவனது உடைமைகளில் ஒன்றாகக் கருதப்படுவதால் அவளது உணர்வுகளுக்கு மதிப்பளிக்கப்படுவதில்லை எனக் கணவனால் நிகழ்த்தப்படும் வன்புணர்வின் வேரைக் கண்டறிந்து நாவல் உரைக்கிறது.

> “சீச்சீ! மிருகம் போல! அவன் குத்தப்பட்ட ரோசத்துடன் இன்னும் வேகமாக வந்து தாக்குகிறான். இவன் அந்நியனல்ல; உரிமை கொண்டவன், அவளால் கத்தமுடியாது. அவள் இவன் சொத்து வளைத்துக் கொள்கிறான்”[38]

என மனைவி என்பவள் ஆணின் சொத்தாகக் கருதப்படுவதால் ஆண் தன் வேட்கைகளை அவள் மீது திணிப்பதை நாவல் உய்த்துணரச் செய்கிறது.

ரேவதியின் கணவன், ரேவதி பருவம் எய்துவதற்கு முன் ஒருநாள் வீட்டில் பாட்டியைத் தவிர யாருமில்லாத பொழுது அவளை வன்புணர்வு செய்கிறான். பாலியல் அறிவு எதுவும் இல்லாத அந்த வயதில் ரேவதி புடவையெல்லாம் இரத்தமாகப் பாட்டியிடம் சென்று அழுத நிகழ்வு சொல்லப்பட்டுள்ளது. அந்நிகழ்வைப் பற்றிப்

பிற்காலத்தில் சுதாவிடம் மனம்விட்டுப் பேசும் ரேவதி, அதனையும் வன்புணர்வு என ஆணித்தரமாகக் குறிப்பிடுகிறாள்.

> ‘‘அன்னிக்கு ஒரு புத்தகத்தில் பார்த்தேன் நீ குடுத்ததுதான் அதில் பதினெட்டு வயசுக்குக் குறைவான பெண்ணை, சொந்தப் பெண்சாதியாக இருந்தாலும் புருஷன் அவளை அணுகக்கூடாது. அப்படிப் பலவந்தம் செய்தால் அதுவும் கற்பழிப்புதான்னு, அவள் சம்மதம் இல்லாமல் நெருங்குவதே அப்படிப்பட்ட குற்றம்தான்னு போட்டிருந்தது. அப்படிப்பார்த்தா, தினம் தினம் எங்க வீட்டில இதுதான் நடக்கிறது நடந்தது’’[39]

எனக் கணவனால் நிகழ்த்தப்படும் வன்புணர்வு விளக்கப்படுகிறது.

### 5.9.2. வன்புணர்வு அச்சம்:

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் வரும் லெட்சுமி திருமணமானபின் போராட்டங்களில் கலந்து கொள்ளாமல் போனதற்கு முக்கிய காரணம் அதிகார அமைப்புகள் பெண்ணின் உடலைச் சூறையாடி போராட்டத்தை ஒடுக்க முயலுவது பற்றிய பயமே ஆகும்.

> ‘‘ஒருக்க சூடுபட்டு, அவசென்மம் மிச்சூடும் அனுபவிக்கிறது. பெரிய போரடந்தா ஊரு நாயிங்களுக்கு என்ன தெரியும்’’[40]

என உடல்மீது நிகழ்த்தப்பட்ட வன்முறையைத் துப்பாக்கிச் சூட்டுடன் இயைபுபடுத்திப் பேசுவது கவனிக்கத்தக்கது. பாஞ்சாலியின் மானம் அழியாமல் காப்பாற்றிய கடவுள் தற்காலத்தில் பெண்கள் மானம் அழிக்கப்படும் பொழுதுகளில் கண்ணழிந்து நிற்பதாகவும் குற்றம் சாட்டப்படுகிறது.

வன்புணர்வு எவ்வளவு கொடுமையானதோ அதே அளவுக்கு வன்புணர்வைப் பற்றிய அச்சமும் கொடுமையானது ஆகும். தன்னைச் சூழ இருக்கும் ஆண்களில் யாரோ ஒருவர் தன்னைப் பாலியல் வன்புணர்வு செய்யக்கூடும் எனும் பயவுணர்வு பெண்ணை

நடுக்கத்திலேயே நடமாட வைக்கிறது. ‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவலில் முக்கிய பாத்திரமான மீனாவுக்கு வன்புணர்வு அச்சம் மிகுந்து காணப்படுகிறது. தாயை இழந்தபின் ஏற்பட்ட தனிமையுணர்வும், தேவானை கடத்திச் செல்லப்பட்டு வன்புணர்வுக்கு ஆளாக்கப்பட்ட போது யாரும் உதவிசெய்யச் செல்லாத நிகழ்வும் மீனாவிடம் இத்தகைய மனநிலையை உருவாக்கின. வன்புணர்வு பற்றிய அச்சத்திலிருந்து பெண் வெளியேவர சமூகம் துணை புரியவில்லை. மாறாக அவளுக்குத் தொடர்ந்து அச்சமூட்டிக் கொண்டிருக்கிறது என்ற செய்தியும் சொல்லப்படுகிறது.

### 5.9.3. வன்புணர்வின் விளைவு

‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவலில் வன்புணர்வின் விளைவு பெண்ணுக்கு மரணத்தைக் கூடக்கொண்டு வரலாம் என எச்சரிக்கிறது. இக்கதையில் மயில்சாமி என்பவர் அழகாயியின் மகள் ராக்குவைப் பிடித்துத் தூக்கிச் சென்று தண்ணீர் இறைக்கும் எந்திரம் வைக்கப்பட்டிருக்கும் அறையில் வைத்து வன்புணர்வு செய்கிறான். வன்புணர்வைக் குறிக்க இதில் ‘குலைத்தல்’ எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதில் ராக்கு சாரம் அரைத்துக் குடித்து உயிர் விடுகிறாள். ஆண், பெண் மீது செலுத்தும் உடல் வன்முறை உயிரைக் கூட எடுக்க வல்லது என்பது இதில் உணர்த்தப்படுகிறது.

## 5.10 பரத்தமை:

முதல் மனைவி இருக்கும் பொழுதே வேறு திருமணம் செய்து கொள்வது சில ஆண்களின் பொழுது போக்குகளில் ஒன்றாக உள்ளது. குழந்தையின்மை அழகின்மை, பொருத்தமின்மை என்பன போன்ற காரணங்களைக் கற்பித்துக் கொண்டு ஆண் வேலி தாண்டிச் செல்வதைச் சமூகம் கண்டிப்பதில்லை. காரணமின்றியும் இத்தகைய அத்துமீறல்கள் ஆண் தரப்பில் நிகழ்த்தப்பட்டு விடுவதுண்டு. ஆணின் வாழ்விலுள்ள இயல்பான நிகழ்விலொன்றாகவே அது ஏற்கப்பட்டு

விடுகிறது. ஆணாதிக்க நிறுவனங்களிலிருந்து இக்கொடுமைக்கான தீர்வை எதிர்பார்க்க முடியாது.

> “ஆண் ஒரு பெண்ணைக் கட்டியபின் இன்னொருத்தியைக் கட்டாமலே தொடர்பு கொள்கிறான், அவனுக்கு வரைமுறையே இல்லை”[41]

என்பதில், ஆண் வரைமுறையற்ற நெறிபிறழ் வாழ்வு வாழ்பவனாகக் காட்டப்படுகிறான்.

நகரத்து ஆண்கள், செல்வம் நிறைந்த ஆண்கள் உயர்பதவியிலிருப்போர் ஆகியோரது பல பெண்களுடனான தொடர்புகள் பற்றி இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் நுவலுகின்றன. மேலும் கிராமத்து ஆண்கள், அடித்தட்டிலிருப்போர், கூலி வேலைக்குச் செல்வோர் ஆகியோருடைய பல பெண்களுடனான தொடர்பு பற்றிப் பேசவும் அவர் தவறில்லை. பல பெண்களுடன் உறவு என்பது மேல்தட்டுக் கலாச்சாரம் என ஒதுக்கி விட முடியாது. ஏனெனில் அடிமட்டம் வரை அத்தவறு நிகழ்ந்து கொண்டு இருக்கிறது.

இதனடிப்படையில் இராஜம் கிருஷ்ணனின் புனைகதைகளை நோக்கும்போது பல பெண்களுடன் உறவு வைத்துக்கொள்ளும் சமூக அநீதியைக் கீழ்க்காணுமாறு பகுத்துக் கொள்ளலாம்.

5.10.1 மேல் தட்டில் நிகழும் பரத்தமை

5.10.2 அடித்தட்டில் நிகழும் பரத்தமை

என அதனைப் பாகுபடுத்திக் கொள்ளலாம்.

### 5.10.1 மேல் தட்டில் நிகழும் பரத்தமை:

இராஜம்கிருஷ்ணன் ‘சேற்றில் மனிதர்கள்’ எனும் நாவலில் இரண்டு மனைவிகளைத் திருமணம் செய்த வசதி படைத்த மேல்தட்டைச் சார்ந்த விருத்தாசலம் என்பவரைக் காட்டுகிறார். முதல் மனைவிக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்த பின் வேறொரு மனைவியை மணந்து கொள்கிறார். விருத்தாசலம் வியாபாரத்தின் வழியாகச் செல்வத்தையும் செல்வாக்கையும் பெற்றிருந்தமையால் அவருக்கெதிராக யாரும் குரல் கொடுக்கவில்லை. ஆனால், ஆணின்

பலதார மணத்தைக் காட்டுவதன் மூலம் வாசனிடம் எதிர் குரலைத் தோற்றுவிக்கிறார்.

'ஓசைகள் அடங்கிய பிறகு' நாலில் வரும் ராமலிங்கம் மேல் தட்டு வர்க்கத்தைச் சார்ந்தவர். அவர் பலதார மணத்தை நியாயப்படுத்திப் பேசுகிறார். பெண்ணுக்கு ஆணால் கிடைக்கும் பாதுகாப்பு முக்கியமானது என்றும், பழங்காலத்தில் ஒரு ஆண் பல பெண்களை மணப்பது ஏற்கப்பட்டது என்றும் அவர் கூறுகிறார்.[42]

'மாறிமாறிப் பின்னும்' நாவலில் ரேவதியின் கணவனுக்கு வேறொரு பெண்ணிடம் தொடர்பு இருப்பதை அறிந்து, அவள் அவனது அலுவலகத்தில் சென்று விசாரிக்கிறாள். இதனைக் கேள்விப்பட்டு ரேவதியின் கணவன் அவளிடம் கோபம் கொள்கிறான். ஆண் எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்கிறான்.

"என் ஆபீசில் என்னப்பற்றி விசாரிக்கிறா நான் ஆம்பள...
எப்படி வேணாலும் இருப்பேண்டி ஆனா பொம்பளயா
மானம் போறதச் சகிக்க முடியாது"[43]

என ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒழுக்கத்தில் ஒரே அளவுகோல் தேவையில்லை என்று அகந்தையொடு பேசுகிறான்.

### 5.10.2 அடித்தட்டில் நிகழும் பரத்தமை

கிராமத்தில் வேறு பெண்ணுடனான தொடர்பு 'தொடுப்பு' என்ற சொல்லாடலால் குறிக்கப்படுகிறது. அழகாயியின் கணவன் வெள்ளைச்சாமி வைகை அணைப்பக்கம் வேலை செய்வதாகக் கூறிச் சென்றவன், அங்கு ஒரு தொடர்பு வைத்துக்கொண்டதாகவும், அதனால் செல்வத்தை அழித்து விட்டதாகவும் 'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவலில் கதை சொல்லப்படுகிறது.

சம்பளிப்பட்டி கிராமத்தில் ஒரு ஆண் பல மனைவிகளைத் திருமணம் புரிவது இயல்பான ஒன்றாகக் கருதப்பட்டது.

“அவர்களில் இரண்டு மூன்று கட்டாதவர்யார்? வைப்பட்டி வைத்துக்கொள்ளாதவரும் ரொம்ப அபூர்வம் தான். பிணங்குவதும், இணங்குவதும் கூடிப் பிள்ளை பெறுவதும் உலக இயல்பில் உள்ளதுதான்”[44]

எனப் பல மணம்புரியும் ஆணாதிக்கச் சமூகம் காட்டப்படுகிறது.

“குடிசையில் ஒரு பத்தினியோடு வாழ்பவன் அரிது. ஆணுக்கு கட்டியவளில்லாமல் இன்பம் தேடிச் செல்வது உரிமை என்ற மட்டில் கருதப்படுகிறது”[45]

என்று ‘ஓசைகள் அடங்கிய பிறகு’ என்னும் நாவல் அடித்தட்டு வர்க்கத்தில் ஆண் ஒழுக்கமற்றுப்பல பெண்களுடன் தொடர்பு வைத்துக் கொள்வதைச் சொல்லுகிறது.

### 5.11 கைம்பெண் சிக்கல்கள்

பாரதிதாசன் காலத்திலிருந்தே கைம்பெண்களின் சிக்கல்களை அறிஞர்கள் முன்வைத்து வருகின்றனர். உலகிலேயே விதவைகள் அதிகமாக துயருறுவது இந்தியாவில்தான் என்று கந்தையாபிள்ளை குறிப்பிடுகின்றார்.

“உயிர்கள் சந்ததியைப் பெருக்குவதாகிய இயற்கை விதிக்கு மாறாக எழுந்ததே விதவைகளின் விவாக மறுப்பாகும். இச்செயற்கைக் கட்டுப்பாடு இயற்கை விதிக்கு மாறுபட்டது. இந்திய நாட்டில் விதவைகள் கொடுமை அடைந்து வருவது போல், வேறெந்த நாட்டிலும் அடைந்ததில்லை”[46]

இதில் இயற்கைக்கு மாறானதென்றும், தேவையற்றதென்றும் கைம்பெண் கட்டுப்பாடுகள் விமர்சிக்கப்படுகின்றன. வேத காலத்தில் கைம்பெண்களுக்குக் கட்டுப்பாடுகளில்லை என்று கூறும் கந்தையாபிள்ளை பிற்காலத்தில் உருவாக்கப்பட்ட கட்டுப்பாடுகளைப் பட்டியலிடுகிறார்.

“அவள் வெற்றிலை போட்டுக் கொள்ளக்கூடாது, வெண்கலவட்டியில் உணவு கொள்ளக்கூடாது. அவள் ஒரு நாளில் ஒருமுறை மாத்திரம் உண்ண வேண்டும். இரண்டுமுறை உண்ணுதலாகாது. கட்டிலில் படுத்தல் ஆகாது. வாசனைப் பொருள்களைப் படைத்தல் ஆகாது. அவள் தினமும் இறந்த கணவனுக்கு அமுது படைத்தல் வேண்டும்”[47]

எனக் கைம்பெண்கள் படும்பாட்டை அவர் பட்டியலிடுகிறார். கைம்பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளைக் கீழ்க்காணுமாறு நிரல் படுத்தலாம்.

5.11.1. அணிகலன்களைத் துறக்கச் செய்தல்

5.11.2. மஞ்சள் குங்குமம் வைப்பதற்குத் தடை போடுதல்

5.11.3. பொட்டழித்தல்

5.11.4. கோலத்தைக் குலைத்தல்

5.11.5. கணவன் வீட்டு உதவிகள் நிறுத்தப்படுதல்

511.6. மரணத்திற்கான பழியைச் சுமத்துதல்

5.11.7. மறுமணத்தடை

ஆகிய அநீதிகளைச் சமூகம் கைம்பெண்களுக்கெதிராகச் செய்து வருகிறது.

### 5.11.1. அணிகலன்களைத் துறக்கச் செய்தல்

கணவனை இழந்ததும் பெண் ஆடம்பரங்களைத் துறக்க வேண்டும் என்றும், அணிகலன்களை இழக்க வேண்டும் என்றும், சமூகம் எதிர்பார்க்கிறது. அழகைக் கலைப்பதும், இளமையைக் குலைப்பதுமாக கைம்பெண்களுக்கெதிரான புற வடிவமாற்ற வன்முறை நிகழ்ந்து வருவதை இராஜம்கிருஷ்ணன் தனது நாவல்களில் பதிவு செய்கிறார்.

புயலின் மையம்’ நாவலில் காத்யாயனியின் அத்தை, கணவரை இழந்தபின் காதணிகளைக் கூட கழற்றி விடுகிறாள். வெள்ளையில் ஒற்றை விரல் கறுப்புக் கரையிட்ட சேலை கட்டிக்கொள்ளுகிறாள்.[48]

கைம்பெண்ணுக்கும் தனித்துவமான விருப்புகள் இருப்பதைப் பற்றி சமூகம் கவலை கொள்ளாமலிருப்பதை இது எடுத்துக்காட்டுகிறது. கைம்பெண் தானாக முன்வந்து இவ்வலங்காரச் சிதைப்பில் ஈடுபடுவதைப் போன்று தோற்றமளித்தாலும், கைம்பெண் தன்னை உருமாற்றிக் கொள்வதற்கான படிப்பினையை சமூகம் அவளது மூளைக்குள் நிரப்பி வைத்திருக்கிறது என்பதுதான் உண்மையாகும்.

காத்யாயனி அத்தையினது கைம்பெண் கோலம் மிக எளிமைப்பட்டதாக உருத்திரிந்து போனதை நோக்கும் போது அவளது இளமைக்கால தோரணைகள் முரண்பட்டு நிற்பதை வேறுபடுத்திப் பார்க்க வேண்டியதாகிறது.

> “சித்திர இழைப்பு வேலைபாடுகளமைந்த மெத்தை நாற்காலியில் அத்தை அமர்ந்தாளானால் ஒரு ராணியைப் போலவே காட்சியளிப்பாள். நீலகிரி மலைச்செழிப்பு அவ்வளவும் அவள் மேனியில் ஒளிந்து மெருகூட்டியதாகத் தோன்றும். விசாலமான நெற்றியில் அளவான குங்குமப் பொட்டு, ஒன்றே முக்கால் காரட் வயிரத்தோடுகளும், ஒற்றை மூக்கில் எட்டுக்கால் பேசரியும் புதையப் புதைய வட்டக்கழுத்து ரவிக்கையில் உள்ளே பொருந்திய வட்டத்தோடு அடக்கமாகப் பூரிக்கும் சிவப்புக்கல் மாலையும், வரிவரியாகப் பொன்னிழைகளுமாக விளங்கிய அந்த அத்தையா இன்று காண்கிறாள்”[49]

எனக் காத்யாயனியது அத்தையின் பழைய படிமம் காட்டப்படுகிறது. அத்தை “காதணிகளைக் கூடக் கழற்றி விடுகிறாள்” என்ற தொடரானது, அவள் பிற அணிகளையும், மங்கல அடையாளங்களையும் அழித்துக் கொண்டமையைப் புலப்படுத்துகிறது.

> “ஒரு இளம்பெண் புருசனை இழந்து சமூகக் கட்டுப்பாடுகளுக்கு ஆட்படுவதைப் போன்ற கொடுமை ஒன்றும் கிடையாது”[55]

என்ற ஆசிரியர் கூற்று கைம்பெண் துயரைக் கொடுமையின் உச்சமாகப் பார்க்கிறது

'கோடுகளும் கோலங்களும்' நாவலில் வரும் செவ்வந்தியின் சின்னம்மா கணவன் இறந்த பின் வடிவச் சிதைவுக்கு ஆளாகிறாள். சின்னம்மாவின் உடல் துரும்பாக இளைத்துப் போகிறது. கன்னம் ஒட்டிப் போகிறது. நெற்றிப் பொட்டு இல்லாமல் போகிறது. மூக்குத்தித் திருக்காணிகளைக் கூட இழக்கிறாள். தோடுகள் காணாமல் போகின்றன. வளையல், மாலை எல்லாவற்றையும் துறந்தாள் எனக் 'கோடுகளும் கோலங்களும்' நாவலில் வரும் சின்னம்மா பாத்திரத்தின் வடிவச் சிதைவுப் படிமத்தை இராஜம்கிருஷ்ணன் முன்னிறுத்துகிறார்."[51]

கணவனைப் பறிகொடுத்த சுந்தரியின் கோலமும் அதே நாவலில் பரிதாபத்துக்குரியதாகக் காட்டப்படுகிறது. சுந்தரி நகை நட்டுகளைக் கழற்றாமலிருப்பதில் பிற கைம்பெண் பாத்திரங்களிலிருந்து வேறுபடுகிறாள். ஆனால், பூ, பொட்டு, குங்குமம் ஆகியவற்றை இழக்கிறாள். இவ்விடத்தில் நாவலாசிரியர் எழுப்பும் கேள்வி பெண்ணுக்கெதிரான சமூக மரபுகளைக் குற்றம் சாட்டுகிறது.

### 5.11.2. மஞ்சள் குங்குமம் வைப்பதற்குத் தடை போடுதல்

'சுழலில் மிதக்கும் தீபங்கள்' நாவலில் கைம்பெண்கள் படும் துயர் காணக்கிடக்கிறது. கைம்பெண்கள் மஞ்சள் குங்குமம் வைத்து நிழச்சிகளில் முன்னால் செல்ல முடியாமைக்காக நாவல் வருத்தப்படுகிறது. முள் மேல் இருப்பதைப் போன்றதாக அச்சோக நிலைமை படிமப்படுத்தப்படுகிறது. கைம்பெண்களின் முடியிலுள்ள ஈரத்தில் ஒரு துளி பூமியில் தெறித்தாலும் அப்பெண் பதினாலாயிரம் ஆண்டுகள் நரகத்தில் தவிப்பதாகச் சொல்லப்பட்ட பழமைச் சிந்தனை எடுத்துக்காட்டப்படுகிறது.[52]

### 5.11.3. பொட்டழித்தல்

பெண் சிறுவயதிலிருந்தே பொட்டு வைத்து அழகு பார்த்து வந்தாலும் கணவனின் மரணத்துக்குப்பின் பொட்டு வைத்துக் கொள்வதற்கான உரிமை அவளுக்கு வழங்கப்படவில்லை. திருமணத்தோடு எவ்விதத்திலும் தொடர்பற்ற பொட்டை அழிக்க முயலும் சமூக அநீதியை இராஜம் கிருஷ்ணன் கைம்பெண்கள் பக்கம் நின்று பேசுகிறார்.

> "புருஷன் வரும்போது பொட்டைக் கொண்டு வந்தானா? அதை ஏன் அழித்துத் தொலைக்கிறார்கள்? அவன் காலம் முடிந்து போனால் அது அவள் குற்றமா?"[53]

என்பதில் சமூகம் உலுக்கப்படுகிறது. பொட்டழித்தலில் இருக்கும் ஆணாதிக்க வன்முறை கேள்விக்குட்படுத்தப்படுகிறது.

### 5.11.4. கோலத்தைக் குலைத்தல்

'நிழற்கோலம்' நாவலில் வரும் மிகச் சிறிய பாத்திரமான புஷ்பா குடிகாரனுக்கு மூன்றாம் தாரமாக வாழ்க்கைப்பட்டு, மூன்றாம் மாதத்திலேயே கணவனை இழக்கிறாள். அவள் திருநீறு பூசிக்கொண்டும், வெள்ளைச் சேலை கட்டிக்கொண்டும் பிறருக்காக தனது கோலத்தைக் குலைத்துக்கொண்டவளாகக் காட்டப்படுகிறாள்.[54]

### 5.11.5. கணவன் வீட்டு உதவிகள் நிறுத்தப்படுதல்

'நிழற்கோலம்' நாவலில் வரும் பூமா, வாசுவைத் திருமணம் செய்து கொள்ளுகிறாள். திருமணமான ஒரு மாதத்தில் வாசு மாரடைப்பில் இயற்கையெய்துகிறான். கணவனின் மரணத்துக்குப் பிந்தைய வாழ்வு பொருளாதார நெருக்கடிக்குள்ளாகிறது. வாசுவின் வீட்டார் பூமாவுக்கு எந்த உதவியும் செய்ய முன்வரவில்லை. நலம் விசாரிப்புகள் கூட இல்லாமல் தனித்து விடப்படுகிறாள்.

**5.11.6. மரணத்திற்கான பழியைச் சுமத்துதல்**

திருணமான பின் கணவன் திடீரென இளவயதில் மரணமடைந்தால் அதற்கான முழுப்பழியையும் பெண் ஏற்க வேண்டியதாகிறது. மனைவி இறந்துவிட்டால் அதற்கான பொறுப்பும் பழியும் ஆண்மீது சுமத்தப்படுவதில்லை. மனைவி வந்த நேரம், அவளது இராசி, மற்றும் சாதகபலன் ஆகியவையே மரணத்துக்கான காரணியாகச் சொல்லப்பட்டு வருகின்றன. இத்தகைய சூழலில் அக்கைம்பெண் ஒரு கொலைக் குற்றவாளியாகவே பார்க்கப்படுகிறாள். பழி சுமத்தப்பட்டு, குற்றவுணர்ச்சிக்காட்பட்டு, தாழ்வு மனப்பான்மையோடு வாழும் சூழலை இக்கொடுமை பெண்ணுக்கு உருவாக்கி விடுகிறது. கைம்பெண்ணுக்கெதிராக மனதளவில் உருவாக்கப்படும் வன்முறையாக இதனைக் கருத முடிகிறது. திருமணமான பின் மாரடைப்பில் காலமான வாசுவின் மரணத்துக்கு பூமாவின் சாதகமே காரணம் என்ற குற்றச்சாட்டு வைக்கப்படுவது சமூகத்தின் பிரதிபலிப்பாகவே தோற்றமளிக்கிறது.

குடியாலோ, விபத்திலோ, நோயாலோ இளவயதில் கணவன் மரணம் அடைந்தாலும் அதற்கான முழுப்பழியையும் மனைவி சுமக்க வேண்டிய நிலை உள்ளது. கணவனைக் குடிக்க வைத்தவளாக மனைவி இருக்கமாட்டாள். விபத்தை உருவாக்கிய வாகனம் மனைவியால் ஏவப்பட்டதல்ல. நோயைக் கணவனுக்குள் புகச்செய்வதும் அவளல்ல. ஆனால், அவனது மரணத்துக்கு மனைவி பொறுப்பேற்க வேண்டிய சூழல் உள்ளது. அதே நேரம் இளவயதில் மனைவி இறந்துவிட்டால் அதற்கான பழி எதுவும் கணவன் மணந்து கொண்ட நேரத்தின் மீது விழுவதில்லை. ‘கோடுகளும் கோலங்களும்’ நாவல் பாத்திரமான சின்னம்மாவின் கணவன் மூன்று நாள் காய்ச்சலில் மரணமடைந்ததற்கான பழி சின்னம்மா வந்த நேரத்தின் மீது விழுந்தது. அத்துடன் அவள் பருவத்துக்கு வந்த நேரமும் இப்பழியில் பங்குபெற வேண்டிய நிலை ஏற்பட்டது.

“அவ ஆளான நேரமே சரியில்ல, அததா புகுந்த எடம் புருசன் உருப்படல”[55]

எனப் பருவம் எய்திய நேரம் கூட குற்றவாளிக்கூண்டில் நிறுத்தப்படுகிறது.

‘நிழற்கோலம்’ நாவலில் பூமாவின் கூற்றில் கைம்பெண்ணின் சோகமும், நியாயமும், சொல்லப்படுகின்றன.

“யாரோ மூன்றாம் மனிதர்களிடம் நாங்கள் ஜாதகத்தைத் தப்பாக மாற்றிக் கொடுத்து அவர் பிள்ளையைக் கொன்று விட்டோம் என்று சண்டை போட்டாராம். நான் இப்படி நிற்க வேண்டும் என்று அண்ணாவும் அம்மாவும் ஆசைப்பட்டு நிஜமான ஜாதகத்தை மாற்றிக் கொடுத்திருப்பார்களா?”[56]

என்ற பூமாவின் கூற்றில் ஜாதகம் பெண்ணுக்கெதிராக ஏவப்படுவது உணர்த்தப்படுகிறது.

### 5.11.7. மறுமணத்தடை

மனைவியை இழந்த ஆண் மறுமணம் செய்வதை இயல்பான நிகழ்வாக ஏற்றுக்கொள்ளும் சமூகம், கணவனை இழந்த பெண்ணுக்கும் அதே நிலைப்பாட்டை எடுப்பதில்லை. கைம்பெண்ணின் மறுமணம் கூட அவளது ஒழுக்கக் குறைவாகவே சமூகத்தால் கருதப்படும் நிலை உள்ளது. ‘கோடுகளும் கோலங்களும்’ நாவல் இத்தகைய இரட்டை நிலைப்பாடு கொண்ட சமூகத்தின் மீது கோபம் கொள்ளுகிறது.

“வேற கலியாணம் கூடக் கட்டலாம், ஆம்புளங்க கட்டுவாங்க. புள்ளிங்களை வளர்க்கன்னு, பொம்புள, இந்த பிஞ்சுகளுக்கு ஓராண்டு காவல் வேணும் அப்பன் ஸ்தானத்திலன்னு கல்யாணம் கட்டலாமா? கூடாது. அத்தோட விட்டதா? சொந்தக்காரங்க, கூடப்பெறந்தவங்க கூட நடத்த சரியில்லன்னு கரியத்தீத்தும்”[57]

எனக் கைம்பெண் மறுமணம் புரிந்து கொள்வதில் உள்ள சிக்கல்கள் உணர்த்தப்படுகின்றன.

> “ஆணுக்குத் துணையை இழந்தால் புதிய துணை, பெண்ணுக்கு?.... கால்களை, மனசை, ஒளியைக் கட்டி இருட்டுக்குள் போட்டு பொம்மையாக கோழையாக ஆக்குகிறது உலகம்”[58]

எனப் புதிய துணை அமைவதில் கைம்பெண்ணுக்கிருக்கும் தடை சொல்லப்படுகிறது.

## 5.12. வேலைக்குச் செல்லும் பெண்களின் சிக்கல்கள்

ஆண் வேலைக்குச் செல்வதினின்று பெண் வேலைக்குச் செல்வது என்பது வேறுபட்ட ஒன்றாக விளங்குகிறது. ஆண் வேலைக்குச் செல்வதாக இருந்தால் அதற்கு முந்தைய தயாரிப்புப் பணிகளில் பெண் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளுகிறாள். ஆனால், பெண் வேலைக்குச் செல்வதற்கு முந்தைய ஆயத்தப் பணிகள் அவளாலேயே முடிக்கப்பட வேண்டியுள்ளது. ஆணின் பயணத்தை விட பெண்ணின் பயணம் சிக்கல் நிறைந்ததாகவும் ஆபத்து நிறைந்ததாகவும் விளங்குகிறது. வேலைக்களங்களங்களில் பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள் அதிகம். அவையும் ஆண் சந்திக்கும் சிக்கல்களினின்று வேறுபட்டவையாக உள்ளன. பெண் வேலைக்குச் செல்வதிலுள்ள சிக்கல்கள் கீழே வரிசைப்படுத்தப்படுகின்றன.

5.12.1. வேலைக்குக் கிளம்பும் முன் உள்ள சிக்கல்கள்

5.12.1. பாலியல் சுரண்டல்

5.12.3. இயற்கையின் உந்துதல்களுக்கு வடிகாலின்மை

5.12.4. குழந்தைகளைப் பராமரிக்க முடியாமை

5.12.5 கழிப்பறையின்மை

5.12.6 கூலி வேறுபாடு

எனப் பிரிக்கலாம்.

### 5.12.1. வேலைக்குக் கிளம்பும் முன் உள்ள சிக்கல்கள்

வேலைசெய்யும் இடம் என்பது பெண்ணுக்குப் போராட்டக்களமாக அமைவதை இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் எடுத்துக்காட்டுகின்றன. வேலைக்குக் கிளம்புவதற்கு முன்னிருந்தே பெண்களைச் சிக்கல்கள் பின் தொடர்வதைக் 'கூடுகள்' நாவல் பேசுகிறது. வெளியில் வேலை செய்யச் சென்றாலும் வீட்டில் நிரந்தரமாகச் சமையல் வேலை அவளுக்கென்று ஒதுக்கப்படுகிறது. அடிகுழாயில் தண்ணீர் அடித்து தண்ணீர் பிடித்தால்தான் சமையல், குளியல் என்பவற்றிற்குத் தயாராக முடியும் என்ற நிலையில் அப்பொறுப்பும் பெண் மீதே சுமத்தப்படுகிறது. வெம்மையிலும் புழுக்கத்திலும் வாழும் வாழ்வே அவளுக்கு வாய்க்கிறது. நேரத்தின் அருமை கருதி வெந்ததும் வேகாததுமான உணவை உண்டுவிட்டு ஓடுவதும் அன்றாட நிகழ்வுகளில் ஒன்றாகி விடுகிறது. இரயில் பயணம், பேருந்துப்பயணம் எனப் பயணங்கள் தரும் நெருக்கடி மன உளைச்சலைத் தருமளவுக்குப் பயங்கரமாக உள்ளன. நடைக்கும் ஓட்டத்துக்கும் அவள் தன்னைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டிய நிலை உள்ளது.

புகைவண்டியையோ ரயிலையோ தவற விடுதலும் அவளது தொழில் வாழ்க்கையில் அடிக்கடி நிகழ்கிறது. பள்ளி ஆசிரியைப் பணிக்குச் செல்வதற்கு முன் கனகம் சந்திக்கும் சிக்கல்கள், தொழிலுக்குப்போகும் நடுத்தர வர்க்கம் சார்ந்த பெண்களுக்குப் பொதுவான முறையில் சொல்லப்படுகின்றன.''[59]

### 5.12.2. பாலியல் சுரண்டல்:

வேலை செய்யுமிடத்தில் பெண்கள் சந்திக்கும் மிக முக்கியமான பிரச்சினை பாலியல் சுரண்டலாகும். முதலாளிகள், மேலாண்மை, செய்வோர். அதிகாரிகள் ஆகியோர் தங்கள் பாலியல் வேட்கைக்குப் பெண்களைப் பயன்படுத்திக் கொள்வதை இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் பல இடங்களில் காணமுடிகிறது. 'மானுடத்தின்

மகரந்தங்கள்’ நாவலில் கழனி வேலை செய்கிற அனைத்துப் பெண்களும் மேலாண்மை செய்பவனின் பாலியல் வேட்கைக்குப் பலியாக்கப்படுவதைச் சுட்டுகிறது.[60]

உப்பளத் தொழிலில் பாலியல் சுரண்டல் மிகுந்து காணப்படுவதை ‘கரிப்புமணிகள்’ நாவல் கதைப்படுத்துகிறது. முதலாளிகள், கான்ட்ராக்டர்கள், கங்காணிகள், கணக்கப்பிள்ளைகள், தரகர்கள், கூலித்தொழிலாளிகள், அனைவருமே பெண்ணுடலைச் சுரண்டுவதில் ஆர்வம் காட்டுகின்றனர். கணவனும் மனைவியும் இணைந்து வேலைக்கு வந்தாலும், கணவன் முன்னிலையிலேயே மனைவி பாலியல் சுரண்டலுக்குள்ளாகிறாள். பொருளாதாரத் தேவைக்காக மனைவிக்கு இழைக்கப்படும் பாலியல் தவறுகளைக் கூடத்தட்டிக் கேட்கத்துணிவில்லாமல் ஆண்கள் கையற்று நிற்கின்றனர். பருவப்பெண்ணான பொன்னாச்சியைக் கங்காணியான நாச்சப்பன் பாலியல் பார்வையால் நோகடிக்கிறான்.

> “போகும் போதும் வரும் போதும் கழுத்தில் தொடுவதும்,
> கையைத் தீண்ட முயல்வதும் இன்னும் அவருப்பான
> சைகைகள் செய்வதுமாக இருக்கிறான்”[61]

என நாச்சியப்பனின் பாலியல் முயற்சிகள் சொல்லப்பட்டுள்ளன.

கொட்டடியைப் பெருக்கித் துப்புரவு செய்ய அழைத்துச் சென்று பொன்னாச்சியின் கைகளைப் பற்றி இழுக்கிறான். அவள் கையை உதறுகிறாள். பொன்னாச்சி அவிழ்ந்த வாரியலைத் திரட்டிக் கட்டும் போது நாச்சப்பன் அவளது ஆடையை அவிழ்க்கிறான். அவள் எதிர்த்துப் போராடுகிறாள் தப்பி ஓடிவந்து விடுகிறாள்.[62] இவ்வாறு தொழில் செய்யுமிடங்களில் ஆண்களிடமிருந்து பாலியல் தொடர்பான பல்வேறு சுரண்டல்களைப் பெண்கள் சந்திக்க வேண்டியுள்ளன.

### 5.12.3. இயற்கையின் உந்துதல்களுக்கு வடிகாலின்மை

கூலி வேலை செய்யும் பெண்களின் சிக்கல்களை இராஜம் கிருஷ்ணன் அவரது நாவல்களில் படைத்துக்காட்டியுள்ளார். நாற்று நடுகின்ற விவசாயத் தொழில் செய்யும் பெண்களின் சிக்கல்கள்

‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் பேசப்படுகின்றது. நாற்று நடும் பெண்கள் நடவுக்கு இறங்கினால் நிமிர முடியாது. பெண்ணின் இயல்பான ஆசாபாசங்கள், வேட்கைகள், உந்துதல்கள் எல்லாமே அந்த மண்ணோட முடிந்து போய்விடும். குழந்தை பெற்ற பெண் பால் கொடுக்கும் உந்துதல் பெற்றாலும் செல்லமுடியாது. நீர் முட்டிக் காலோடு வழியும், பசிக்கும் தாகத்துக்கும் வடிகால் தேடி வெளியே வரமுடியாது. வெற்றிலை புதிதாகப் போட்டுக்கொள்ள முடியாது. இவ்வாறு விவசாயப் பெண்கள் வயற்களத்தில் சந்திக்கும் சிக்கல்கள் பட்டியலிடப்படுகின்றன.

### 5.12.4. குழந்தைகளைப் பராமரிக்க முடியாமை

பெண்ணுக்கு இயற்கை வழங்கியுள்ள அருட்கொடையான ‘தாய்மை’ என்பது தொழிற்களங்களில் கருத்தில் கொள்ளப்படாத நிலை குறித்த பதிவுகளைக் காணமுடிகிறது. உப்பளத்தில் வேலைபார்க்கும் பெண்கள் தங்கள் பால்மணம் மாறாத குழந்தைகளை நிழலில் போட்டுவிட்டு வேலைகளைக் கவனிக்கின்றன. குழந்தைகளின் அழுகையொலி கேட்கிறதா என்று கவனித்த படியே அவர்கள் உப்பள வேலையைச் செய்கின்றனர் எனத் தாய்மை சந்திக்கும் சிக்கல்கள் சொல்லப்படுகின்றன.[63]

### 5.12.5. கழிப்பறையின்மை

உப்பளத்தில் வேலை செய்யும் பெண்களுக்குக் கழிப்பறையின்மையால் ஏற்படும் துயரங்களைக் ‘கரிப்பு மணிகள்’ நாவல் பதிவு செய்கிறது. வெட்டவெளியான உப்பளத்தில் பெண்கள், குறிப்பாகக் கருவுற்ற பெண்கள் இயற்கை உபாதைகளுக்கு உட்பட்டுப் பெரிதும் துயறுகின்றனர்.

“நாலைந்து பெண்களாகக் கடற்கரையை நாடி நடக்கின்றனர்.”[64] என்பதில் கழிப்பறை இல்லாத தொழிற்களங்களில் வேலை செய்யும் பெண்களின் துயர் சொல்லப்படுகிறது.

**5.12.6. கூலி வேறுபாடு:**

பெண்களுக்கு இழக்கப்படும் சமூக அநீதிகளில் ஒன்று கூலி வேறுபாடாகும். ஆணுக்கு அதிக கூலியும், பெண்ணுக்கு குறைந்த கூலியும் வழங்கும் நடைமுறை அடித்தட்டு வேலைகளிலிருந்து உயர் வேலைகள் வரை இருந்து வருகிறது. தொடக்க காலத்தில் தோன்றிய சோசலிசப் பெண்ணியம் இத்தகைய கூலிவேறுபாடுகளுக்கெதிராகப் போராடியது. பாலியல் பாகுபாடு நிறைந்த சமூக அமைப்பைப் பொருளாதாரப்புரட்சி மூலம் சமத்துவப்படுத்த முடியும் என்பது சோசலிசப் பெண்ணியத்தின் குறிக்கோளாக இருந்தது. இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் சோசலிசப் பெண்ணியத்தின் மேலோட்டமான செல்வாக்கினைக் காணமுடிகிறது. ஆயினும் முழுமையாக அக்கோட்பாட்டில் மூழ்கி விடவும் இல்லை. கம்யூனிஸ்டுகள், பெண்கள் விஷயத்தில் முதலாளிகளைப் போல நடந்து கொள்வதை 'சேற்றில் மனிதர்கள்' நாவல் எடுத்துக்காட்டுகிறது. சிவப்பு நிறத்துண்டு போடுவதாலோ தோழர் என்று அழைப்பதாலோ ஒருவர் பொதுவுடைமைக் கொள்கைவாதி என்ற முடிவுக்கு வந்துவிட முடியாது என்ற எச்சரிக்கையை நாவல் மறைமுகமாக விடுகிறது. அதேநேரம் ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமான கூலி கொடுக்கப்படவேண்டும் என்பதில் சோசலிசப் பெண்ணியத்தை நெருங்குகிறது. நாற்று நடவுப் பணி செய்ய ஆணுக்கு ஐந்து ரூபாயும் பெண்ணுக்கு மூன்று ரூபாயும் கொடுக்கப்படுகின்ற பெண் கூலி தொழிலாளிகளுக்கெதிரான அநீதியை நாவல் வெளிக்கொணர்கிறது.[65]

உப்பளத்தொழிலில் ஆணுடைய நிர்ணயக் கூலி பெண்ணின் கூலியைவிட அதிகமாக இருப்பதைக் 'கரிப்பு மணிகள்' நாவல் சுட்டுகிறது.

பெண்களுக்கு நான்கு ரூபாய் நாற்பது காசு என்பது நிர்ணயக் கூலியாக உறுதி செய்யப்பட்டும், அவர்களுக்கு நான்கு ரூபாய் மட்டுமே வழங்கப்படுகிறது. ஆண்களுக்கு நிர்ணயக் கூலி ஆறு ரூபாயாக இருப்பதை நாவல் வேறுபடுத்திக் காட்டுகிறது.''[66]

## 5.13. ஊடகச்சீர்கேடுகள்

விஞ்ஞான யுகத்தின் மாபெரும் அறிவு வளர்ச்சியாக மக்கட்தொடர்பு சாதனங்கள் அமைகின்றன. மக்கள் தொடர்பு சாதனங்கள் அறிவித்தல், அறிவுறுத்தல் ஆகிய பணிகளை விட மகிழ்வித்தல் பணியையே மிகுதியாகச் செய்கின்றன. மகிழ்வித்தல் பணியும் ஆரோக்கியமானதாக அமையாமல் சிற்றின்பங்களின் வடிகாலாகவே பெரும்பான்மையும் அமைகின்றன. இளைய தலைமுறையின் சிந்தனையை மழுங்கடிப்பதிலும், அவர்களின் வாழ்க்கையைத் திசை திருப்புவதிலும் இவை பெரிய தாக்கத்தை நிகழ்த்துகின்றன. இளைஞர்களின் வன்முறை, காமம், போன்ற தவறான உணர்வுகளை வளர்த்து விடுகின்றன. ஊடகங்கள் உருவத்திலும் தொழில் நுட்பத்திலும் வளர்ச்சி பெற்றுள்ளன. ஆனால் உள்ளடக்கத்தில் சமூகத்தைப் பின்னோக்கித் தள்ளுகின்றன. குறிப்பாக பெண்களைக் கொச்சைப்படுத்துவதில் அவை முன்னணியில் நிற்கின்றன.

ஊடகங்களில் பெண்கள் வியாபாரப் பொருளாக்கப்படுவது குறித்து பேசும் பத்மபிரியா,

> “பெண்களைப் பத்திரிகை வியாபாரமாகவும், திரைப்படத்தின் மூலமாகவும் பயன்படுத்திக் கொண்டிருக்கும் காலம் இதுவாகும்”[97]

என இதழ்களும் திரைப்படமும் பெண்ணுக்கெதிராக இருப்பதை உணர்த்துகிறார். இராஜம் கிருஷ்ணன் படைப்புகளில் பெரும்பான்மையும் இரண்டு மக்கட்தொடர்பு சாதனங்கள் விமர்சனத்துக்குள்ளாகின்றன.

அவை,

5.14.1 திரைப்படம்

5.14.2 இதழ்கள்

என்பனவாகும்.

### 5.13.1 திரைப்படம்

'கூடுகள்' நாவலில் திரைப்படத்தின் தீய விளைவு நுவலப்படுகிறது. நாகமுருகன் என்ற நடிகர் நடித்த திரைப்படத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஓர் இளைஞன் அடுத்த இருக்கையிலிருந்த ஒரு பெண்ணிடம் தவறாக நடந்து கொண்டதோடு, அதற்காக மனம்வருந்தி அன்றிரவே தற்கொலை செய்து கொள்வதாகக் கதை சொல்லப்பட்டுள்ளது.[68]

திரைப்படங்களில் அமைந்திருக்கும் ஆபாசமும், அவை விளைவிக்கும் பாலியல் பிறழ்வுகளும் ஆண்கள் மனதைக் கெடுக்கின்றன என்பதைச் சொல்லும் நாவல் இதில் இறுதியில் பாதிக்கப்படுவது பெண்தான் என்பதையும் சுட்டுகிறது.

திரைப்படங்கள் இளைஞர்களை மட்டுமின்றி ஆசிரியர்கள், பெரியவர்கள், படித்தவர்கள் வரை அனைவரையும் பாதித்துள்ளமையைக் 'கூடுகள்' நாவல் எடுத்துக்காட்டுகிறது. இதழ்களும் திரைப்படத்தின் வாலைப்பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பதை இந்நாவல் கண்டிக்கிறது. திரைப்படத்துறையைச் சார்ந்தவர்கள் மூக்குச் சீந்துவது, குறட்டை விடுவது எல்லாம் செய்தியாக்கப்படுவதை இது எள்ளி நகையாடுகிறது. நள்ளிரவு இரகசியங்களை நடுப்பகலில் நாற்சந்திக்குக் கொண்டு வந்து அலங்கோலப்படுத்துவதாய் நாவல் குற்றஞ்சாட்டுகிறது.

> "சினிமா சக்திவாய்ந்த சாதனம். அதை இவ்வளவு
> மட்டமாக மக்கள் மனசைத் தரம் தாழ்த்த அவிழ்த்து
> விட்டு விட்டார்களே? [69]

எனக் கூடுகள் நாயகி கனகம் கவலைப்படுகிறாள்.

திரைப்படம் பெண்களை வெறும் சதைத் தொகுதிகளாகப் பார்க்கும் கொச்சையான பார்வையைக் கொண்டது. பணம் கொடுத்து திரையரங்குக்குச் செல்லும் பார்வையாளரை மட்டுமே அது நேரடியாகப்

பாதிக்கிறது. ஆனால் திரைப்படத்தின் ஆபாசக்காட்சிகள் புகைப்படங்களாக வரும்பொழுது இன்னொரு வெகுஜன இதழ் வாசகர்களைப் பாதிக்கின்றது. திரைப்பாடல்கள் வீதிகள் தோறும் முழங்கும் போது ஒலி வழி ஆபாசம் பொதுமக்களின் காதுகளைத் தாக்குகிறது. திரைப்படம் தனது அரங்குக்கு வெளியே இவ்வாறு பல்வேறு எதிர் விளைவுகளை நிறுவிச் செல்லுகிறது. திரைப்படச் சுவரொட்டிகள் ஆபாசத்தை இலவசமாகப் பரவலாக்குகின்றன. வழிப்போக்கர்களின் எண்ணங்களைத் திசை திருப்பும் ஆற்றல் சுவரொட்டிகளுக்கு இருப்பதால் நாவலாசிரியர் சுவரொட்டிகளின் வன்முறை குறித்துப் பேசுகிறார்.

> “புதிதாக வந்திருக்கும் சினிமா விளம்பரத்தட்டி பெரிதாகக் கடையின் இருபுறங்களிலும் அணி செய்கின்றன. அதில் பிறந்த குழந்தைக்குப் போடக்கூடிய அரைக்கச்சுடன் ஒரு பெண் காலைத் தூக்கிக் கொண்டிருப்பதும், இந்தப் பிள்ளைகளைப் போல ஒரு இளசு குனிந்து அவளைப் பார்ப்பதுமாக இருக்கின்றனர். தூத்தேறி என்று துப்பத் தோன்றுகிறது”[70]

என ஆபாசக் சுவரொட்டிகளை எச்சில் துப்பி நிராகரிக்கிறார் ஆசிரியர்.

திரைப்பட மோகத்தால் ஏற்படும் வாழ்வின் வீழ்ச்சியை ‘மானுடத்தின் மகரந்தங்கள்’ நாவல் சித்திரிக்கின்றது. பேபி வளரிளம் பருவத்தில் அயல் வீட்டுக்குச் சென்று ஆண்களுடன் உட்கார்ந்து வீடியோவில் திரைப்படம் பார்த்து இரவு ஒன்பது மணிக்குத்தான் வீட்டுக்கு வருகிறாள். திரைப்பட நடிகையாகும் ஆர்வம் மிகுந்ததால் சென்னைக்குச் சென்று இறுதியில் மர்மமான முறையில் மரணமடைகிறாள். திரைப்பட மோகம் பெண்களின் வாழ்வைச் சீரழிப்பதனை பேபி கதாப்பாத்திரம் உணர்த்துகிறது.

### 5.13.2. இதழ்கள்

அச்சுத் தொழிலின் வளர்ச்சியும், கல்வி மறுமலர்ச்சியும் இதழியல் துறையில் பெருத்த மாற்றங்களை உருவாக்கின. திரைப்படம், வியாபாரம், விவசாயம், விஞ்ஞானம், கணிப்பொறி, கல்வி, ஆன்மீகம், கவிதை, திறனாய்வு, அரசியல், நாகரிகம், விளையாட்டு எனப் பல்வேறு துறைகளுக்கென்று தனித்தனி இதழ்கள் தோன்றின. சிறுவர்கள், இளைஞர்கள், பெண்கள் எனப் பலதரப்பினருக்கான இதழ்களும் வெளிவரத் தொடங்கின. இவற்றில் பெண்களுக்கெதிரான இதழ்கள் பெண்களின் வாழ்வில் மாற்றத்தை உருவாக்குவனவாக வரவில்லை. பெண்களைப் பற்றிய பழமைவாதத்தின் நீட்சியாகவே இவ்விதழ்கள் உருக்கொண்டன.

பெண் என்பவள் சமையலறையில் சாதனை படைப்பவள் என்றும், அவள் தன்னை விதவிதமாய் அழகுபடுத்தி ஆண்களின் கண்களுக்கு விருந்தளிப்பவள் என்றும் அவ்விதழ்கள் கருதி வெவ்வேறு படைப்புகளை பெண்களுக்காக வழங்கி வந்தன. இன்றைய பெண் இதழ்களின் உள்ளடக்கம் பற்றி 'மாறிமாறிப் பின்னும்' நாவல் பேசுகிறது. நித்ய சுமங்கலி யார் என்பதற்கான விடைகள், தாலிக்கயிற்றில் மஞ்சள் வைக்கப்படுவதன் அவசியம், குங்குமம் தயாரித்தல், நடிகைகள் கட்டும் விலையுயர்ந்த புடவைகள் பற்றிய தகவல்கள், பட்டுச்சேலை பாதுகாக்கும் போட்டிகள், பாத்திரப்பரிசுகள், இல்லத்தரசிகளுக்கான ஆன்மீக அறிவுரைகள், அந்தரங்க அறிவுரைகள் போன்ற உள்ளடக்கத்துடன் வெளிவந்த ஒரு பெண்கள் இதழ் பற்றிய செய்தி நாவலில் இடம் பெற்றுள்ளது. கணவன் வேறு பெண்ணுடன் தகாத உறவு வைத்திருப்பதைப் பற்றிய ஒரு பெண்ணின் கேள்விக்கு, வீட்டில் தேவையான உணவு கிடைக்காத குழந்தைதான் வெளியில் விற்கும் தின்பண்டத்தை நாடிச் செல்வதாகப் பதில் சொல்லப்பட்டுள்ளது. பிற பெண்களுடனான ஆணின் உறவுக்கு மனைவியைக் காரணமாக்கும் பிற்போக்குப் பதிலாக இது அமைந்துள்ளது.[71]

பெண்களுக்கு எதிராக இயங்கும் பெண்கள் இதழ்கள் பற்றிய பதிவாக இதனைக் கொள்ள முடிகிறது.

**5.14. அதிகார வன்முறை**

காவல்துறை என்பது ஒவ்வொரு தனி மனிதனுக்கும் பாதுகாப்பு வழங்க வேண்டிய அமைப்பாகும். சமூகக் குற்றங்களுக்குத் துணை போகாமல் மக்களைக் காவல் செய்கின்ற பொறுப்பு அத்துறைக்கு உள்ளது. தவிர்க்க முடியாத தருணங்களில் தடியடி, துப்பாக்கிச்சூடு என தண்டனைகள் வழி அமைதியை நிலைநாட்டும் அதிகாரம் நிறைந்த பொறுப்பு காவல்துறையிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. சமூக அநீதிகளின்று தம்மைக் காக்க ஏழை மக்கள் காவல் துறையையும், நீதித்துறையையும் மட்டுமே நம்பியிருக்கும் நிலை உள்ளது. பெண்களுக்கெதிரான வன்முறைகள் நிகழாவண்ணம் தடுக்கும் பொறுப்பை அரசு காவல்துறையிடம் வழங்கியுள்ளது. பெண்களைக் கேலிசெய்தல், வன்புணர்வு, குடும்ப வன்முறை, வரதட்சணைக் கொடுமை என அனைத்துச் சிக்கல்களுக்கும் நீதிமன்றங்களை நாடும் முன் மக்கள் காவல்துறையிடம் நீதி கோருவதைக் காணமுடிகிறது. மக்களின் முழுமையான நம்பிக்கைக்குரிய அமைப்பாகத் திகழவேண்டிய காவல்துறை சில சமயங்களில் குற்றத்தின் களமாகத் தடம் விலகிச் சென்று விடுகிறது. ஆளும் வர்க்கத்திற்குத் துணை போதல், அதிகார வர்க்கத்துடன் ஒத்துச் செல்லுதல், முதலாளித்துவத்தின் அநீதிகளோடு சமரசம் செய்து கொள்ளுதல், பாமர மக்களுக்கெதிரான நிலைப்பாட்டில் இயங்குதல், போலி வழக்குகளைப் பதிவு செய்தல், பாலியல் தவறுகளில் ஈடுபடுதல், கையூட்டுப் பெறுதல் போன்ற தவறுகளில் காவல் துறை ஈடுபடும் போது ஏழைகள் பக்கம் நீதி வந்து சேரமுடியாத நிலை நீடித்து விடுகிறது.

இராஜம் கிருஷ்ணன் காவல் துறையின் அதிகார அத்துமீறல்கள் குறித்த பதிவுகளைச் சில நாவல்களில் தந்துள்ளார். ‘அலைவாய்க்கரையில்’ நாவலானது மத அதிகார அமைப்பும், காவல்துறை அதிகார அமைப்பும் செய்யும் தவறுகளைக் கோடிட்டுக்

காட்டுகிறது. ஆலயத்துக்கு மகமை(வரி) கொடுத்தல் தொடர்பாகப் பாதிரியாருக்கும் ஒரு கூட்டம் ஏழை மக்களுக்கும் இடையே பிரிவினை வெடித்த போது காவல்துறை ஏழைகளின் பக்கத்தில் நிற்கவில்லை. பாதிரியாரின் பக்கமே நிற்கிறது. பாதிரியாரால் காவல்துறைக்கும் கடுமையான விருந்துபசாரம் நடை பெறுகிறது. பாதிரியாரை எதிர்ப்பவர்களின் வீடுகளிலிருக்கும் ஆடு, கோழி ஆகியவை அவர்களுக்கு உணவாகின்றன. பெண்களை இழுத்து வந்து வெறிதீர்த்துக் கொள்ளும் அநீதியும் அரங்கேறிக் கொண்டிருக்கிறது.[72]

இவ்வாறு பெண்களின் உடல்மீது தனது அதிகாரத்தை நிலைநாட்டும் காவல்துறையின் அத்துமீறல்களை நாவல் வெளிச்சத்துக்குக் கொண்டுவருகிறது.

பெண்களைப் பாதுகாக்க வேண்டிய காவல்துறை சில நேரங்களில் பெண்களுக்கெதிராகவும் செயல்படுவதை ‘மானுடத்தின் மகரந்தங்கள்’ நாவல் சுட்டிக்காட்டுகிறது. காவல்துறை அதிகாரி ஒருவரின் அத்துமீறல் இந்நாவலில் சொல்லப்படுகிறது. அவ்வதிகாரி வேலைக்காரப்பெண்ணிடம் தவறாக நடந்துகொள்ள முயலுகின்றறார். வேலைக்காரியோ தவறுக்கு உடன்படாது வீட்டுக்குச் சென்று விடுகிறாள். அடுத்தநாள் வெள்ளிப்பாத்திரங்கள் திருடப்பட்டதாகக் கூறி அப்பெண் காவல் நிலையத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டு, துன்புறுத்தப்படுகிறாள்.[73]

இவ்வாறு ஆண்கள் கையிலிருக்கும் சட்ட ஒழுங்குத்துறைகள் பெண்களுக்கு நீதி வழங்குவது குறித்த ஐயத்தை இப்பகுதி எழுப்புகிறது.

அரசின் உயர்பதவியிலிருப்பவர்கள் பெண்களைப் பாலியல் கருவியாகப் பயன்படுத்துவது குறித்து ‘அழுக்கு’ நாவல் பேசுகின்றது. ரமேஷ் சந்திரா எனும் கான்ட்ராக்டர் அரசின் உயர்பதவிகளிலிருப்பவர்களுக்குப் பெண்களையும், நீலப்படங்களையும்

வழங்கி வருகிறான். இவனோடு தொடர்பிலிருந்த சம்பகா என்பவளைக் கொலை செய்துவிட்டு, அவளது கணவன் மீது பழியைப் போடுகிறான்.

இவ்வாறு அதிகாரத்துறைகளில் பணிபுரிவோர் பெண்ணுக்கு அநீதி இழைப்பவர்களாக உள்ளமை எடுத்துக்காட்டப்படுகிறது.

## 5.15. கலாச்சார நெருக்கடி

கலாச்சாரம் என்பது பண்பாடு, பழக்கவழக்கம், மதநம்பிக்கைகள், தொன்மங்கள், இலக்கியம், கலை, விழுமியங்கள் போன்றவற்றை உள்ளடக்கியது. இந்தியக் கலாச்சாரம் பெண்ணுக்குப் பல்வேறு நெருக்கடிகளை உருவாக்கியுள்ளது. இராஜம் கிருஷ்ணன் பழமைகளைத் தூக்கியெறியும் தகர்ப்புவாதியில்லை எனினும், அதற்கெதிராக மெல்லிய விமர்சனங்களை முன்வைக்கத் தவறுதில்லை. கலாச்சாரத்தை முன் வைத்துப் பெண்ணை மட்டும் நெருக்கடிக்குள்ளாக்குவதைப் பதிவு செய்யத்தவறுவதில்லை. பெண்ணுக்கு நெருக்கடி தரும் கலாச்சாரம் தொடர்புடைய கூறுகளில் கீழ்க்காணுபவை பற்றிய தமது அழுத்தமான பார்வைகளை அவர் பதித்துள்ளார். அவை வருமாறு:

5.15.1. மதத்தில் பெண்ணடிமைத்தனம்

5.15.2. இலக்கியப் பிற்போக்குத்தனம்

5.15.3. பண்பாட்டுச் சிக்கல்

5.15.4. விழுமியங்களின் இறுக்கம்

ஆகியவை பெண்ணுக்கெதிரான தன்மைகளை உள்ளடக்கியிருப்பதால் அவற்றை இராஜம் கிருஷ்ணன் விமர்சனத்துக்கு உள்ளாக்குகிறார்.

### 5.15.1. மதத்தில் பெண்ணடிமைத்தனம்

ஆணால் உருவாக்கப்பட்ட மதம், அதன் கொள்கைகள், கதைகள் சட்டங்கள் நிறுவனமயப்படுத்தல் அனைத்தும் பெண்ணை இரண்டாம் நிலைக்குத் தள்ளியன. பெண்ணியம் இதனை உடைக்க முற்பட்டது. ரமேஷ் எனும் அறிஞர் இது பற்றிக் குறிப்பிடும்போது,

> “இதுகாறும் கட்டப்பட்டிருக்கும் அதிகார நிறுவனங்களின் சகல பரிமாணமம் ஆணின் ஏகாதிபத்தியமாக

இருந்திருப்பதன் முக்கிய உருக்கொண்டிருப்பது சமய மத நெறிகள் என்பதனைக் கண்டு கொண்டிருக்கிற பெண்ணின் பேச்சும் பெண்ணியமாக வெளிப்பட்டிருக்கிறது''[74]

என்கிறார். இதில் பெண்ணுக்கெதிரான மதக்கருத்தாக்கங்களை எதிர்க்கும் கோட்பாடாகப் பெண்ணியத்தை இரமேஷ் மதிப்பிடுகிறார். பெண்ணியம் பேசுவோர் பெண்ணுக்கெதிராகச் செயற்படும் மதத்தை விமர்சிக்கத் தவறுவதில்லை. உலகிலுள்ள எல்லா மதத்திலுள்ள பெண்களும் ஒரே தன்மையில் இருப்பதாகச் சிபிச்செல்வன் மொழிகின்றார்.

‘‘பெண்களுக்கென்று தனியாக மதம் கிடையாது. உலகின் எந்த மதத்தின் பெண்ணும் அடிப்படையில் ஒன்றுபோலவே உள்ளாள். அதற்கான காரணம் உண்மையில் மதங்கள் யாவும் ஆண்களால் உருவாக்கப்பட்டவைகள்''[75]

ஆண்களால் உருவாக்கப்பட்டதால் மத நிறுவனத்துக்குள் பெண் அடிமையாக இருப்பதாகச் சிபிச்செல்வனின் கருத்து அமைந்துள்ளது.

பெண்ணுக்கெதிரான விதிகளை மதங்கள் உருவாக்குவதாகக் கூறும் அமரந்தாவின் கருத்து இங்கு ஒத்து நோக்கத்தக்கது.

‘‘பெண்ணடிமை நிலையில் கொழுத்த லாபமடையும் மதங்கள் தனது பல்வேறு நிறுவனங்களின் மூலம் பெண்களை அறியாமை இருளுக்குள் ஆழ்த்துகின்றன. மடங்களும் கோயில்களும் அர்த்தமற்ற சடங்குகளையும், சம்பிரதாயங்களையும் மேற்கொள்ளுமாறு நிர்ப்பந்தித்து, குடும்பக் கடமைகளை நிறைவேற்றியது. போக மீதமுள்ள நேரத்தில் தப்பித்தவறியும் பெண்கள் அறிவுப்பூர்வமாகச் சிந்தித்து விடாமல் தடுக்கின்றன''[76]

என்று அமரந்த்தா குறிப்பிடுகிறார்.

உலகிலுள்ள எல்லா மதங்களுமே பெண்ணை உயர்வான நிலையில் வைத்திருப்பதாகச் சொல்லிக் கொள்ளுகின்றன. ஆனால்

செயல்பாட்டு ரீதியாக அவை பெண்ணை அடிமையாகவே வைத்திருக்கின்றன. ஏனெனில் மதங்கள் ஆணால் கட்டமைக்கப்பட்டவை. மத அதிகார அமைப்புகளும் தலைமைப் பீடங்களும் ஆணின் கையில்தான் உள்ளன. இராஜம் கிருஷ்ணன் பெண்ணை அடிமையாக்கும் மதங்களைப் பல இடங்களில் கண்டிக்கிறார். 'மாறிமாறிப் பின்னும்' நாவல் இந்து சமயத்துக்குள் பெண் தாழ்த்தப்படுவதை எடுத்துக்காட்டுகிறது. இதழொன்றில் குருசுவாமிகள் பெண்களுக்கெதிரான அறம் போதிப்பதை நாவல் எடுத்துக்காட்டுகிறது.

> "பெண்கள் இக்காலத்தில் வேலை செய்யப் போகிறார்கள். அவர்கள் வீட்டில் பதிக்கேற்ற சதியாக இருப்பதுதான் பாரத தர்மம்"[77]

எனப் பெண்கள் வேலைக்குச் செல்வதை குருசுவாமிகள் கண்டிக்கிறார். பெண்கள் திருமணம் செய்யாமல் இருப்பது தவறு என்றும் அதனால்தான் இயற்கைப் பேரழிவுகள் தோன்றுவதாகவும் அவர் அறிவுறுத்துகின்றார். பெண்கள் பதிசேவையை மறக்கலாகாது என்றும் அவர் வலியுறுத்துகிறார்.[78]

இதில் கணவனுக்கு வேலை செய்வதைத் தவிர பெண்களுக்கு வேறு வேலைகள் தேவையில்லை என்ற பிற்போக்குக் கருத்து கற்பிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட பெண்ணுக்கெதிரான கருத்துக்களைத் தக்கவைத்துக் கொள்பவையாக மதங்கள் இருப்பதை நாவல் எடுத்துக்காட்டுகிறது.

மதச்சார்பின் மரபுகள் பெண்களை அடிமைப்படுத்துவதாகத் 'தோட்டக்காரி' நாவலும் நுவலுகிறது.

### 5.15.2. இலக்கியப் பிற்போக்குத்தனம்

இலக்கியங்களின் முக்கியப் பாடுபொருளாகப் பெண்மை உள்ளது. பெண் பற்றிய இலக்கியச் சித்திரிப்புகள் அவளுக்கு உயர்ந்த இடத்தை வழங்கவில்லை. இலக்கிய உற்பத்தியின் பெரும்பான்மைப் பங்களிப்பு ஆண் வர்க்கத்திடமிருந்து வந்ததால்

பெண்ணுக்கெதிரான போக்கு உருப்பெற்றிருக்க முடியும். பெண்ணின் ஆளுமையைச் சிறப்பிக்கும் படைப்புகள் மிகக் குறைவாகவே எழுதப்பட்டுள்ளன. வருணனைகளிலும், கதைகளிலும், பெண்ணைக் கொச்சைப்படுத்தும் போக்கு மிகுந்து காணப்படுகிறது. இலக்கியத்தில் பெண் இழிவுபடுத்தப்படுதல் குறித்த விவாவதங்களை புனைகதையின் ஊடாக இராஜம் கிருஷ்ணன் எழுப்பிச் செல்லுகிறார்.

'மாறிமாறிப் பின்னும்' நாவல் நாயகி ரேவதியும், என்.கே.ஆரும் தங்கள் உரையாடலில் இலக்கியங்கள் பெண்களை இழிவுபடுத்துவது பற்றி விவாதிக்கின்றனர். ஓர் ஆணைக் குப்புறத்தள்ளி கெடுப்பவள் பெண்தான் என்பதை மையமாகக் கொண்டு ஏராளமான நாவல்கள் வெளிவந்திருப்பது இவ்வரையாடலில் சுட்டிக்காட்டப்படுகிறது. ஆண் மனைவியை விட்டு வெளியேறினாலும், குடித்தாலும் அவை அனைத்திற்கும் பெண்ணே பொறுப்பேற்க வேண்டும் என்று இலக்கியங்கள் கற்பிப்பதும் எடுத்துக்காட்டப்படுகிறது. உலகியல் வழக்கில் பாடுபடும் பெண் இலக்கிய வழக்கிலோ பாவம் செய்யும் பெண்ணாக விகாரப் படுத்தப்படுவதும் உரைக்கப்படுகிறது. இலக்கியங்கள் பெண்ணை மாயப்பிசாசாக உருவகப்படுத்துவது இவ்வுரையாடலில் விமர்சிக்கப்படுகிறது. சங்கராச்சாரியாரின் 'பஜகோவிந்தம்' பெண் மாயை என்றால் தாயும் மாயைதானா? என்ற வினாவும் எழுப்பப்படுகிறது. பெண்ணைப் பழித்து விட்டு அம்பாளைப் புகழ்வது வேடிக்கையானது என்றொரு விமர்சனமும் வைக்கப்படுகிறது.''[79]

உலக இலக்கியங்கள் ஆணாதிக்கக் கருத்தியல்களால் நிறையப் பெற்றதாகவே அமைந்துள்ளன. தமிழிலக்கியமும் இதற்கு விதிவிலக்கல்ல. அச்சம், மடம், நாணம் என்பவை தொல்காப்பியர் காலத்திலிருந்தே பெண்ணுக்கான ஒழுக்கங்களாக வலியுறுத்தப்பட்டு வருகின்றன. பெண் பேதையாக இருக்கும் வரைதான் ஆண் அறிவாளி போல நடிக்கமுடியும் என்பதால் ஆண் வர்க்கம் பெண்ணைப் பேதையாகவே தொடர்ந்து வைத்து வருகிறது.

“பெண்ணுக்குள் ஞானத்தை வைத்தான்-புவி
பேணி வளர்த்திடும் ஈசன்”[80]

என்ற முற்போக்குச் சிந்தனை இருப்பதாம் நூற்றாண்டில் வந்து சேருகிறது. ஆனாலும் ஆணாதிக்கம் கற்பித்த பழைய பிற்போக்குப் படிமங்கள் பெண்மனதை விட்டு எளிதில் அகலாத நிலை உள்ளது.

“அறியாமையும் பேதமையும் ஓர் அழகுதான் என்று நினைக்கிறாள் கனகா. பெண்மைக்கு அணிகலன் பேதமை என்று யாரோ சொல்லிவைத்தது நினைவுக்கு வருகிறது”[81]

என்று கூடுகள் நாயகியான கனகா பேதமையை வரவேற்பது அவளது மூளையில் படிந்த ஆணாதிக்க இலக்கியக் கசடுகளின் எச்சம் எனலாம்.

**5.15.3. பண்பாட்டுச் சிக்கல்**

மேற்கத்தியக் கலாச்சாரம் திருமணத்தையும் விவாகரத்தையும் இயல்பான முறைமைகளாகக் கருதுகின்றது. மனக்கசப்புகளால் உருவாகும் பிரிவை அக்கலாச்சாரம் தவறாகக் கருதுவதில்லை. நமது இந்திய பண்பாடு ‘கல்லானும் கணவன், புல்லானாலும் புருஷன்’ என்கிறது. பரத்தையிடம் சென்று திரும்பும் தலைவனை நிராகரிக்கும் உரிமை முழுமையாகப் பெண்களுக்கு வழங்கப்படவில்லை. மனைவியைக் கணவன் எவ்வளவு துன்புறுத்தினாலும் அவனைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளது. விலை மாதுவிடமோ, காதலியிடமோ, இரண்டாம் மனைவியிடமோ சென்று வரும் கணவன் உறவைத் துண்டிக்கும் மனநிலையை நமது பண்பாடு உருவாக்கவில்லை. ஆணாதிக்கத்தின் முற்றுப்பெறாத தொடர்ச்சிக்கான காரணங்களுள் இதுவும் ஒன்று. ‘மாறிமாறிப் பின்னும்’ நாவலில் ரேவதியின் கணவன் பல்வேறு அத்துமீறல்களை நிகழ்த்திய பின்னரும் அவனை ஏற்றுக்கொள்ளும்படி என்.கே.ஆர்.என்னும் பெரிய மனிதர் அறிவுரை வழங்குகின்றார். அதற்கு அவர் நமது பண்பாட்டைக் காரணம் காட்டுகிறார்.

“தமிழ்ப்பண்பாடு, இந்தியப்பண்பாடும்பாங்க கலியாணம் பண்ணிக் குடும்பமாக இருந்தவங்க விலகக்கூடாது. அவதான் விலகிப் போகணும். கோவலனாகிப் போன புருஷனை இவங்கதான் கண்ணகியாக இருந்து ஏற்கணும்”[82]

என்கிறார். மாதவியிடம் செல்லும் கோவலன் உறவைத் துண்டிக்கும் புரட்சியை ஈராயிரமாண்டு காலங்கடந்த பின்னும் தமிழ்ச்சமுகம் நிகழத்தத் தயாராக இல்லை என்பதை ஆசிரியர் நினைவு படுத்துமிடமாக இதனைக் கொள்ள முடியும்.

### 5.15.4. விழுமியங்களின் இறுக்கம்

சமூகம் ஒழுக்கத்தினின்று தடம்புரளாமல் இருக்க இலக்கியங்கள் விழுமியங்களை விதைத்தன. விழுமியங்களைப் புறந்தள்ளும் மக்கட் தொகுதி விழுந்து போகும் என அவை எச்சரித்தன. பின்பற்றத் தகுந்த பல்வேறு பண்பமைதிகளை அவை பேசின. இலக்கியங்கள் வலியுறுத்திய விழுமியங்களில் ஒழுக்கமும், கற்பும் முக்கிய இடம் பிடித்தன. நவீன பெண்ணியவாதிகள் கற்பு, ஒழுக்கம் போன்ற கோட்பாடுகளை ஒத்துக் கொள்வதில்லை. ஏனெனில் இவ்விழுமியங்கள் பெண்ணை மாத்திரம் கட்டுப்படுத்துகின்றன. பெண்ணுக்கு விதிகளையும், ஆணுக்கு விதிவிலக்குகளையும் சமுகம் வழங்கி வந்துள்ளமையால் பெண்ணியவாதிகளால் இக்கோட்பாடுகள் விமர்சனத்துக்குள்ளாயின. இருபாலருக்கும் பொதுவான ஒழுக்கங்கள் வகுக்கப்பட வேண்டும் என அவர்கள் குரல் கொடுத்தனர்.

“கற்பு என்பது காலிடுக்குள் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய கடைச்சரக்கல்ல. அது உள்ளத்தின் உறுதிப்பாடு. அது ஆணுக்கும் வேண்டும், பெண்ணிற்கும் வேண்டும்”[83]

எனப் பெண்ணியம் பேசும் ஆண்களும் நடுநிலையோடு அறிவுறுத்தினர்.

“கற்பு என்பது வெறும் பெண்ணினம் சார்ந்தது மட்டுமல்ல, ஆணினத்தையும் சேர்ந்ததுதான்”[84]

என்பர். கொள்கை சார்ந்து ஆண்-பெண் இருவருக்கும் கற்பு எனப் பேச்சளவில் கூறிக்கொண்டாலும் நடைமுறையில் அவ்விழுமியம் பெண்ணை மட்டுமே இறுக்கியது. எனவே, பெண்ணியம் பேசும் பெண் அறிஞர்கள் கற்பு நெறியை மறுபரிசீலனை செய்தனர்.

பெண் மீது பழிபோடவும் அடக்கி வைக்கவும் ஆண் சமூகம் ஒரு சாட்டையைப் போல் கற்பைக் கையிலெடுத்து வைத்திருப்பதாக சரோஜினி, குறிப்பிடுகிறார். சமூகத்தில் உள்ள அனைத்துப் பெண்களையும் இழுத்துக்கட்ட 'கற்பு' எனும் கயிறு பயன்படுத்தப்படுவதாகவும், அவர் படிமங்கள் வழி புலக்காட்சி முன் கற்பைக் கொண்டு வருகிறார்.

> ''சரி பாதியாக இருக்கும் பெண்ணினத்தைத் தன் வசதிக்கும் ஆணுக்கும் தக்கபடி அடக்கி வைப்பதற்கு ஆணினம் கையில் எடுத்துக்கொண்ட சாட்டையாகக் கற்பு பயன்படுத்தப்பட்டுள்ளது. மாட்டை வயமாக்கப் பயன்படும் தார்க்குச்சி போன்று மனைவியை அடிமைப்படுத்துவதற்கு இந்த கற்புப் பயன்பட்டுள்ளது. ஆனால் ஒரு வீட்டிற்குள் என்றில்லாமல் சமுதாயம் முழுவதிலும் உள்ள பெண்களை ஒட்டு மொத்தமாகக் கட்டிப்போடுவதற்குக் கற்பு ஒரு கயிறாக மாற்றப்பட்டு விட்டது''[85]

என்பதில் சரோஜினி பெண்ணை அடக்க உருவாக்கப்பட்டதாகக் கற்புக் கோட்பாட்டை நோக்குகிறார். தமிழ்ச்சமுகம் கொண்டாடிக் களிக்கிற 'கற்பு' என்ற சொல்லாட்சி வத்ஸலா என்ற பெண்ணியவாதியால் கெட்டவார்த்தையாக்கப்படுகிறது.

> ''தன் சொத்துக்கள் தன் வம்சத்திற்கே சேரவேண்டும் என்று ஆண் நினைத்த அன்று கற்பு என்கிற கெட்ட வார்த்தை பிறந்தது. பெண்ணே ஒரு சொத்தானாள். தன் வீட்டில் சிறைப்பட்டாள்.''[86]

எனக் கற்புக் கோட்பாடு பெண்ணை உடைமையாக்கிய செய்தி சொல்லப்படுகிறது.

ஆணின் ஒழுக்கம் மீறிய செயலை அவனது கற்புடன் தொடர்பு படுத்திப் பார்ப்பதில்லை. பெண்ணின் சிறு ஒழுக்கக் குறைவும் அவளது கற்புடன்தான் இணைத்துப் பார்க்கப்படுகிறது. பெண் மீது வேற்று ஆணுக்கு ஆர்வம் வந்தாலும் அது பெண்ணின் கற்பின்மையாகவே கருதப்பட்டு வருகிறது. இராஜம் கிருஷ்ணன் தனது திறனாய்வுக் கட்டுரைகளிலும், புனைகதைகளிலும் கற்பு என்பதை விசாரணைக்குட்படுத்துகிறார்.

> “அபவாதம் என்பது நடத்தை மீது மாசு.... மாசு என்பது கற்பு என்ற ஓர் நிலையை வைத்து ஏற்றப்படுகிறது. கற்பென்ன கற்பு? ஒழுக்கக்குறைவு ஆணினால் நேர்ந்தாலும் பெண்ணையே குறியாக்கித் தாக்குவது எந்த நியாயம்”[87]

என்று கற்பு பற்றிய மரபார்ந்த பார்வையின்மீது கேள்வியெழுப்புகிறார்.

‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவலில் கதைத் தலைவியாகிய மீனா கற்புக்கோட்பாட்டுக்குப் பின்னால், இருக்கும் ஆணின் அரசியலை வெளிக்கொணர்கிறாள். ஆண் குடும்பத்துக்குள் மனைவியின் முன் அவனது மேலான ஆண்மை ஆதிக்கத்தைப் நிலைநாட்டி கர்வத்தோடு நடக்கப் பார்ப்பதாகவும் அது முடியாமற் போகும் போது கற்பென்னும் ஆயுதத்தைக் கையிலெடுத்துப் பெண்ணை இழிவு படுத்துவதாகவும் குறிப்பிடுகிறாள். பெண்ணை இழிவுபடுத்துவதற்காக உருவாக்கப்பட்டதுதான் கற்புக் கோட்பாடு என்பதனை அவளது கூற்றிலிருந்து அறிய முடிகிறது. பெண்ணின் ஆன்மாவைக் குத்தி எடுக்கும் கூர்வாளாகக் கற்பு இவ்விடத்தில் காட்டப்படுகிறது. கற்புக்குப் பெண் ஒருத்திதான் பொறுப்பேற்க வேண்டியுள்ளது என்ற உண்மையும் சொல்லப்படுகிறது.[88]

இவ்வியலில் பெண் சிசுக்கொலை நிகழ்வதற்கான காரணங்கள் ஆராயப்பட்டுள்ளன. உப்பளத்தொழிலிலும் தீப்பெட்டித் தொழிலிலும் குழந்தைத் தொழிலாளர்கள் சந்திக்கும் இன்னல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. குழந்தைத் திருமணம் பற்றிச்

சுருக்கியுரைக்கப்பட்டுள்ளது. பெண்கல்வி தடைபடுவதற்கான காரணங்கள் ஆராயப்பட்டுள்ளன. வரதட்சணைக் கொடுமை பற்றிய கருத்துக்கள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. இம்சை கலாச்சாரம், ராகிங்கொடுமை ஆகியவையும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன பாலியல் சுரண்டல், வன்புணர்வு ஆகியவையும் விளக்கப்பட்டுள்ளன. மேல் தட்டிலும், அடித்தட்டிலும் நிகழும் பரத்தமைப் பற்றியும் சொல்லப்பட்டுள்ளன. கைம்பெண்கள் சந்திக்கும் துயர்களும் விரிவாகப் பேசப்பட்டுள்ளன. தொழில் சார்ந்து பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. பெண்களுக்கு எதிராக செயல்படும் ஊடக வன்முறையும், வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அதிகார வன்முறை, கலாச்சார நெருக்கடி ஆகிய பொருண்மைகளும் விவாதிக்கப்பட்டுள்ளன. மொத்தமாகப் பார்க்கும் போது இவ்வியல் இராஜம் கிருஷ்ணன் புனைகதைகள் என்ற சாளரம் வழியாகச் சமூகச் சிக்கல்களைக் கண்டறிந்து வெளிப்படுத்தியுள்ளது.

## சான்றெண்விளக்கம்

1. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப்பூந்துளிகள், ப.64
2. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப்பூந்துளிகள், ப.221
3. மேலது, ப.221
4. மேலது, ப.162
5. மேலது, ப.222
6. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், ப.12
7. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.71
8. க.பஞ்சாங்கம், பெண்மொழிபுனைவு, ப.2
9. மேலது, ப.5
10. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.89
11. மேலது, ப.89
12. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.27
13. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.60
14. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.109
15. மேலது, ப.102
16. மேலது, ப.102
17. க.பஞ்சாங்கம், பெண் மொழிபுனைவு, ப.13
18. பத்மபிரியா, பெண்ணிய இலக்கியப்பதிவுகள், ப.6
19. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், ப.20
20. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், பக்.71-72
21. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.19

22. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.8

23. இராஜம்கிருஷ்ணன், அழுக்கு, ப.57

24. இராஜம்கிருஷ்ணன், கூட்டுக்குஞ்சுகள், ப.33

25. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், ப.126

26. மேலது, பக்.157-158

27. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.207

28. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.90

29. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம், ப.158

30. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.67

31. மேலது, ப.79

32. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.118

33. இராஜம்கிருஷ்ணன், அலைவாய்க்கரையில், ப.65

34. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், பக்.108-112

35. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.200

36. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், பக்.170-171

37. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.96

38. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.260

39. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், ப.59

40. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.208

41. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.163

42. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.139

43. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், ப.187

44. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.32

45. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.172

46. கந்தையா பிள்ளை, பெண்கள் உலகம், ப.26

47. மேலது, ப.27

48. இராஜம்கிருஷ்ணன், புயலின் மையம், ப.9

49. மேலது, ப.42

50. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.95

51. மேலது, ப.42

52. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், பக்.32-33

53. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.43

54. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், ப.53

55. இராஜம்கிருஷ்ணன்-கோடுகளும் கோலங்களும், ப.7

56. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், ப.40

57. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.96

58. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், ப.71

59. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், ப.11

60. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.118

61. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், ப.63

62. மேலது, பக்.63-66

63. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், ப.10

64. மேலது, ப.74

65. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.204

66. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், ப.12

67. பத்மபிரியா, பெண்ணிய இலக்கியப் பதிவுகள், ப.19

68. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், பக்.66-67

69. மேலது, பக்.160-161

70. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.50

71. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், பக்.13-16

72. இராஜம்கிருஷ்ணன், அலைவாய்க்கரையில், ப.206

73. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.35-36

74. ரமேஷ், கவிதையில் மறுவாசிப்பு, ப.97

75. அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.39

76. மேலது, ப.73

77. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், ப.30

78. மேலது, ப.30

79. மேலது, பக்.164-167

80. பாரதியார் கவிதைகள், ப.238

81. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், ப.145

82. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், ப.8

83. மஞ்சை வசந்தன், பெண்ணுக்கு வேண்டாம் பெண்மை, ப.11

84. சந்திரசேகரன், செம்மொழித் தமிழ் இலக்கியத்தில் கற்புநெறி, ப.32

85. சரோஜினி-கற்பு அன்று முதல் இன்றுவரை, ப.2

86. அரங்கமல்லிகா, பிரேமலதா முதலியோர், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப.84

87. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள், அடங்கிய பிறகு, ப.245

88. மேலது, ப.179

## இயல் - 6

## தீர்வுகள்

'கலை கலைக்காகவே', 'கலை மக்களுக்காகவே' என்னும் இருவகைக் கோட்பாட்டாளர்களை நவீன இலக்கிய உலகில் காணமுடிகிறது. 'கலை கலைக்காகவே' என்பவர்கள் படைப்பின் நுணுக்கங்களை உயர்த்திப் பிடிக்கின்றனர். இத்தகைய கொள்கையைப் பேசுபவர்கள், திறனாய்வுத் துறையில் மட்டுமின்றி படைப்புத்துறையிலும் மிகுந்து காணப்படுகின்றனர். இவர்களது படைப்புகள் அழகியலில் கவனம் கொள்கிறது. செய்நேர்த்தி, உத்திகள், மொழிநடை போன்றவற்றை நோக்கியே இவர்களது பார்வை குவிகிறது. இவர்கள் சமூகப்பார்வை மிக்கப் படைப்புகளையும், அறவியல் இலக்கியங்களையும் 'பிரச்சாரங்கள்' என்ற முத்திரை குத்தி ஒதுக்கி விடுகின்றனர். இக்கோட்பாட்டாளர்களின் மறுபுறத்தில் கலையைப் பயன்பாட்டுக்குரியதாகக் கருதுவோரும் காணப்படுகின்றனர். படைக்கப்படும் இலக்கியம் தனிமனித மற்றும் சமூக மாற்றத்திற்கு வழிகோல வேண்டும் எனும் முனைப்பு இவ்வகை எழுத்துக்களில் காணப்படுகிறது. மேதாவிகளின் அறிவுச்செருக்கை இவர்கள் புறத்தள்ளுகின்றனர். நோய்க்கூறு கொண்ட சமூகத்திற்கு மருந்தாகவே இத்தகைய இலக்கியங்கள் உருப்பெருகின்றன. பாட்டாளிகள், பாமரர்கள், அடித்தட்டு மக்கள் ஆகியோரும் புரிந்து கொள்ளும் வண்ணம் இப்பிரதிகள் உருப்பெருகின்றன. சமூகப் பிரச்சினைகளைக் கோடிட்டுக்காட்டுவது, அலசி ஆராய்வது என்பதோடு நின்றுவிடாமல் பிரச்சினைகளுக்கான தீர்வை நோக்கி சமூகப்பார்வை மிக்க இலக்கியங்கள் நகர்கின்றன. இலக்கியத்தின் பெரும்பான்மைப் பகுதியைச் சமூகச்சிக்கல் பற்றிய சித்திரிப்பாய் வைத்துவிட்டு, இறுதியில் சிறுபக்கங்களை தீர்வுகள் எனப் பட்டியலிட்டால் அது படைப்பாக அமைய முடியாது. எனவே சிக்கலின் நடுவே தீர்வுகளும் ஊடாடிக்கிடக்கும் வண்ணம் எழுத்துக்கள் அமைக்கப்படுகின்றன.

இராஜம் கிருஷ்ணனின் எழுத்து கலை கலைக்காகவே என்பாரின் சான்றிதழுக்காகக் காத்துக் கிடப்பவை அல்ல. அவை

சமூகத்தின் சிக்கல்களை, குறிப்பாகப் பெண்களின் சிக்கல்களை வெளிக்கொணர்வதில் அதிக கவனம் செலுத்துகின்றன. இவரது புனைகதைகள் பிரச்சினைகளை மேலோட்டமாகச் சுட்டிச்செல்லாது, ஆழமான விவரிப்புகளோடு முன்னிறுத்துகின்றன. அத்துடன், கதையின் ஓட்டத்திற்கும், அழகுக்கும் தடை ஏற்படாத வண்ணம் கதையின் நடுவே தீர்வுகளையும் முன்வைக்கின்றன. கட்டுரையில் வெளிப்படுத்தப்படுவதைப் போன்ற தன்மையில் புனைகதைகளில் தீர்வுகளைச் சொல்ல முடியாது என்பதால் இப்படைப்பாளி ஆசிரியர் கூற்றாகவோ பாத்திரக் கூற்றாகவோ மிக மெல்லியதாய்த் தீர்வுகளைத் தருகிறார். பாத்திரங்களின் செயல்பாடுகளும் சில இடங்களில் தீர்வுகளை நோக்கிய படிப்பினையைத் தருகின்றன.

இராஜம் கிருஷ்ணன் புனைகதைகளில் எடுத்துக்காட்டப்படும் குடும்ப, சமூகச்சிக்கல்கள் முந்தைய இயல்களில் எடுத்தோதப்பட்டுள்ளன. இவ்வியலில் ஒவ்வொரு சிக்கலுக்கும் தனித்தனித் தீர்வு என்றில்லாமல், பொதுவாக அனைத்துப் பிரச்சினைகளுக்குமான தீர்வுகளும் தரப்படுகின்றன. இராஜம் கிருஷ்ணனின் புனைகதைகள் வழியாகப் பெறப்படும் தீர்வுகள் கீழ்க்காணும் தலைப்புகளின் கீழ் ஆராயப்படுகின்றன.

6.1. கல்வி உரிமை
6.2. பொருளாதாரச் சுதந்திரம்
6.3. தொழில் சார்ந்த விடுதலை
6.4. குடும்ப அமைப்புக்குள் சீர்திருத்தம்
6.5. சமூக விடுதலை
6.6. பண்பியல் மாறுதல்கள்
6.7. விழிப்புணர்வூட்டல்
6.8. பெண் சக்தியை ஒன்றிணைத்தல்
6.9. போராட்டம்
6.10. புரட்சி
6.11. பொதுவுடைமை

ஆகிய தீர்வுகளை இராஜம் கிருஷ்ணன் பேசுகின்றார்.

## 6.1. கல்வி உரிமை:

கல்வி என்பது குடும்பத்தைப் பொருளாதார மேம்பாடு நோக்கி அழைத்துச் செல்லும் தீர்வாக அமைகிறது. அத்துடன் பொருளாதார மரியாதை வழியாக சமூக மரியாதையைப் பெற்றுத்தருகிறது. சாதி சார்ந்த ஒடுக்குதல்களுக்குள்ளான சமூகங்கள் பிற பிரிவினரைப் போல உயர்ந்த இடத்துக்கு வர கல்வி, செல்வம், பதவி ஆகியவை உறுதுணையாக அமைகின்றன. கல்வியின் வழியாக செல்வம், பதவி ஆகியவற்றைப் பெற்றுக்கொள்ள முடியும். கல்வி வளர்ச்சி என்பது குடிசைகளில் இருக்கும் தாழ்த்தப்பட்ட மக்களை மாளிகைக்கு அழைத்து வருகிறது. உயர்வான ஆடைகள் அணியத் தூண்டி, தோற்றப்பொலிவையும் தன்னம்பிக்கையையும் வழங்குகிறது. கல்வி வழியாகப் பெறும் கல்விப்புலம் சார்ந்த அனுபவங்கள் வறுமையிலிருக்கும் சகமனிதனை மேனிலைக்கு ஆற்றுப்படுத்த உதவுகிறது. கைகட்டி நிற்கும் உடல் மொழியை மாற்றி, நிமிர்ந்து நிற்கச் செய்கிறது. நாற்றத்திலிருந்து வாசனைக்கும் அழுக்கிலிருந்து தூய்மைக்கும் அடிமைத்தனத்திலிருந்து மேலாண்மைக்கும் அழைத்துச் செல்லும் தீர்வாகக் கல்வி அமைகிறது.

> ‘‘கல்வி ஒன்றுதான் சமூக மாற்றத்திற்கான அடிப்படைக் கருவி. ஆண்/பெண் பாலியல் வேறுபாட்டை நீக்கிச் சமநிலைப்படுத்தும் ஓர் அற்புதமான செயல்முறை’’[1]

என்ற கருத்தை நோக்கும் போது பெண்கல்வி மூலம் தான் சமூக, குடும்ப அமைப்புகளில் சமத்துவத்திற்கான மாற்றங்களை உருவாக்க முடியும் எனும் உண்மை பெறப்படுகிறது.

பெண்கல்வி கற்பதனால் வாழ்வில் ஏற்படும் மேம்பாடுகளை இராஜம் கிருஷ்ணன் நாவல்கள் வழி ஆராய்ந்த நளினிதேவி கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

> “இன்றியமையாத கதை மாந்தர் பலர் பெண் கல்வியின் பயனாகத் தங்ககளை உணர்ந்து கொண்டு நற்சிந்தனை பெற்றவராய் அறிவடிப்படையில் செயல்படத்

தொடங்கினார். எந்தச் சூழலிலும் தன்மை இழந்து விடாத மன உறுதி பெற்றனர். குடும்ப அளவிலும், சமுதாய அளவிலும் இம்மாற்றத்தின் பயனை எதிரொலிக்கும் திறன் கொண்டவராய் விளங்கினர்''[2]

எனக் கல்வி கற்ற கதாமாந்தர்களை ஏற்றம் பெற்றவர்களாக நளினி தேவி மதிப்பிடுகிறார்.

இராஜம் கிருஷ்ணன் வெவ்வேறு புனைகதைகளில் பெண்களுக்குக் கீழ்க்காணும் கல்வியைப் பரிந்துரைக்கிறார்.

6.1.1. உயர்பதவிக்குரிய கல்வி

6.1.2 தொழிற்கல்வி

6.1.3 ஆளுமையை வளர்க்கும் கல்வி

6.1.4. பள்ளிக்கல்வி

ஆகிய கல்வி பற்றிய செய்திகளை இராஜம் கிருஷ்ணன் நாவல்களில் காணமுடிகிறது.

### 6.1.1. உயர்பதவிக்குரிய கல்வி

உயர் பதவியில் வருவதற்குரிய கல்வி கற்பதன் சிறப்பு இராஜம் கிருஷ்ணனால் உணர்த்தப்படுகிறது.

'மானுடத்தின் மகரந்தங்கள்' நாவலில் அஞ்சு ஐ.ஏ.எஸ் படித்து ஆந்திராவில் மாவட்ட ஆட்சியர் பதவியில் இருக்கிறாள். நாகு தன் மகள் பேபியிடம் அஞ்சுவை மாதிரியாகக் காட்டித் தற்காலத்தில் பெண் பிள்ளைகள் படித்து பெரிய பதவியில் வருவது சாதாரண நிகழ்வாகி விட்டது என்றும், படிப்புக்குத்தான் மதிப்பு என்றும் புரியவைக்கிறார்.[3]

மதுராம்பாளும் பேபியிடம் மேன்மையாகப் படித்து மாவட்ட ஆட்சியர், நீதிபதி, மருத்துவர் என உயர்வான பணிகளுக்கு வருவதே சிறந்தது என உணர்த்துகிறாள்.[4]

இக்கூற்றுகள் பெண்களை உயர்பதவிக்குரிய கல்வி கற்கத் தூண்டுவதாய் அமைகின்றன.

### 6.1.2. தொழிற்கல்வி:

ஏட்டுக்கல்வியை விட, தொழிற்கல்வி சிறப்பானது என்பதனால் ஆசிரியர் தொழிற்கல்வி பயிலுதலின் உயர்வைச் சுட்டுகிறார்.

அடித்தட்டிலிருக்கும் உழைக்கும் வர்க்கம், பற்றிய நாவலான 'சேற்றில் மனிதர்கள்' எனும் நாவலில் சம்முகத்தின் மகள் காந்தி அறிவாற்றலில் சிறந்து கல்வியின் உயரெல்லைகளைத் தொட்டுப் பார்க்க விழைகின்றாள். தொழிற்கல்வி பயின்று சமூக மாற்றத்தையும் உருவாக்கப் போகிறவளாக அவள் மதிக்கப்படுகிறாள்.

> "தாழ்த்தப்பட்ட குலம் என்பதை அவர் தலைமுறையில் எழுச்சியுள்ளதாக்க முனைந்தார்கள். இப்போது அவர் மகள் தொழிற்கல்வி பயிலப் போகிறாள். சேற்றில் உழன்று நாற்று நடும் பின்புலத்தில் இவள் ஒரு தாமரையாக மலரப்போகிறாள்"[5]

என ஒரு பெண் பயிலும் தொழிற்கல்வி, சமூக மறுமலர்ச்சிக்கு வித்திடுவதை நாவல் விளக்குகிறது.

### 6.1.3 ஆளுமையை வளர்க்கும் கல்வி:

தற்காலத்தில் பெண் கல்வி வழங்கப்பட்டாலும், அது பெண்ணின் ஆளுமையை வளர்க்க வழிகாட்டவில்லை என்று இராஜம்கிருஷ்ணன் கருதுகிறார்.

பெண்ணின் ஆளுமையை மலரச் செய்வதாகப் பெண் கல்வி அமைக்கப்பட வேண்டும் என்பதை நாவல் கோரி நிற்கிறது. கல்வித்திட்டங்கள் பெண்ணின் ஆளுமையை வளர்ப்பதற்கேற்ற வகையில் அமைக்கப்பட வேண்டும் என்று இப்பகுதி மறைமுகமாகக் கோருகிறது. குடும்பத்தாரின் ஆதரவோடு பெண் நன்கு கல்வி கற்றாலே அவளது ஆளுமை மேம்பட்டதாக மாறிவிடும் எனத் 'தோட்டக்காரி' நாவல் பேசுகிறது.

பெண் கல்வியை எதிர்க்கும் தந்தை, அண்ணன், கணவன் போன்ற ஆண்பாத்திரங்களையே பெரும்பாலும் காட்டும் இராஜம்கிருஷ்ணன் ‘தோட்டக்காரி’ நாவலில் மனைவியின் கல்விவளர்ச்சிக்குத் துணை நிற்கும் கணவனைக் காட்டுகிறார். பள்ளிப்படிப்புடன் நின்றிருந்த சரயுவுக்கு மேல் படிப்புப் படிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. சரயுக்குக் கணவன் கோபன் உற்சாக மூட்டியதால் அவள் முதுநிலைப்பட்டம் பயிலுகிறாள். இராஜம் கிருஷ்ணன் நாவல்களில் அமையப்பெற்ற முழுமையான பெண்ணியப் பாத்திரமான சரயுவின் வளர்ச்சியில் கணவன் பெரிதும் பங்கு கொள்வது பின்பற்றத்தகுந்த மாதிரியாகத் தோற்றமளிக்கிறது. மனைவியின் கல்வி வளர்ச்சிக்குக் கணவன் துணையாக இருந்தால், அவளால் ஆளுமை நிறைந்தவளாக வாழ்ந்து காட்ட முடியும் என்பதை நாவல் மெய்ப்பிக்கிறது.

### 6.1.4 பள்ளிக்கல்வி

கல்வி கற்ற பெண் கணவனால் மதிக்கப்படுவதையும், கல்வி கற்காத பெண் கணவனால் தாழ்வாக நடத்தப்படுவதையும் ‘மாறிமாறிப் பின்னும்’ நாவல் உணர்த்துகிறது. குறைந்த அளவு பெண்கள் பள்ளிக் கல்வியையாவது நிறைவு செய்ய வேண்டும் என்று நாவல் அறிவுரை கூறுகிறது. ரேவதி அவளது கணவனால் மதிக்கப்படாமைக்கான காரணமாகக் கல்வி பயிலாமை சுட்டப்படுகிறது. பெண்ணின் வாழ்க்கையைக் கணவன் காப்பாற்றுவதாக நம்பப்படுவது மாறவேண்டும் என்று நாவல் அறிவுறுத்துவதோடு, கல்வியே பெண்ணைக் காப்பாற்றும் என்றும் கூறுகின்றது.

> ‘‘நான் அப்ப எப்படியானும் படிச்சி ஒரு எஸ்.எஸ்.எல்.சி முடிச்சிருக்கணும் ஏதானும் வேலைக்குப் போய் என்னால் என்னைக் காப்பாற்றிக்க முடியும்னு ஆயிருக்கணும். கல்யாணம்னு என்னை இப்படி அடிமைச்சாசனம் பண்ணிக்கொடுக்க வேண்டாம். கல்யாணம் பண்ணிண்டாலும், அப்ப புருஷன் மதிப்பான்’’[6]

என்ற ரேவதியின் கருத்து, கல்வியால் பெண்ணுக்குக் கிடைக்கும் மரியாதை குறித்துப் பேசுகிறது.

### 6.2. பொருளாதாரச் சுதந்திரம்

உலக வாழ்வு பொருளை மையமாகக் கொண்டு இயங்குவது ஆகும். பொருளாதாரத்தை ஆண் தன் கைவசம் வைத்திருப்பதால் பெண் தனித்தியங்கும் ஆற்றலற்றவளாக மழுங்கடிக்கப்படுகிறாள். பெண்ணுக்குப் பொருளாதாரம் சென்று சேராதபடி அனைத்து வழிகளையும் ஆணாதிக்கம் அடைத்து வைத்துள்ளது. கல்வி கற்கத் தடைவிதித்தல், வேலைக்குச் செல்ல தடை விதித்தல், வேலைக்குச் சென்றாலும் அவளது சம்பளத்தைக் கையகப்படுத்துதல், வரதட்சணை வழியாகப் பெண் வீட்டுப் பொருளாதாரத்தைப் பெயர்த்துக்கொண்டு வருதல் எனப் பலவழிகளில் பெண்ணின் பொருளாதார ஊற்றுக்கண் அடைக்கப்பட்டுக் கிடக்கிறது. தனித்து வாழமுடியாத சூழ்நிலைக்கைதியாக குடும்பத்துக்குள் தன்னை அவள் தக்க வைத்துக் கொள்ள வேண்டியுள்ளது. பொருளாதாரச் சுதந்திரம் அவர்களுக்கு வழங்கப்பட்டால் தாழ்த்தப்பட்டுக் கிடக்கும் பெண்கள் எழுச்சியடைவார்கள் எனக் ‘கூட்டுக்குஞ்சுகள்’ நாவல் நுவலுகிறது.

> “பொருளாதார சுதந்திரம், அறிவுப் பூர்வமான மனவளர்ச்சி ஆகிய நிலைகளில் ஆணைக்காட்டிலும் தாழ்ந்தவள் என்றில்லாமலாகி விட்டால், திருமணபந்தங்களின் குறிக்கோள் சுயநலத்திலிருந்து மாறிப்போகும்.”[7]

இதில் இராஜம் கிருஷ்ணன் பெண்ணுக்குப் பொருளாதாரச் சுதந்திரம் தேவை என்பதை வலியுறுத்துகிறார். பெண்கள் பொருளாதாரச் சுதந்திரம் பெற கீழ்க்காணும் வழிமுறைகள் சொல்லப்படுகின்றன.

6.2.1. உழைத்தல்

6.2.2. தொழில் வாய்ப்பு உருவாக்கப்படுதல்

6.2.3. வேலைக்குச் செல்லுதல்

6.2.4. சுயதொழிலுக்கு வகை செய்தல்

6.2.5. விவசாயத்தைக் கையிலெடுத்தல்

ஆகிய வழிமுறைகள் பின்பற்றப்படுவதன் மூலம் பெண் பொருளாதாரத் தன்னிறைவு அடைய வாய்ப்புள்ளது.

### 6.2.1. உழைத்தல்

பெண்ணுக்கு ஆற்றலையும், மதிப்பையும் தருவதில் உழைப்பு முக்கியப் பங்காற்றுகின்றது. ‘ஓசைகள் அடங்கிய பிறகு’ நாவல் மீனா உழைப்பு மூலம் பெறும் பொருளாதார சுதந்திரத்தைச் சிறப்பித்துக்கூறுகிறாள்.

> “எனக்கு நினைவு தெரிஞ்ச நாளிலிருந்து என்னுடைய வாழ்க்கைக்கு நானே உழைக்கணும். நானே பொறுக்பேற்கணும்னு பழகியிருக்கிறேன். இதனால் உரிமையோடு சுதந்திரத்தை நான் அனுபவிச்சிருக்கிறேன். இந்த அடிப்படை சுதந்திரம் பறிபோகும் இல்லறம் எனக்கு ஒத்துக்கும்னு தோணல ஒரு பெண்ணுக்குப் பொருளாதாரச் சுதந்திரத்தைத் தர உழைப்பு அவசியம்”[8]

இதில் பெண்ணுக்கு இல்லறத்தைவிட பொருளாதார சுதந்திரம் முக்கியமானது என்று வலியுறுத்தப்படுகிறது. பொருளாதார மேம்பாட்டை உழைப்பின் வழி மட்டுமே பெறமுடியும் என்ற கருத்து இங்கு இயம்பப்படுகிறது.

### 6.2.2. தொழில் வாய்ப்பு உருவாக்கப்படுதல்:

பெண்களுக்குத் தொழில் வாய்ப்புகள் உருவாக்கப்படுதலின் இன்றியமையாமையை ‘அழுக்கு’ நாவல் எடுத்தோதுகிறது. தொழில் செய்யும் உரிமை கேட்டுப் போராடும் மலைவாழ் மக்கள் குறித்த செய்தியை இந்நாவல் தருகிறது.

> “பெண்கள் உரிமை கேட்கிறார்கள். அவர்களே தொழில் செய்ய முன்னுக்கு வந்து கேட்கையில் உரிமை மறுப்பது எப்படி? போனமாதம், அழகான மணிபுரா கிராமத்துக்குப் போயிருந்தேன். அனைவரும் மலை மக்கள். பெண்கள் தங்களுக்குத் தொழில் வாய்ப்பு வேண்டும் என்று மனுக்கொடுத்தார்கள்”[9]

என்ற அமைச்சரின் பேச்சு பெண்கள் கோரும் தொழில் உரிமை பற்றிப் பேசுகிறது. பெண்களுக்கேற்ற தொழில் வசதிகள் உருவாக்கப்பட்டால் பெண்ணினம் பொருளாதாரத் தன்னிறைவு பெறும் என்ற உண்மையை இப்பகுதி தாங்கி நிற்கிறது.

### 6.2.3. வேலைக்குச் செல்லுதல்

பொருளாதார உணர்வு, சமூக மரியாதை ஆகியவற்றுக்காகப் பெண்கள் வேலைக்குச்செல்வது அனைவராலும் அறியப்பட்டது ஆகும். பொருளாதாரத் தேவைகள் இல்லாவிடினும் பெண் கட்டாயமாக வேலைக்குச்செல்ல வேண்டும் என்ற கருத்தைச் ‘சுழலில் மிதக்கும் தீபங்கள்’ நாவல் அறிவிக்கிறது. வேலைக்குச் செல்வது பெண்ணின் உரிமை என இந்நாவல் வாதிடுகிறது.

அறிவுப்பூர்வமான மலர்ச்சியும், ஆளுமைத்திறனும் வேலைக்குச் செல்வதாலேயே பெண்ணிடம் தொடர்ந்து இருக்கும் என்ற கருத்தையும் அது விளம்புகிறது. சின்ன வட்டத்துக்குள் சிக்கி, செக்கு மாட்டைப்போன்ற குறுகிய வாழ்வு வாழாமல், பெண் தன் புழங்குவெளியை விரிவாக்கிக் கொள்ள வேண்டும் என நாவல் எதிர்பார்க்கிறது.[11]

‘விலங்குகள்’ நாவல் பெண்கள் வேலைக்குச் செல்வதற்குக் குடும்ப அமைப்பு தடைவிதிப்பதை எடுத்துக்காட்டும் அதே வேளையில் வேலைக்குச் செல்வது அவசியமானது என்ற படிப்பினையையும் தருகிறது.

“வேலைக்கு அனுப்பினால் என்ன குறைவு?
லட்சோபலட்சம் பெண்ணுங்க வேலைக்குப் போறாங்க”[10]

என நவீன வாழ்வில் பெண்கள் வேலைக்குச் செல்வதன் தவிர்க்க முடியாமையைச் சொல்கிறது.

### 6.2.4. சுயதொழிலுக்கு வகை செய்தல்

பொருளாதாரக் குறைவே வாழ்வில் பெரும் பிரச்சினைகளை உருவாக்கும் ஆணிவேராக அமைந்துள்ளது. சுயதொழில் மூலம் பொருளாதார வளர்ச்சியைப் பெண்ணுக்கு ஏற்படுத்தினால் மரியாதைக்குரிய வாழ்க்கை அமைந்து விடும். வரதட்சணைப் பிரச்சினையும் மாறிவிடும் என 'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவல் குறிப்பிடுகிறது.

> "பெண் பிள்ளைங்க ஜீவனம் செய்ய தொழில் வசதி முக்கியமாகச் செய்யணும். சிறு வியாபாரம், கூடை, பாய் பின்னுதல், தையல் மிசின் வச்சுத் தொழில் செய்தல், எல்லாவற்றுக்கும் வசதி பண்ணிக் குடுக்க விரிவாக திட்டம் வச்சிருக்கிறேன். பிறகு அவங்க உற்பத்தி பண்ணுறதை லாபத்துக்கு நாமே வாங்கி, விற்கிறதுக்கும் வெளிநாடுகளுக்கு அனுப்புறதுக்கும் வழி செய்யனும். பொண்ணுங்க கவுரமாய் பிழைக்க வழி வந்துட்டா, இந்த சீதனப் பிரச்சனை அடிபட்டுப் போயிடும்"[12]

எனப் பெண்ணுக்குத் தொழில் மூலம் பொருளாதார உயர்வை ஏற்படுத்திப் பிரச்சினைகளிலிருந்து வெளியேவரும் தீர்வை அந்நாவல் மொழிகின்றது.

### 6.2.5. விவசாயத்தைக் கையிலெடுத்தல்

பெண் தனக்கென பொருளாதார மேம்பாட்டை அடைய விவசாயத்தைக் கையிலெடுத்தல் எனும் தீர்வைக் 'கோடுகளும் கோலங்களும்' என்ற நாவல் பேசுகிறது. கல்வியின் பயனாய்க் கிடைக்கும் தொழில் வழியாகப் பெண்கள் பொருளாதார மேம்பாடு அடைவதைப் பற்றி நாவலாசிரியர் பல இடங்களில் பேசியிருந்தாலும், ஆற்றல் மிக்க விவசாயம் வழியாக அப்பொருளெல்லையை எட்டுதல் குறித்து இந்நாவலில் விளக்குகிறார். புதிய வகை வீரிய வித்துக்கள், பயிரிடும் முறைகள், நீர் நிர்வாகம், புதிய வகை ரசாயன உரங்கள்,

ஆக்கப்பூர்வமான திட்டங்கள், அறிவியல் வளர்ச்சி ஆகிய விவசாயத்திற்குச் சாதகமான அம்சங்கள் பெண்ணின் வாழ்வை வளப்படுத்துவதற்கு உதவ வேண்டும் என்பது நாவலின் எதிர்பார்ப்பாக உள்ளது. ஆனால் செய்யப்படும் விவசாயம் போதிய பொருளாதார மேம்பாட்டை உருவாக்கத்தவறியதால், அதற்கான வழிமுறைகளைப் பெண்கள் உருவாக்க முன்வரவேண்டும் என நாவல் பரிந்துரை செய்கிறது. படிக்காதவர்களுக்குரியதாக விவசாயம் கருதப்படுவதை இந்நாவல் மறுக்கிறது. படித்த பெண்கள் விவசாயத்துக்கு வரும்போதுதான் அறிவும் ஆற்றலும் இணைந்து மிகப்பெரிய விவசாயச் சாதனைகளை உருவாக்க முடியும் என இராஜம் கிருஷ்ணன் கருதுகிறார்.

> ‘‘இன்னக்கிப் புதுசா உங்கையில் நடவு செய்ய, கத்துக்க! உம்போல படிச்ச பொண்ணுகதா வரணும், சாந்தி பத்துப் படிச்சிருக்கா. அவ ஒண்டியாளா கொல்ல மேட்டுல பயிரு வைப்பேன்றா! படிச்சிப்புட்டா மண்ணு அந்நியமில்ல. வந்தாங்களே பெரிய மேடம் அவங்க பெரிய பெரிய படிப்புப் படிச்சவங்க, இதைச் சொல்லிக் கொடுத்தவங்க எல்லாரும் பெரிய படிப்புப் படிச்ச பொம்புளங்க. நாப்பது வருசமா ஆம்புளங்களுக்குப் புதுத்தொழில் நுணுக்கம் சொல்லிக் கொடுத்தோம். பொம்புளங்க கையில் பலமும் வரல, சக்தியும் வரல. இப்ப நேரடியா பொம்புளங்களுக்கே சொல்லித் தரோம்னு அரசே சொல்லி வந்திருக்கு’’[13]

எனக் கல்வியையும் விவசாயத்தையும் ஒன்றிணைக்கும் இராஜம் கிருஷ்ணன் அத்தகைய புதிய மாற்றத்தில் பெண்ணையும் பங்கேற்க வைக்கிறார். வழக்கமாக விவசாய அடிமட்ட வேலைகளில் மட்டுமே பயன்படுத்தப்படும் பெண்களைக் கோடுகளும் கோலங்களும் நாவல் விவசாய மேலாண்மைக்குரியவர்களாக மாற்றம் செய்து பார்க்கிறது. விவசாயத்தைப் பெண் கையிலெடுப்பதனைப் பொருளாதார மேம்பாட்டுக்கான தீர்வாக ஆசிரியர் முன்வைக்கிறார்.

## 6.3. தொழில் சார்ந்த விடுதலை

இராஜம் கிருஷ்ணன் கூலித்தொழில், தீப்பெட்டித் தொழில், உப்பளத்தொழில், அலுவலக வேலை, ஆசிரியர் பணி, விஞ்ஞானப்பணி போன்ற பல்வேறு பணிகள் மற்றும் தொழில்கள் பற்றிப் பேசுகிறார். பெண்கள் வேலை செய்யும் இடங்களில் பெரும்பாலும் இரண்டாம் நிலையினராகவே நடத்தப்படுவதை இராஜம் கிருஷ்ணன் கண்டிக்கிறார். வேலைக்களங்களில் பெண்கள் சார்ந்து பல்வேறு மாற்றங்கள் கொண்டுவரப்படவேண்டும் என்று கருதுகிறார். ஆண்களுக்கிணையான கூலி வழங்கப்படுதல், வேலை நேரம் முறைப்படுத்தப்படுதல், பாலியல் சுரண்டல் தவிர்க்கப்படுதல், கழிப்பறை வசதி அமைக்கப்படுதல், நிரந்தரச் சம்பளம் வழங்கப்படுதல், ஆண்களுக்கிணையாக நடத்தப்படுதல் போன்ற மாறுதல்கள் உருவாக்கப்படுவதன் தேவையைப் பல்வேறு நாவல்களில் எடுத்துக்காட்டுகிறார்.

பெண்கள் தங்கள் பிரச்சினைக்காக ஒன்றிணைந்து போராட வேண்டும் என்ற கருத்தைக் ‘கரிப்பு மணிகள்’ ராமசாமி வலியுறுத்துகிறான். உப்பளத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமகூலி கிடைப்பதற்குப் பெண்கள் போராடுவது தான் தீர்வு என அவன் பகர்கிறான்.

> “பாத்திக்காட்டில் ஆம்பிளயக் காட்டிலும் கால்தேய நீங்கள் பெட்டி சுமக்கிறிய. ஆன ஒங்களுக்கு ஆம்பள கூலி கிடையாது. நினைச்சிப்பாருங்க ஒங்களுக்கு எத்தனை கஷ்டமிருக்கு? நீங்கல்லாம் கூடிச் சங்கத்திலே ஒரு குரலா முடிவெடுத்து ஏன் எதிர்க்கக்கூடாது?[14]

எனச் சங்கத்தில் ஒன்றிணைந்து பெண்கள் அநீதிகளை எதிர்க்க முன்வர வேண்டும் என்ற கருத்து முன்வைக்கப்படுகிறது. வாரத்தில் ஒருநாள் சம்பளத்துடன் கூடிய விடுமுறை, வருடத்துக்கு ஒன்பது நாள் விடுமுறை, போனஸ், தொழில் பாதுகாப்பு உள்ளிட்ட அனைத்து நோக்கங்களையும் வென்றெடுக்கப் பெண்கள் அனைவரும் சங்கத்தில் இணைந்து போராட வேண்டும் என்ற கருத்தும் ராமசாமி பாத்திரத்தின் வழியாக உரைக்கப்படுகிறது.[15]

ராமசாமி பெண்களையும் போராட்டத்தில் ஒன்றிணைத்து பதிவுக்கூலி, ஓய்வு நாள் சம்பளம், மழைக்காலங்களில் மறுவேலை அல்லது அரைச்சம்பளம், முதுமைக்கால ஊதியம், மருத்துவ உதவி, சமவேலை, சமகூலி, பேறுகால உதவி, ஓய்வு, பிள்ளை காக்கும் பால்வாடிகள் அமைத்தல், உப்பளப் பாதிப்பினால் வரும் நோய்களுக்குத் தக்க மருத்துவப் பாதுகாப்பு ஆகிய கோரிக்கைகளையும் முன்வைத்து போராடுவதற்குரியப் பெண்களை ஒன்று திரட்டுகிறான்.[16]

வேலை நிறுத்தம் செய்வதற்குப் பெண்கள் முழு ஒத்துழைப்பு அளிக்கின்றனர். ஆண்களும், பெண்களும் இணைந்து கோரிக்கை முழக்கங்களை எழுப்புகின்றனர். தொழில் சார்ந்த விடுதலைக்கான போராட்டங்களை நடத்துதலின் அவசியத்தை நாவல் உணர்த்துகிறது.

### 6.4. குடும்ப அமைப்புக்குள் சீர்திருத்தம்

இராஜம் கிருஷ்ணன் குடும்ப அமைப்பை உடைத்து நொறுக்கும் நோக்கம் கொண்ட பெண்ணிய எழுத்தாளரல்ல. அவர் குடும்ப அமைப்புக்குள் சீர்திருத்தம் கோரும் எழுத்தாளராவார். ஆண் பற்றிய கருத்தியல்கள் மாற்றப்பட்டு ஆணின் அதிகாரப் பிடியினின்று பெண் விடுவிக்கப்படவேண்டும் என்று அவர் கருதுகிறார். ஆண் காலத்திற்கேற்ற முற்போக்குக் கோட்பாடுகளுக்கேற்ப தன்னை மாற்றிக்கொள்வதன் மூலம் குடும்ப அமைப்பு சமத்துவம் நிறைந்த நிறுவனமாக உருப்பெரும் என அவர் கருதுகிறார்.

குடும்ப அமைப்புக்குள் கீழ்க்காணும் சீர்திருத்தங்கள் உருவாவதை அவர் வரவேற்கிறார் அவை,

6.4.1. குடும்ப அமைப்பைப் புனரமைத்தல்

6.4.2. சமமான பணிப்பங்களிப்பு

6.4.3 இயைந்த வாழ்வு

6.4.4. முடிவெடுக்கும் உரிமை

6.4.5. புழங்குவெளி விரிவாக்கம்

என்பனவாகும்.

### 6.4.1. குடும்ப அமைப்பைப் புனரமைத்தல்

குடும்ப அமைப்பு நெடுங்காலம் உடைபடாமல் தொடர வேண்டுமானால் அவ்வமைப்பு காலத்துக்கேற்ப புனரமைக்கப்பட வேண்டியது அவசியமாகிறது. சிறைச்சாலையாகவும், பலிபீடமாகவும், கூண்டாகவும், கணவன் எனும் கடவுளை வழிபடும் கோயிலாகவும் கருதப்பட்டு வரும் குடும்பம் எனும் அமைப்பு விஞ்ஞான யுகத்திற்கேற்ப வார்த்தெடுக்கப்பட வேண்டிள்ளது.

'கூடுகள்' நாவலில் குடும்பம் என்பது கூடாகவும் கூண்டாகவும் காட்டப்படுகிறது. இந்நாவலின் தலைமைக் கதாமாந்தரான கனகாவைத் திருமணம் செய்து கொடுப்பது பற்றி அவளது அம்மா பேசும் போதெல்லாம் 'கட்டிக்கொடுத்தல்', 'ஒருத்தன் கையில் பிடித்துக்கொடுத்தல்' 'நெருப்பைக் கட்டிக் கொண்டிருத்தல்' போன்ற சொல்லாடல்களை உதிர்க்கிறாள். குடும்பம் பற்றிய பழைய தலைமுறையின் பார்வைகள் அடுத்த தலைமுறையில் மாறிவிடும் என்று கனகா கருதுகிறாள். குடும்பம் எனும் கூடு பற்றிய கருத்தாக்கங்கள் மாற்றுரு பெற்றுப் புனரமைப்பும், புத்துருவாக்கமும் நிகழும் என அவள் உரைக்கிறாள்.

> "அம்மா நீ உன்னைப்போலவே எல்லாருக்கும் ஒரு கூடு பண்ணி வைக்கணும்னு ஆசைப்படாதே. காலம் எப்படியெல்லாமோ மாறிக்கொண்டிருக்கு. உன்னைப்போல் நானே இருக்க முடியாது என்னைப்போல் வினு இருக்க மாட்டாள்"[17]

எனப் புதுத்தன்மை பெறவேண்டிய குடும்ப அமைப்புப் பற்றிப் பேசுகிறாள்.

### 6.4.2. சமமான பணிப்பங்களிப்பு

பெண் தன்னைத் தியாகி என்ற வடிவத்துக்குள் புதைத்துக்கொள்வது இராஜம் கிருஷ்ணனுக்கு உவப்புடையதாகத் தோன்றவில்லை. வீட்டுக்குள் அனைத்துப் பொறுப்புகளையும் பெண்ணே ஏற்கவேண்டும் என்ற சமூகத்தின் கருத்தை அப்படியே

ஏற்றுக்கொள்ளும் மனநிலையை அவர் எதிர்க்கிறார். சுமைகளை ஆணும் பகிர்ந்து கொள்வது என்பது இனிமையான வாழ்வுக்கான தீர்வாக அமையும் என்று அவர் கருதுகிறார். ஆனால் பெண்கள் ஆணின் வசதிக்காகத் தாமே சுமைகளைச் சுமக்கும் பொறுப்பை ஏற்கின்றனர். இந்நிலை அகல வேண்டும் என இராஜம் கிருஷ்ணன் எதிர்பார்க்கிறார்.

வீட்டு வேலைகளுக்கென்று பெண்ணைக்கட்டம் கட்டி ஒதுக்கும் ஆண்களின் நடுவே அவ்வேலைகளில் தன்னை மனைவிக்குச் சமமாக ஈடுபடுத்திக் கொள்ளும் விதிவிலக்கான கணவனைத் 'தோட்டக்காரி' நாவல் காட்டுகிறது. சரயுவின் கணவரான சடாகோபன் வீட்டு வேலைகளில் மனைவிக்குத் துணையாக இருக்கிறார். சமையல் செய்து மனைவிக்குக் கொடுக்கிறார். சமையலறையைச் சுத்தமாகத் துடைத்து வைக்கிறார். குவளைகளைக் கழுவுகிறார். வரவேற்பறையில் ஒட்டடை அடிக்கிறார். மேசை விரிப்பு விரிக்கிறார். சமையலறை என்பது ஆண் நடமாடக் கூடாத அறை என்னும் ஆணவ எண்ணம் அவருக்குள் இல்லை. சமூகம் பின்பற்றத்தகுந்த ஆண் பாத்திரமாகச் சடகோபன் காட்டப்படுகிறார்.[18]

பெண் என்பவள் சமைப்பதற்குரியவள், ஆண் என்பவன் உண்பதற்குரியவன். பெண் என்பவள் ஆணின் துணிகளைத் துவைக்கக் கடமைப்பட்டவள். ஆண் அழகாக ஆடை அணிந்து செல்பவன் என்பன போன்ற அதிகாரச் சிந்தனைகள் அகற்றப்படுவதற்கான புதிய அறங்களையும், காட்சிப் படுத்தல்களையும் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் தருகின்றன. 'மானுடத்தின் மகரந்தங்கள்' நாவலின் கதைத் தலைவியான மதுராம்பாள் தேவதாசி வகுப்பைச் சார்ந்தவளாக இருந்த பின்னும் அவளது மூப்பத்தைந்தாம் வயதில் சாமிநாதன் என்ற ஆசிரியர் திருமணம் செய்து கொள்கிறார். அவர் மதுராம்பாள் கருவுறும் வேளையில் உறுதுணையாக

இருக்கிறார். ஊரார் இதனை இழிவாகப் பேசுவதைப்பற்றி அவர் பொருட்படுத்துவதில்லை என நாவல் கூறுகின்றது.[19]

மதுராம்பாளின் கணவனை எல்லா ஆண்களும் பின்பற்றினாலே பெண்களின் சிக்கல்கள் தீர்ந்துவிடுவதற்கான வாய்ப்புள்ளது.

'கோபுர பொம்மைகள்' நாவலில் இலட்சியக் குடும்பம் பற்றிப் பேசப்படுகிறது. பெண் வேலைசெய்பவளாகவும் ஆண் மன்னனாகவும் வீட்டுக்குள் வாழ்வது இதில் நிராகரிக்கப்படுகிறது, அடுப்பைக் கவனித்தல், காலுறை துவைத்தல், வியாபாரம் கவனித்தல், இஸ்திரி போடுதல், வீடு கூட்டுதல், குழந்தையின் உள்ளாடை மாற்றுதல் என அனைத்திலும் கணவன் மனைவி இருவருக்குமான சமபங்களிப்பை இது கோருகிறது. சம்பாதிப்பது என்பது இருவரது கடமையாக அறிவுறுத்தப்படுகிறது. பெண்ணுக்கு மட்டுமே பொறுப்புகள் என்று சுமத்தப்பட்ட திருமண அமைப்பைக் 'கோபுர பொம்மைகள்' நாவல் புத்தாக்கம் செய்கிறது.

குடும்ப உறவில்

"நான் மகாராஜான்னு சொல்றவனுக்கு இடமே கிடையாது"[20]

என்ற பாத்திரத்தின் அழுத்தமான கூற்று ஆண்களின் மனநிலையை மாற்றியமைத்தலுக்கான அறைகூவலாக விளங்குகிறது.

கணவனுக்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்வதைப்போல, கணவர்களும் மனைவிக்கு உதவிகள் செய்ய வேண்டும் என்று 'பெண்குரல்' நாவல் அறிவுரை பகர்கிறது.

"சமயம் நேரும்போது கணவனும் அதேபோல்
மனைவிக்குப் பணிகள் செய்யவேண்டும்"[21]

என்பன நாவலின் நேரடி வரிகள் ஆகும். சமமான பணிபங்களிப்பு சுகமான வாழ்வை உருவாக்கும் என்ற படிப்பின்மையை மேற்காட்டிய புனைகதைச் செய்திகள் தருகின்றன.

### 6.4.3. இயைந்த வாழ்வு

குடும்ப அமைப்பும், சமுதாய அமைப்பும் உடைந்து சிதறுவது இராஜம் கிருஷ்ணனுக்கு உடன்பாடான விஷயமல்ல. பெண் சுதந்திரத்தை நாடும் அவரது நூற்களில் கட்டுப்பாடு என்பது கட்டுக்கோப்புக்கான வழிமுறையாகவே சொல்லப்படுகிறது. தேவைற்ற கட்டுப்பாடுகளால் குடும்ப அமைப்பு கரடுமுரடாகி விடுவதைப் பல நாவல்கள் சொல்லும் அதே வேளையில், வரன்முறை தாண்டிய சுதந்திரத்தால் அவ்வமைப்பு தாறுமாறாகி விடக்கூடாது என்பதிலும் கவனங்கொள்ளுகின்றன. 'இணைந்து செல்லுதல்' என்பது குடும்ப அமைப்பைப் பாதுகாத்தலுக்கான தீர்வாகச் சொல்லப்படுகிறது. குடும்ப உறுப்பினர் ஒருவரின் இணைந்து செல்லும் பண்பால் குடும்ப அமைப்பின் சிறப்பைக் காப்பாற்ற முடியாது. ஆணும் பெண்ணும் இயைந்து செல்வதால் மட்டுமே அதனைச் சாத்தியமாக்க முடியும் என இராஜம் கிருஷ்ணன் கருதுகிறார்

> "பலகாரணங்களுக்காக வாழ்வெனும் நீண்ட பாதையிலே ஆணும், பெண்ணும் இயைந்து செல்லவேண்டியது அவசியமாக இருக்கிறது. ஒழுங்கான சமுதாய அமைப்புக்காக ஒத்து அமைந்து மகிழ்வு கூட்டும் குடும்பக் கட்டுக்கோப்புக்காக சில கட்டுப்பாடுகள் தேவையாக இருக்கின்றன"[22]

என ஆணும் பெண்ணும் இயைந்து வாழ அறிவுறுத்தப்படுகின்றனர்.

### 6.4.4. முடிவெடுக்கும் உரிமை

பெண்களைப் பொறுத்தமட்டில் அவரவர் வாழ்க்கைப்பற்றி முடிவெடுக்கும் சுதந்திரம் இருப்பதாகக் 'கூட்டுக்குஞ்சுகள்' நாவலில் வரும் விஜி குறிப்பிடுகிறாள். விஜி தனது முடிவுகளை எடுக்கும் உரிமையை ஒருபோதும் கணவரிடமோ, அவளது வீட்டாரிடமோ விட்டதில்லை. தன் முடிவைத் தானே எடுக்கும் உரிமையை யாருக்காகவும் விட்டுக்கொடுத்ததில்லை. குடும்ப அமைப்புக்குள்

இருந்தபோதும், அதனை விட்டு வெளியேறும் போதும் அவள் துணிச்சல் மிக்க முடிவுகளை எடுப்பவளாக இருக்கிறாள்.

> ‘‘இந்தக் காலத்துல அவங்களுக்கு அவங்க வாழ்க்கையைப் பத்தி முடிவெடுக்க தைரியமும் சுதந்திரமும் இருக்கு’’[23]

என்று விஜி குறிப்பிடுகிறாள். பெண்கள் முடிவெடுக்கும் உரிமையைத் தக்கவைத்துக் கொள்வதன் மூலமும், மீட்டெடுப்பதன் மூலமும் ஆண்களின் நசுக்குதல்களிலிருந்து தப்பித்துச் செல்ல முடியும் என்ற தீர்வை இதனின்று பெறமுடிகிறது.

### 6.4.5 புழங்குவெளி விரிவாக்கம்:

பெண்ணின் பெரும்பான்மைப் பொழுதுகள் சமையலறையிலும், படுக்கையறையிலும் தொலைந்துபோவதை ‘விலங்குகள்’ நாவல் எதிர்க்கிறது. சமையலறை, படுக்கையறை எனச் சுருக்கப்படும் புழங்குவெளியை உடைத்துப் பெண்கள் வெளியே வரவேண்டும் என நாவல் எதிர்பார்க்கிறது.

> ‘‘மனைவி குற்றேவலும் அடுக்களைப் பணியும் செய்து ஓய்ந்த பின் இரவில் உடற்பசியைத் தீர்க்கும் கருவியாக மதிக்கப் பெறுவதை உடைக்க வேண்டும்’’[24]

என்கிறார். இதில் பெண்ணை வீட்டுக்குள் முடக்குகின்ற பழமைவாதத்தின் சுவர்கள் உடைக்கப்பட வேண்டியதன் தீவிரத்தை உணர்த்துகின்றார்.

பெண்கள் முன்னேற வீட்டுக்கு வெளியிலும் பெண்களின் புழங்குபரப்பு விரிவிவடைய வேண்டுமென ‘பெண்குரல்’ நாவல் கூறுகின்றது. ‘‘இப்படி நாமே நம் அறிவையும் ஆற்றலையும் பயந்து பயந்து குறுக்கிக் கொண்டால் எப்படியடி பெண்கள் முன்னேற முடியும்? நாலு பேருடன் மனம் விட்டுப்பழகி, நாலு புது புது விஷயங்களை அறிந்துகொள்வதில் என்ன தவறு இருக்கிறது?’’[25]

என்பதில் கணவன், வீடு, குழந்தைகள் என்ற எல்லைகளைத் தாண்டி பரந்த தளத்தில் இணைந்தியங்க பெண்கள் தம்மைத் தயார் படுத்திக்கொள்ள நாவல் அழைப்பு விடுகிறது.

### 6.5 சமூக விடுதலை

இராஜம் கிருஷ்ணன் சமூகப் பார்வை கொண்ட படைப்புகளை மட்டுமே படைத்துள்ளார். பெண் விடுதலை என்பது அவரது இலக்காகத் தென்பட்டாலும் சமூக விடுதலை பற்றிய அவரது பார்வை கவனத்தில் கொள்ள வேண்டியதாக உள்ளது. பெண்களின் ஒன்றிணைவு குறித்துப்பேசும் போதுகூட சாதி, மதம், இனம், நில எல்லை கடந்த ஒருமைப்பாட்டையே அவர் முன்னிறுத்துகிறார். வரதட்சணை, கைம்பெண் துயர் போன்ற சமூகச் சிக்கல்களுக்கான தீர்வுகளையும் அவர் பல வடிவங்களில் பேசியுள்ளார். ஆண் பெண் சமத்துவம் என்பது அவரது புதிய சமுதாயக் கனவாகத் தோற்றமளிக்கிறது. சமூகச் சிக்கல்களுக்கு முன் வைக்கப்படும் தீர்வுகளானவன:

6.5.1. சாதி வேறுபாடின்மை

6.5.2. மத ஒருமைப்பாடு

6.5.3. சம உரிமை

6.5.4. வரதட்சணை ஒழிப்பு

6.5.5. கைம்பெண் துயர் துடைப்பு

ஆகியவையாகும்.

#### 6.5.1. சாதி வேறுபாடின்மை

ஆண்களுக்குள் அழுந்தப் பதிந்துபோன சாதி உணர்வு பெண்களுக்குள்ளும் மெல்லியதாய் ஊடுருவிக் கிடப்பது பெண்களின் ஒருமைப்பாட்டுக்கும் வளர்ச்சிக்கும் தடையாக இருப்பதைக் ‘கோடுகளும் கோலங்களும்’ நாவல் உணர்த்துகிறது. வேணி எனும் கதாப்பாத்திரம் ஆவனியாபுரம் காலனியிலிருந்து வந்து செவந்திக்கு விவசாயத்தில் உறுதுணையாக இருக்கும் சாந்தியை வேறுபாட்டுணர்வுடன் பார்க்கிறது. தாழ்த்தப்பட்ட அப்பெண்ணின் நடை,

உடை, பேச்சு ஆகியவற்றை எள்ளி நகையாடுகிறது. ஆனால் நாவலின் இலட்சியத் தலைமைப் பாத்திரமான செவந்தி சாதியவேறுபாடுகளைக் கடந்த உயர்பண்பு நலன்களுடன் படைக்கப்பட்டுள்ளாள். வேணியுடனான உரையாடலில் செவந்தி சாதியத்தைக் கடந்த மனுஷி என்ற பார்வையைப் பெண்களின் ஒன்றிணைப்பு மற்றும் வளர்ச்சிக்கான தீர்வாக மொழிகிறாள்.

> ‘‘அவர்களும் நம்மப்போல மனுசங்க இனிமே யார்னாலும் இப்படிப் பேசுனா, எனக்குக்கெட்ட கோபம் வரும்’’[26]

என்றும்,

> ‘‘இந்தச் சேத்தில் நின்னு பச்சையத்தொடுற நாமெல்லாந்தா ஒரேசாதி ஒசந்த சாதி’’[27]

என்று கூறும் செவந்தியின் குரல் பெண்களின் ஒன்றிணைப்புக்கான தீர்வை மொழிகிறது.

எல்லா சாதிகளிலும் ஒழுக்கம் தவறிய ஆண்கள் இருப்பதைச் ‘சேற்றில் மனிதர்கள்’ நாவல் பல இடங்களில் கோடிட்டுக் காட்டுகிறது. பெண் எல்லா சாதிகளுக்குள்ளும் ஒடுக்கப்படுகிறவளாகவே இருக்கிறாள். அவளது சீரழிவு அனைத்துச் சாதிகளுக்குள்ளும் ஆண்களால் நிகழ்த்தப்பட்டு வருகிறது. பெண்கள் தங்களுக்குள் சாதி வேறுபாடு காட்டி வாழவேண்டியதில்லை. ஏனெனில் பெண்கள் தொடர்பாக ஆண்கள் அனைத்துப் பிரிவுகளிலும் பொதுமைப் பண்புள்ளவர்களாக இருக்கின்றனர். என்பதனைச் ‘சேற்றில் மனிதர்கள்’ நாவல் இயம்புகிறது.

> ‘‘பொம்புளயாப் பெறந்துட்டு சாதி என்ன சாதி அல்லாச் சாதிலியும் பொம்புள சீரழியற சாதிதே. கட்ன பொண்டாட்டிய கண்ணும் கண்ணீருமா அடிச்சிட்டு வண்டி கட்டிட்டுப் போயி ஊருமேயுற ஆம்புள இருக்கிறப்ப பொம்புளக்கி என்ன காவந்து இருக்கு?’’[28]

ஆணின் ஒழுக்கமின்மையின் சாதி தாண்டிய பொதுமையை இது பேசுகிறது. உலகம் முழுக்கப் பெண்கள் ஒரே சாதியைச் சார்ந்தவர்கள் என்ற உண்மையை இது புலப்படுத்துகிறது.

### 6.5.2. மத ஒருமைப்பாடு

பெண்கள் 'பெண்' எனும் ஒற்றை அடையாளத்துடன் ஒன்றுபடும் போது பேரெழுச்சியை உருவாக்கமுடியும் எனக் 'கோடுகளும் கோலங்களும்' நாவலின் தலைவி பேசுகிறாள். சாதி, கட்சி, மொழி, இனம், நிறம், மதம் போன்ற குறுஅடையாள வட்டங்களுக்குள் தம்மைச் சிறைப்படுத்திக் கொள்வது பெண்களின் எழுச்சிக்குத் தடையாகி விடுகிறது என்ற விரிந்த பொருளை வாசக புரிந்துகொள்ளலுக்காக நாவல் விட்டு வைக்கிறது. சாதி, மத வேறுபாடுகளைக் களைதலை மட்டும் மாதிரிக்காய்ச் சுட்டுகிறது.

> "யாரு இந்து, யாரு கிறிஸ்தியன், யாரு அல்லான்று தெரியாது. எங்களுக்குச் சொல்லிக் குடுத்த மேடம் என்ன சாதின்னு தெரியாது. எல்லாரும் பொம்புளங்க. எல்லாரும் நோவும் நொம்பலமும் மாசந்தோறும் அனுபவிக்கிறவுங்க"[29]

என்று பெண் எனும் அடையாளம் தவிர்த்த பிற அடையாளங்கள் பெண் குலத்துக்குத் தேவையில்லை என்பதை அந்நாவல் உணர்த்துகிறது.

### 6.5.3. சம உரிமை

பெண் விடுதலை பற்றிப் போலியான எண்ணங்கள் இன்றைய சமுதாயத்தில் நிலவுகின்றன. நாகரிக உடையணிவதும், உடலை அழகுபடுத்துவதும் பெண் விடுதலையின் முக்கியக்கூறுகள் எனத் தவறாகக் கருதும் போக்கு உள்ளது. மக்கள் மனதில் படிந்த தவறான பெண் விடுதலை பற்றிய சிந்தனைகளை இராஜம் கிருஷ்ணனின் எழுத்து அப்புறப்படுத்தப்படுகிறது. ஆணைப்போல புகை பிடிப்பதாலோ, மது அருந்துவதாலோ பெண்ணுரிமையை மீட்டுக் கொணர முடியாது. ஆணின் பின்புலமும், துணையுமில்லாமல் தனித்த அடையாளத்துடன்

பெண் சாதித்துக் காட்டுவதே சமஉரிமை என்று ‘கோபுரபொம்மைகள்’ நாவல் குறிப்பிடுகிறது.

> “இந்தச் சின்னப் பொண்ணுங்கல்லாம் இன்னிக்கு, மாசத்துக் ஐம்பதும் நூறும் குடுத்து, புருவம் வளைச்சிக்கிறதும், முகத்தை வெளுப்பாக்கிக் கொள்வதும், முடியை அலங்கோலமாக்கிக் கொள்வதும் தான் சம உரிமைன்னு போயிட்டிருக்குதுங்க. இன்னிக்கு உங்க வாயிலிருந்து வந்திச்சே, அதுதான் சம உரிமை”[30]

எனப் போலி சமஉரிமைச் சிந்தனைகளை நாவல் விமர்சிக்கிறது.

### 6.5.4 வரதட்சணை ஒழிப்பு

கிராமங்களில் இன்னமும் அரசியலமைப்புச் சட்டத்துக்குட்படாத ஊர்ப்பஞ்சாயத்துக்கள் உள்ளன. அக்கிராமங்களில் நாட்டாமையோ, ஊர்த்தலைவரோ சொல்லும் தீர்ப்பு அப்படியே ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. இப்படிப்பட்ட ஊருக்கு நீதி வழங்கும் அமைப்புகள் வரதட்சணை போன்ற சமூகத் தீமைகளுக்கெதிராகத் தீர்ப்பு வழங்க வேண்டும் என ‘மண்ணகத்துப் பூந்துளிகள்’ நாவலில் வரும் அழகாயி குறிப்பிடுகிறாள்.

> “ஆமா, இருந்து என்ன செஞ்சிட்டீங்க? அவுங்கவுங்க சொத்து சேத்துக்கிட்டு “போடிசா” நடக்கிறாங்க. சொந்த அயித்த மவனக்கட்ட அம்பது பவுன் கேட்கிறா. அம்பதாயிரம்னு கன்டிசன் வக்கிறா. என்ன நாயம் பண்ணீங்க”[31]

இதில் கிராம ஊர் அவைகளில் வரதட்சணைக்கெதிராகத் தீர்ப்புகளும், நீதிகளும் மலரவேண்டும் என்று அழகாயியின் குரல் ஒலிக்கிறது.

### 6.5.5 கைம்பெண் துயர் துடைப்பு

பெண் நெற்றியில் வைத்துக் கொள்ளும் பொட்டு சிறுவயதிலிருந்தே செய்யப்படும் அழகாகும். அதற்கான உரிமைகூட கணவன் இறந்ததும் மறுக்கப்படுகிறது. குற்றவாளிகள் தண்டிக்கப்படுவதில் தவறில்லை எனவும், எந்தக் குற்றத்தோடும் தொடர்பற்ற பெண் தண்டிக்கப்படுவது தவறு எனவும் நாவல் உணர்த்துகிறது. நோய், விபத்து, மரணம், காலம் இவையெல்லாம் பெண்ணின் கட்டுப்பாட்டில் இல்லாதபோது கணவரின் மரணமானது, பெண்ணின் தோற்றத்தைச் சிதைப்பதிலிருக்கும் நியாயமின்மையை நாவல் அழுத்தமாகப் பேசுகிறது. கைம்பெண்ணுக்கெதிரான அநீதிகளுக்குக் காரணமான சாதி சமூகக்கட்டுப்பாடுகளை அழிப்பதற்கான உந்துதலை இந்நாவல் வழங்குகிறது.

> “சுந்தரிக்குப் புருசன் செத்த போது அவளுக்கு வளையலடுக்கிப் பூவைத்துச் சிங்காரித்து, இலை போட்டுப் பரிமாறி, எரிய எரிய எல்லாவற்றையும் உடைத்துப் பொட்டழித்துக் குலைத்து அவமானம் செய்தார்கள். இதெல்லாம் சாதி சமூகக் கட்டுப்பாடுகள். இதை இந்த அநியாயக்கார ஆண்களும் அவர்களுக்குத் துணைநிற்கும் பெண்களும் இன்றும் நாளையும் அமுல்படுத்துவார்கள். இந்த கோடுகள், வரமுறைகளை யார் எப்படி அழிக்கப்போகிறார்கள்.”[32]

என உடைத்தல், பொட்டழித்து அவமானப்படுத்தல் ஆகிய தவறுகளைச் செய்யும் ஆணாதிக்க அநீதிகள் சுட்டப்படுகின்றன. மரபின் தேவையற்ற கோடுகளை அழிப்பதற்கான உத்திகளை வகுக்க நாவல் அனைவருக்கும் அழைப்பு விடுக்கிறது. யார்? எப்படி? என்னும் வினாக்களுக்கு விடைகானும் பொழுது கைம்பெண் துயருக்கான தீர்வுகள் மலரும் என்பதை உய்த்துணர முடிகிறது.

### 6.6 பண்பியல் மாறுதல்கள்

சமூகத்தை மாற்ற விரும்பும் பெண்கள் முதலில் தங்களை மாற்றிக்கொள்ள அறிவுறுத்தப்படுகின்றனர். விதியின் மீது பழிபோட்டு அநீதிகளுக்கு எதிர்வினை காட்டாமல் வாழும் பொறுமைக்குணமே

அத்தீமைகள் தொடர்வதற்கான காரணமாக அமைந்துவிடுகிறது. விரக்தி அடைவதும், அழுது புலம்புவதும் பிரச்சினைகளுக்கான தீர்வாக அமைய முடியாது. ஆண்கள் கற்பித்த பண்பு நலன்களிலிருந்து விடுபட்டு நீதியை நிலைநாட்டுவதற்கான பண்பியல் மாற்றங்களைப் பெண்கள் பெற்றுக்கொள்வதொன்றே பெண்களினருகில் தீர்வைக் கொண்டு வந்து நிறுத்தும் ஆற்றல் பெற்றது. இராஜம்கிருஷ்ணனின் புனைகதைகள் அறிவுறுத்தும் பண்பியல் மாற்றங்களாவன:

6.6.1. அகமாற்றத்தை உருவாக்குதல்
6.6.2. திரைப்பட மோகத்திலிருந்து விடுபடுதல்
6.6.3. நல்ல வழிகாட்டிகளைப் பின்பற்றுதல்
6.6.4 பழங்குடிச் சமூகத்தின் நற்பண்புகளைப் பின்பற்றுதல்
6.6.5. அழுவதை நிறுத்துதல்
6.6.6. தாழ்வு மனப்பான்மையை அகற்றுதல்
6.6.7. தலைமைத் தன்மையை வளர்த்தல்
6.6.8. துணிச்சல் பெறுதல்
6.6.9. அநியாயத்துக்கு அடிபணியாமை
6.6.10. சார்புத்தன்மையைத் தூக்கி எறிதல்
6.6.11. தனித்து சாதித்தல்

என்பனவாகும்.

### 6.6.1. அகமாற்றத்தை உருவாக்குதல்

விடுதலைக்குப்பின் இந்தியப் பெண் சமூகம் கல்வியின் மூலம் விழிப்புணர்வு பெற்றிருப்பது உண்மைதானெனினும், பெண்ணின் ஆர்வங்கள் புற மாற்றங்கள் தொடர்புடையதாக இருப்பதாகவும், அக மாற்றங்களை நோக்கி அவர்கள் முன்னேறிச் செல்ல வேண்டுமென்றும் இராஜம் கிருஷ்ணன் அறிவுரை கூறுகின்றார். பகட்டும், படாடோபமும், சுயநல ஆசை வெறிகளும் புதுமைப் பெண்ணின் பிம்பங்களாக இருக்கக்கூடாது என்றும் அவர் அழுத்தமாகப் பேசுகிறார். கல்வி, அறிவு மலர்ச்சி, நாட்டுப்பற்று, தியாகம், சமுதாயத்தைத் தாங்கும்

பொறுப்பாற்றல் ஆகிய நற்பண்புகளால் பெண்ணில் அகம் சார்ந்த மாற்றங்கள் நிகழவேண்டும் என்றும் அவர் கோருகிறார்.

> ''கல்வி மறுமலர்ச்சியின்றி மூடக்கொள்கைகளிலும் அறியாமையிலும் அழுந்திக்கிடந்த இந்திய பெண்குலம், புது விழிப்பெய்தியிருப்பதாகச் சொல்கிறார்களே அது உண்மைதானா? புதுமைப் பெண்ணின் பிம்பம், பட்டும், படாடோபமும் சுயநல ஆசை வெறிகளுமாக அலைப்புண்டு குலைந்து கொண்டிருப்பதுதானா? இவளிடம் கல்வி, அறிவு மலர்ச்சி, நாட்டுப்பற்று, தியாகப்பண்பு, சமுதாயத்தைத் தாங்கும் பொறுப்பாற்றல் இவை மலரக்காண்கிறோமா?''[33]

என்னும் வினாக்களில் அகமாற்றம் தேவை என்ற கருத்துப் பேசப்படுகிறது.

### 6.6.2. திரைப்பட மோகத்திலிருந்து விடுபடுதல்

பெண்கள் வாழ்வை வீணடிக்கும் காரணிகளில் ஒன்றாகத் திரைப்பட மோகம் அமைந்துள்ளது திரைப்படத்தை உண்மையென நம்பும் பாமரப்பெண்கள் வாழ்க்கையைத் திரைப்படங்கள் பெரிதும் பாதிக்கின்றன. ஜெயகாந்தன் 'சினிமாவுக்குப் போன சித்தாளு' நாவலில் திரைப்பட மோகத்தின் தீய விளைவுகளை விளக்கியுள்ளார். இராஜம் கிருஷ்ணனும் பெரும்பான்மையான நாவல்களில் திரைப்படங்களால் வீழ்த்தப்படும் பெண் சமூகம் பற்றிய சித்திரிப்புகளை வழங்கியுள்ளார்.

'ஓசைகள் அடங்கிய பிறகு' நாவல் பெண்கள் திரைப்பட மோகத்தினின்று விடும்படி அறிவுறுத்துகிறது. பெண்களை ஆபாசமாகச் சித்திரிக்கும் திரைப்படங்களுக்குப் பெண்களே அடிமையாகி விடுவதை நாவல் உணர்த்துகிறது.

> ''எப்பப்பாரு சினிமா, சினிமா தண்ணி குடிக்கிற லோட்டாவைக் கூட அடகுக் கடையில் வச்சிட்டு எவளோ அவுத்துப் போட்டுட்டு ஆடுறதைப் பார்க்கப் போவாளுவ, போடி அப்பாலே''[34]

எனக் கிராமத்து ஆயா பெண்களுக்கு விழிப்புணர்வு ஊட்டுகிறார். திரைப்பட மோகத்திலிருந்து பெண்கள் விடுபடுதலை மறைமுகமாக விடுதலையின் தீர்வாக நாவல் முன்வைக்கிறது.

### 6.6.3. நல்ல வழிகாட்டிகளைப் பின்பற்றுதல்

பெண்கள் தாம் யாரைப் பின்பற்ற வேண்டும் என்ற அறிவைப் பெற்றிருக்க வேண்டும். இளைஞிகள் வழிகாட்டிகளாக நடிகைகளைக் கொள்ளுவதால் எத்தகைய சமூக வளர்ச்சியையும் உருவாக்க முடியாது. முத்துலெட்சுமி அம்மையாரைப் போன்ற உயர்ந்த ஆளுமைகளை முன்மாதிரிகளாகக் கொள்ள வேண்டும் என்று 'மானுடத்தின் மகரந்தங்கள்' நாவல் அறிவுரை பகர்கின்றது.

> ''உனக்கு ஆதரிசமா எத்தனையோ உசந்த பெண்களைப் பார்த்துக்கணும். முத்துலெட்சுமி அம்மான்னு இருந்தாங்க. பெண்கள் டாக்டராகிறதுங்கறத நினைச்சுப் பார்க்க முடியாத காலத்துல டாக்டருக்குப் படிச்சாங்க அவங்கல்லாம் தடைகளை மீறி, பெண்களெல்லாம் இழிவு நீங்கணும்னு படாதபாடும் பட்டாங்க, சட்ட சபையில் முதல்லபோய், பெண்களை இழிவுபடுத்தும் தேவதாசி முறை ஒழியணும்னு தீர்மானம் கொண்டு வந்தாங்க''[35]

என்ற கூற்று சமூக மலர்ச்சியாளர்களைப் பின்பற்றும் போது சமூகத்தில் மறுமலர்ச்சியை உருவாக்க முடியும் என்ற நம்பிக்கையைஊட்டுகிறது.

### 6.6.4. பழங்குடிச் சமூகத்தின் நற்பண்புகளைப் பின்பற்றுதல்

பழங்குடிச் சமூகம் என்றதுமே நாகரிகமின்மை, கல்வியறிவின்மை ஆகிய படிமங்களே கண்முன் தோன்றுகின்றன. ஆனால் படித்த மனிதர்கள் அப்பழங்குடிச் சமூகத்திடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய நற்பண்புகளை இராஜம் கிருஷ்ணன் எடுத்துக்காட்டுகிறார்.

> “ஆணும் பெண்ணும் சமமாக இருக்கிறார்கள். சீதனம், வரதட்சணை எதுவும் இல்லை. பெண் சிசுக்கொலை அது இது என்ற அநீதி ஒழுக்கக் குறைவுக்கும் இடமில்லை. இதெல்லாம் நம் படிப்பும் நுகர்பொருள் நாகரிகங்களும் வரும்போது கூட வருமே”[46]

இதில் கல்வியறிவற்ற சமூகம் கல்வியறிவுமிக்க சமூகத்துக்கு நற்பண்புகளால் வழிகாட்டுவது உணர்த்தப்படுகிறது. கல்வியறிவற்ற மக்கட் தொகுதியிலேயே ஆண் பெண் சமத்துவம் இருக்கும் நிலையில், படித்த சமூகத்தில் முழுமையான சமத்துவம் இருக்க வேண்டும் என்பது உணர்த்தப்படும் செய்தியாகும்.

### 6.6.5. அழுவதை நிறுத்துதல்

ஆண்களால் அநீதி இழைக்கப்படும் போது பெண்கள் எதிர்த்துப் போராடுவதற்குப் பதிலாக அழுகையைத் தேர்வு செய்கிறார்கள். அழுவதால் ஆணின் இரக்கத்தையோ, சமூக நீதியையோ பெற்றுவிட முடியாது. இராஜம் கிருஷ்ணனின் எல்லாப் பெண் பாத்திரங்களுமே அழுவதை வாடிக்கையாகக் கொண்டுள்ளனர். இதனை இராஜம் கிருஷ்ணனின் நாவல்களின் மிகப்பெரும் பலவீனமாகக் கருதமுடிகிறது. விதிவிலக்காக ‘சேற்றில் மனிதர்கள்’ நாவலில் வரும் ஐயர் கதாப்பாத்திரம் அழுவதால் தீர்வுகளை உருவாக்க முடியாது என்பதைப் பேசுகிறது.

“உன்னைப்போல இருக்கிற பொண்ணுக இனிமே அழக்கூடாது வேண்டியது அழுதுட்டீங்க”[37]

என்று அறிவுறுத்தும் அதே வேளையில், அழுவதற்குப் பதிலாகப் போராடுவதைத் தீர்வாக்குகிறது.

### 6.6.6. தாழ்வு மனப்பான்மையை அகற்றுதல்

பெண்களின் வளர்ச்சிக்குக் குடும்பமும், சமூகமும் மட்டுமே தடையென்றுரைத்துப் பழியை முழுவதும் பிறரது தோளில் சுமத்தி விடமுடியாது. பெண்ணின் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் மனப்பான்மைகளையும் பண்பு நலன்களையும் மாற்றிக் கொள்வதன் வழி வெற்றிகளை எட்டமுடியும் என இராஜம் கிருஷ்ணன் வலியுறுத்துகிறார். ‘கோடுகளும் கோலங்களும்’ நாவலில் வரும் பாப்பம்மா ஒரே ஒரு அத்தியாயத்தில் வந்து மிகப்பெரிய பாதிப்பை வாசக மனதில் உருவாக்கிச் செல்கிறாள். இளவயதிலேயே கணவனை இழந்து, கூலிவேலை செய்து வறுமைக்கோட்டுக்குக்கீழே வாழ்ந்த பாப்பம்மா ‘தன்வா’ திட்டத்திலுள்ள பெண்களைச் சந்தித்து மிகப்பெரிய விவசாய சாதனைகள் புரிந்து வாழ்வின் மேல் நிலைக்கு வந்தவளாகக் காட்டப்படுகிறாள். அவள் தான் வெற்றிடைந்த வாழ்க்கைக் கதையை பேசும்போது பெண்கள் தாழ்வு மனப்பான்மையை அகற்றுவதன் அவசியத்தை வலியுறுத்துகிறாள்.

“பொம்பிளைன்னு ஏன் நம்மையே தாழ்வா நெனச்சுக்கனும்? இப்ப மத்தவங்க வயல்ல போயி, நடவு பண்ணுற, களை எடுக்கிற அறுவடைக்கும் போறீங்க. இதனையே நம்ம சொந்தமா இருக்குற அறுபது சென்டிலோ, ஒரு ஏக்கரிலோ ஏன் செய்யக்கூடாதுன்னாங்க”[38]

எனப் பாப்பம்மாவுக்குள்ளிருந்த தாழ்வு மனப்பான்மையை அகற்றும்படி ‘தன்வா’ திட்ட மகளிரால் கூறப்பட்ட அறிவுரைதான் அவளது வாழ்வையே மாற்றி அமைக்கிறது. தாழ்வு மனப்பான்மையை அகற்றுதல், தன்னம்பிக்கை பெறுதல், அச்சம் தவிர்த்தல் போன்ற

உயர்ந்த சிந்தனைகளை பாப்பம்மா தனது பேச்சின் நடுவே விதைக்கிறார். பாம்பம்மாவின் வெற்றிக்கதை ஒரு குறியீடுதான் அது அனைத்துலகப் பெண்களுக்கும் ஒரு பாடமாக நாவலுக்குள் அமைக்கப்பட்டுள்ளது.

### 6.6.7. தலைமைத் தன்மையை வளர்த்தல்

சமூகம், பெண்ணை ஆணுக்கடுத்த இடத்தில் வைத்தே பார்த்துப் பழகி விட்டது. வீட்டிலும், வெளியிலும் பெண் என்பவள் ஆணுக்குக் கீழ்தான் என்னும் மனோபாவம் சமூகத்தில் படிந்து கிடக்கிறது. அதனால் பெண்ணின் உயர்கல்விக் கனவுகள் தகர்க்கப்படுகின்றன. திருமணத்தைத் தவிர வேறு எந்த இலக்குகளும் இல்லாமலே பெண் வளர்க்கப்பட்டு வருகிறாள். சவால்களைக் கொண்ட வேலைகளுக்கோ, ஆணுக்குக் கட்டளை கொடுக்கிற வேலைகளுக்கோ, பெண் தகுதியானவளாகக் கருதப்படுவதில்லை. ஆணுக்குத் துணையாக இருக்கும் வேலைகளோடு தொடர்புபடுத்தியே அவளது தொழில் வாழ்வு நோக்கப்படுகிறது. ‘கோபுர பொம்மைகள்’ நாவலில் சுநீதாவின் தந்தையிடம் ஆனந்தி கூறும் கருத்து பெண் விடுதலைக்கான ஒரு தீர்வாக உள்ளது.

> ‘‘ஏன் சார், நீங்க எப்பவுமே பெண் ஒரு அஸிஸ்டென்டா, துணையா உதவியாகத்தான் இருக்கணும்னு நினைக்கிறீங்க அவளுக்கே தன் காலில் நிற்க நீங்க தைரியம் குடுக்கலாமே’’[39]

இதில் பெண் தலைமைத் தன்மைக்கான வரவேற்பும், உந்துதலும் வீட்டுக்குள்ளிருந்து தொடங்கப்படவேண்டும் என நாவல் எதிர்பார்க்கிறது.

பெண்களின் தலைமைத் தன்மைத் தகுதி பற்றி ‘நிழற்கோலம்’ நாவலும் பேசுகிறது.

> ‘‘தாயாகி ஒரு சமுதாயத்தை ஆக்க வல்லவர்கள், காக்க வல்லவர்கள். உங்களைக் காணும் போது பிரமை தட்டியது. உங்களிடம் அத்தகைய ஒரு

கலைஞனுக்குரியஇல்லை. மக்களுக்குத்தாய் என்ற சிறப்புக்குரிய… புனித ஆற்றல் ஒளிந்திருக்கிறது. உங்களால் ஒரு தலைவியாகவோ, வழிகாட்டியாகவோ, தனித்தன்மையுடன் செயலாற்ற முடியும் என்று நிச்சயமாகத் தோன்றுகிறது''[40]

எனப் பெண்ணின் தலைமைப் பண்புகள் தக்கவைக்கப்பட உந்துதல் வழங்கப்படுகிறது.

பொதுவான நிர்வாகம், நிறுவனம், அலுவலகம் ஆகியவற்றின் தலைமைப் பொறுப்பு என்பது ஆணுடன் மட்டுமே பொருத்திப் பார்க்கப்படும் நிலை சமூகத்தில் காணப்படுகிறது. உழைப்பு, பொறுப்பு, திறமை ஆகிய ஆளுமைப் பண்புகளுடன் வீட்டு நிர்வாகத்தைத் திறம்படக் கையாளும் பெண்களால் உயர் பொறுப்புகளில் வெற்றிகரமாகச் செயல்பட முடியும் என்பது 'மாயச்சுழல்' நாவலில் வரும் யசோதையின் கருத்தாகும்.

''தற்காலத்தில் ஆண்களுக்குச் சமமாகப் பல்வேறு துறைகளிலும் பெண்கள் செயலாற்றுவதைப் பற்றியும், நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் காரியாலங்களில் பெரிய பதவிகள் வகிப்பதைப் பற்றியும் புகழ்ச்சியாக வெளிவரும் செய்திகளைத் தினத்தாள்களில் படிக்கும்போது ''இந்த முன்னேற்றத்தைக் குறித்து ஆச்சரியப்படவும் புகழ்ந்து தள்ளவும் என்ன இருக்கிறது.'' என்று யசோதை நினைப்பாள் குடும்பங்களின் ஊன்று கோல்களாக உழைத்து உரமேறியிருக்கும் இந்தியப் பெண்குலம் வேறு துறைகளில் பின்வாங்காமல் ஏன் சோபிக்காது? குடும்பத்திலே நிர்வாகப் பொறுப்பு கொஞ்சமா?'' [41]

என்கிறாள். குடும்ப நிர்வாகப் பொறுப்புக்கென்றே கட்டம் கட்டப்பட்டு ஓரங்கட்டப்பட்ட பெண்களால் புறநிர்வாகப் பொறுப்பையும் சரிவர செய்ய முடியும் என்ற உண்மையை யசோதையின் கருத்தாடல் உறுதி செய்கிறது.

**6.6.8 துணிச்சல் பெறுதல்:**

சமூகம் பெண்ணை அச்சங்கொள்பவளாகவே வார்த்தெடுக்க ஆசைப்படுகிறது. பெண் பயப்படும் வரைதான் ஆணின் ஆதிக்கத் தந்திரங்கள் நிலைபெற்றிருக்க முடியும் என்பதுதான் அதில் மறைந்திருக்கும் உண்மையாகும். ஆண்களைக் கண்டோ, சமூக அநீதிகளைக்கண்டோ, வாழ்க்கைச் சிக்கல்களைக் கண்டோ பெண் பயப்பட வேண்டிய தேவையில்லை என 'நிழற்கோலம்' ரேவதி பெண்ணினத்துக்கு அறிவுறுத்துகிறார்.

> ''பெண் சக்தி. அவள் தைரிய லட்சுமியாக இருக்க வேண்டும்மடி அவளைக் கூனிக்குறுக ஒரு வளையத்தில் விட்டு வைக்கும் சில சமுதாய வரையறைகளை நினைத்தால் எனக்குச் சொல்ல முடியாத ஆத்திரம் வருகிறது''[42]

என்று பூமாவுக்கு ரேவதி கூறும் அறிவுரை அனைத்துலகப் பெண்களுக்கான தீர்வுகளை உருவாக்கும் முதற்படியாக அமையும்.

ஆணுக்குப் பயந்து கொண்டிருக்கும் வரை பெண்களால் எந்த விடுதலையும் பெற்றுக்கொள்ள முடியாது. 'மாறிமாறிப் பின்னும்' நாவலில் என்.கே.ஆர். எனும் பாத்திரம் ரேவதிக்குத் துணிச்சலைக் கற்பிக்கிறது. என்.கே.ஆர். முதலில் கோவலனைக் கண்ணகி ஏற்பதுதான் முறை எனப் பழமைவாதம் பேசினாலும், பின்னர் ரேவதியின் விவாகரத்து மற்றும் வாழ்வியல் புனரமைப்புக்கு வழிகோலுகிறார். அவர் ரேவதிக்குச் சொன்ன முக்கியமான அறிவுரை ''பயம் எதற்கு? என்ன கூச்சம்? தைரியம் துணிவு வேண்டும்''[43]

என்பதாகும். ரேவதியும் முதலில் கணவனுக்கு அடிபணிந்து அழுது கொண்டிருந்தாலும் என்.கே.ஆரின் அறிவுரையைக் கேட்டபின் அவள் துணிச்சல் காரியாகி விடுகிறாள். அதன்பின் அவள் கணவன் முன் அழவில்லை. தடை முன்னால் நிற்கும் போது அதை மீறவேண்டும் என்ற வேகம் பெறுகிறாள். ''துணிந்தபின் துயரில்லை''[44]

என்ற ஆசிரியர் கூற்றும் நாவலில் இடம்பெறுகிறது. பயத்தாலும் அழுகையாலும் பெண்ணுக்குத் தீர்வுகளை உருவாக்க முடியாது. துணிச்சலால் மட்டுமே ஆணின் அதிகாரத்தை அடக்க முடியும் என்பது உணர்த்தப்படுகிறது.

'சுழலில் மிதக்கும் தீபங்கள்' ரெத்னாவும் கிரிஜாவுக்கு துணிச்சலையே கற்பிக்கிறாள். பெண்கள் கோழையாக இருப்பதால் ஆண்கள் மேலே இருந்து மேல்சாவுனிசம் (ஆணாதிக்கம்) செய்வதாகக் கூறுகிறாள்.[45]

துணிச்சலின் மொத்த வடிவமாய்க் கூட்டுக்குஞ்சுகள், விஜி காட்டப்படுகிறாள். விஜி தொழிற்சாலை நிர்வாகம் தொடர்பாகத் தலையிடுவதாக எண்ணிய மயிலேசன் தன் மனைவி விஜியை அடித்து விடுகிறான். கணவன் அடித்த செயலை விஜி எதிர்க்கிறாள். தான் அடிமையில்லை என்று அழுத்தமாகப் பேசுகிறாள். கணவனின் அநீதிகளைக் கண்டு பயப்படமுடியாது என்றும் அழுவது தனக்கு உடன்பாடானதல்ல என்றும் உணர்த்துகிறாள்.[46]

கணவன் உடல் வேட்கையால் அவளை அணுகியபோது அவனை நிராகரிக்கிறாள். கணவனின் வன்புணர்வுக்கு இடம்கொடுக்கவில்லை.[47]

இவ்வாறு அனைத்து இடங்களிலும் விஜி துணிச்சல் மிக்கவளாகவே அடையாளப்படுத்தப்படுகிறாள். விஜியின் துணிச்சல் பெண்கள் பின்பற்றத்தகுந்த ஒன்றாக விளங்குகிறது. துணிச்சல் பெறுதலின் உச்சமாக ஆயுதம் வைத்துக் கொள்ளுதலை 'சேற்றில் மனிதர்கள்' நாவல் பரிந்துரைக்கிறது.

இன்றைய சமூகத்தில் பெண்ணுக்குப் பாதுகாப்பான சூழல் இல்லை. பெண்ணுடலானது வன்முறையின் களமாக மாற்றப்பட்டுக்கிடக்கிறது. ஆணின் பாலியல் வடிகாலாகப் பெண் கருதப்படும் நிலை உள்ளது. வீட்டைவிட்டு வெளியே வந்தால் அவளை ஆபத்துகள் பின்தொடர்ந்த வண்ணம் உள்ளன.

எத்திசையிலிருந்து எவ்விதத்தாக்குதல்கள் வரும் என்ற பயத்துடனே அவள் நடமாட வேண்டியுள்ளது. பெண்ணின் நடமாடும் வெளி அச்சங்களை நட்டுவைத்திருக்கிறது. பெண் மென்மையானவள் எனச் சிறுவயதிலிருந்தே கற்பிக்கப்பட்டு அதனையே நம்பி வாழுவதால் பெண்ணால் ஆணின் வன்முறைகளை எதிர் கொள்ளமுடியவில்லை. தற்காப்புக் கலைகளையும் வீர விளையாட்டுக்களையும் ஆயுத இயக்கமுறைகளையும் பெண் அறிந்திருந்தால் ஆணிடமிருந்து தப்பித்துக் கொள்ளும் வாய்ப்புள்ளது. பெண் தற்காப்புக்காக ஆயுதத்தை வைத்துக் கொள்ளுதல் குறித்துக் காந்தி கூறிய கருத்தை பெண்களுக்கான தீர்வாகச் ‘சேற்றில் மனிதர்கள்’ நாவல் பரிந்துரைக்கிறது.

> “அஹிம்சைன்னு சொன்ன காந்தி கூட பொண்ணுகள் தற்காப்புக்குக் கத்தி வச்சுடலாம். குத்தமில்லன்னு சொல்லிருக்கார்”[48]

எனத் தற்காப்புக்கான வழிமுறை கூறப்பட்டுள்ளது.

### 6.6.9 அநியாயத்துக்கு அடிபணியாமை

ஆணின் கருத்துருவாக்கம் பெண்ணைப் பொறுமையானவளாக அடையாளப்படுத்தியது. தியாகத்தின் வடிவங்களாக அவர்கள் ஆண் பிரதிகளிலும், ஊடகப் புனைவுகளிலும் காட்டப்படுகின்றனர். ஆணின் மாயத் தந்திரங்களில் இதுவும் ஒன்று. பெண்ணை மிக உயர்வாகக் காட்டுவது போலக் காட்டி பாதாளத்தில் தள்ளும் முயற்சி அது. ஆணுக்காக எதையும் தாங்கும் இதயங்களாகக் காட்டப்படும் பழமைவாதத்தை இராஜம் கிருஷ்ணன் படைத்த சில பாத்திரங்கள் உடைக்கின்றன. ‘கோபுர பொம்மைகள்’ நாவலில் வரும் மது, வரதட்சணைச்சாவு, கற்பழிப்பு உள்ளிட்ட சமுகக் கொடுமைகளுக்குக் காரணம் பெண்ணைப் பொறுமையானவள் என்று முத்திரை குத்தி விழத்தள்ளியதுதான் என்கிறார்.

‘‘இயற்கையிலேயே தியாகிகளாம்? அவள் பொறுப்பாள்? அவள் தலையில் எதை வேண்டுமானாலும் வைக்கலாம்? பட்டினி போடலாம்? தரையில் தேய்க்கலாம்? பூமி தேவி அவள், கற்சிலை அவள், பூ அவள் அரைத்து சென்ட் எடுக்கலாம்.’’[49]

என ஆணின் அநீதிகளை மறைமுகமாக ஆதரிப்பதற்காக வடிவமைக்கப்பட்ட பண்பு நலன்களே பொறுமையும் தியாகமும் என்ற கருத்தை மது பேசுகிறாள். இதில் அவள் அறிவுறுத்தும் தீர்வு பெண்கள் அநீதிகளுக்கு அடிபணிய வேண்டியதில்லை என்பதாகும்.

அடிபணிதல் தேவையற்றது என்பதை இராஜம் கிருஷ்ணன் படைத்த பெண்ணியப் பாத்திரமான சரயு உணர்த்துகிறாள். சரயுவின் மகள் சுமதி குடும்ப வன்முறைகளின் வலிகளுக்கு எதிர்வினை காட்டாததை அவள் எதிர்க்கிறாள்.

‘‘நியாயத்துக்குத்தான் தலைவணங்கணும், அநியாயத்துக்கு வணங்க வேண்டியதில்லை’’[50]

என்று மகளுக்கு வீரவுணர்வை ஊட்டுகிறாள். பெண்கள் அடிபணிதலைத் தவிர்க்கும் போது அநியாயங்களின் எண்ணிக்கை குறையும் என்ற நம்பிக்கையையும் நாவல் வழங்குகிறது.

அநியாயத்துக்கு அடிபணியாமல் அதனை மாற்றுவதற்குப் போராடவேண்டும் எனச் ‘சேற்றில் மனிதர்கள்’ நாவல் குறிப்பிடுகிறது.

‘‘நீங்க இந்த அநியாயங்கள் எல்லாம் மாத்த நிக்கணும்.... உங்க சங்கிலிகளை நீங்கதா அறுத்துக்கிட்டு ஏன்னு கேக்கணும் அன்னிக்கிருந்த எத்தனையோ அநியாயம் போயிருக்கு, ஆனா ஒண்ணு மட்டும் அப்படியே இருக்கு. பெண்ணடிமைத்தனந்தா....’’[51]

என்பதில் ஆணாதிக்கத்துக்கெதிராய்க் கேள்வி எழுப்புதலும், போராடுதலும் வலியுறுத்தப்படுகின்றன.

### 6.6.10 சார்புத்தன்மையைத் தூக்கி எறிதல்

பெண்ணின் இருப்பு என்பது எப்போதுமே ஆணுடன் இணைத்தே நோக்கப்படுகிறது. பெண்ணைப் பற்றிப் பேசும்போது இன்னாருடைய மனைவி என்பது முன்னிறுத்தப்படுகிறது. ஆணைப்பற்றிப் பேசும்போது இன்னாருடைய கணவன் என்பது முன்னிறுத்தப்படுவதில்லை. பெண் தனித்த அடையாளங்களுடன் நோக்கப்படுவதில்லை என்பதற்காகக் ‘கோபுர பொம்மைகள்’ நாவல் கவலைப்படுகிறது. இதில் வரும் அபிராமி கணவனுக்கு அடங்கிய வாழ்வு வாழ்ந்தவள் எனினும், கணவனின் மரணத்துக்கப்புறம் பெண்ணின் தனித்தன்மைகளின் முக்கியத்துவம் பற்றிப் பேசுபவளாக உருமாறுகிறாள். பெண் பிறரது சார்புத்தன்மையற்று வாழ்தலின் தேவையை அபிராமி பாத்திரம் உணர்த்துகிறது.

> ‘‘உலகெங்கும் பெண், புருஷனின் ஒளியில்தான் குளிர்காய வேணும் என்ற சார்புத்தன்மையைத் தூக்கி எறியும் சத்தியம்’’[52]

என்பதில் பெண்ணின் தனித்த அடையாளம் முக்கியப்படுத்தப்படுகிறது.

பெண் தன் வாழ்வுச்சிக்கல்களுக்கான தீர்வு வேறு எங்கிருந்தோ வருமென்று எதிர்பார்க்க வேண்டியதில்லை. பெண்களின் சிக்கல்களுக்கான தீர்வு பெண்களிடமே உள்ளது. சார்ந்திருக்கும் மனோபாவம் பெண்களின் வீழ்ச்சிக்கு வழிகோலுவது என்பது இராஜம் கிருஷ்ணனின் பல நாவல்களில் உணர்த்தப்பட்டுள்ளன. பெண்கள் பிறரைச் சார்ந்திருக்கும் பண்புநலனை விடுத்து வாழுவதற்குப் ‘புயலின் மையம்’ நாவல் அழைப்பு விடுக்கிறது.

‘‘எங்கிருந்தாலும் தைரியமாயிருக்கக் கத்துக்கணும், தானே ஊன்றி நடக்கத் தெரிஞ்சப்புறம், குழந்தைகூட ஆதரவுன்னு யாரையும் பார்க்கிறதில்லே’’[53] என்று காத்யாயனிக்கு அத்தை கூறும் அறிவுரையானது தைரியத்தையும், தனித்துவத்தையம் வலியுறுத்துகிறது.

### 6.6.11 தனித்து சாதித்தல்

'மானுடத்தின் மகரந்தங்கள்' நாவலில் வரும் சம்புவை வரதட்சணை கொடுத்து ஒருவனுக்கு மணம் முடித்துக் கொடுக்கின்றனர். மணமாகிச் சென்றபின்தான் அவன் முன்னரே வேறு மணம் புரிந்தவன் என்பதை அவள் தெரிந்து கொள்கிறாள். உண்மை தெரிந்தபின் கணவனுக்காக உரிமை கொண்டாடவும் இல்லை. சட்டத்தைத் துணைக்கழைத்து அவனை எதிர்த்துப் போராடவும் இல்லை. அவனுக்காக ஏங்கிக் காத்திருக்கவும் இல்லை. அந்தப் பந்தத்தைத் துறந்துவிட்டு தனியாக வாழத் தலைப்படுகிறாள். சம்புவின் துணிவும், தனியாக வாழும் திறனும் சிறப்புக்குரியவையாகத் தோற்றமளிக்கின்றன.

### 6.7 விழிப்புணர்வூட்டல்

பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளை உணராத ஏராளமான பெண்கள் இந்தியாவில் உள்ளனர். ஆணாதிக்கம் பற்றியோ, பெண் விடுதலை பற்றியோ சிறிதளவு கூடச் சிந்திக்காத பெண்களிடம் விழிப்புணர்வு ஊட்டப்பட வேண்டியதாகிறது. விழிப்புணர்வில் இருந்தே சமூக மறுமலர்ச்சி தொடங்குகிறது. என்பதால் விழிப்புணர்வூட்டுதலை ஒரு தீர்வாகக் கொள்ள முடிகிறது. மூவகை விழிப்புணர்வூட்டல் குறித்து இராஜம் கிருஷ்ணனின் புனைகதைகள் பேசுகின்றன. அவை,

6.7.1. தனிநபர் விழிப்புணர்வூட்டல்
6.7.2. அமைப்பு சார்ந்த விழிப்புணர்வூட்டல்
6.7.3. கலைவழி விழிப்புணர்வூட்டல்

என்பனவாகும்.

### 6.7.1 தனிநபர் விழிப்புணர்வூட்டல்

இயக்கங்கள், சங்கங்கள், கட்சிகள் போன்ற அமைப்புகள் எதுவுமின்றி சமூக உணர்வுமிக்கப் பெண்களில் ஒருவர் தனிநபராகவே பெண்களிடம் விழிப்புணர்வூட்டும் செயல்புரிதலை இது குறிக்கிறது.

‘கூட்டுக்குஞ்சுகள்’ விஜி தனிநபராகவே பெண்களிடம் விழிப்புணர்வை ஊட்டும் ஆர்வம் கொண்டவராகக் காட்டப்படுகிறார்.

> “இந்தக் கட்டுக்களை அறுத்துக்கொண்டு, தன்னிலும் எளிய வசதியற்ற, மூடநம்பிக்கைகளுடைய பெண்களின் உள்ளங்களில் விழிப்புணர்வை ஊட்டச்செல்லவேண்டும்”[54]

என்ற விஜியின் குறிக்கோளானது இத்தீர்வுக்கு அரண் செய்வதாக அமைந்துள்ளது.

பெண்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்தி, சமூக மாற்றத்தை உருவாக்கிய கோதாவரி பரூவேகார் எனும் மகாராஷ்டிரா மாநிலப் பெண் போராளி பற்றிய செய்தியைக் ‘கூட்டுக்குஞ்சுகள்’ நாவல் சுருங்கச் சொல்லுகிறது. கோதாவரி பரூவேகர் காடுகளுக்குள் நடந்து சென்று, அழுத்தப்பட்டுக் கிடந்த ஆதிவாசி சமூகத்துக்கு விழிப்புணர்வூட்டி எழுச்சிமிகுந்த வரலாற்றை உருவாக்கிய செய்தி இதில் கோடிட்டுக் காட்டப்படுகிறது. துணிச்சல் மிக்கப் பெண்களின் சமூகச் செயல்பாடு மிகப்பெரிய வெற்றிகளை விளைவிக்கும் என்பதை இது உறுதிப்படுத்துகிறது.

### 6.7.2 அமைப்பு சார்ந்த விழிப்புணர்வூட்டல்

‘விலங்குகள்’ நாவலில் கீதா, உஷா எனும் இரு பெண்களும், பெண்களின் சிக்கல்களுக்கெதிராகப் போராடும் அமைப்பை உருவாக்கி, பெண்களை ஒன்றிணைத்து சமூகத்தில் மாற்றத்தை உருவாக்க உழைக்கின்றனர். பெண்கள் அறியாமையிலிருந்து வெளியேவர அவர்களுக்கு விழிப்புணர்வு ஊட்டப்பட வேண்டும் என நாவல் அறிவுறுத்துகிறது.

> “பொது வாழ்வில் பெண்களைக் கீழான வகையில் பயன்படுத்தும் இழிவுகள் வரதட்சணைக் கொடுமைகள் எல்லாவற்றையும் ஒழிக்க வேண்டும். ஆம் பெண்களே அறியாமையில் மூழ்கி இந்த அவலங்களுக்கு உள்ளாகின்றனர். அவர்கள் விழிப்பெய்த வேண்டும்”[55]

என அமைப்புகள் வழி பெண்களுக்கு விழிப்புணர்வூட்டுவது கதையம்சம் வழியாகவும், கருத்துக்கள் வழியாகவும் வலியுறுத்தப்படுகின்றன.

### 6.7.3 கலைவழி விழிப்புணர்வூட்டல்

பெண்களின் சிக்கல்கள், தீர்வுகள், வளர்ச்சிகள், சிறப்புக்கள், எச்சரிப்புக்கள் அனைத்தையும் மக்கள் விரும்பும் கலைவடிவங்களில் வழங்கும் போது அவை பெண்களின் மனதில் பதிந்து விளைவுகளை ஏற்படுத்தும். ‘மானுடத்தின் மகரந்தங்கள்’ நாவலில் பொதுவுடைமை இயக்கம் சார்ந்த இளைஞர்கள் தப்பட்டை போன்ற இசைக்கருவிகளுடன் கூத்து நிகழ்த்தி பெண்களுக்கு விழிப்புணர்வூட்டுகின்றனர்.

“எல்லோரும் ஓர்விலை எல்லோரும் ஓர் நிறைன்னு
எழுதி வச்சான் பாரதி-ஆனா
ஆணுக்கு விலையிருக்கு, பொண்ணுக்கு அதுஇல்ல
பொண்ணைப் படிக்க வச்சா மதிப்ப கூடிப்போகும் இன்னாங்க
மதிப்பு கூடிப்போச்சி-வரதட்சணை ஏறிப்போச்சி”[56]

என வரதட்சணைக் கொடுமை உள்ளிட்ட பெண்களின் சிக்கல்களுக்கான காரணங்கள் பற்றிய விழிப்புணர்வை ஊட்டுகின்றனர். தனிமனித மனங்களை அசைக்கும் ஆற்றல் கொண்ட கலை வடிவங்கள் வழி பெண் விடுதலைக் கருத்துக்கள் பரப்பப்படுதலின் தேவையை இது உணர்த்துகிறது.

## 6.8 பெண் சக்தியை ஒன்றிணைத்தல்

பெண்கள் தனிநபர்களாகச் சிதறிக் கிடப்பதால் ஆணதிகாரம் எளிதில் செயற்படுகிறது. எனவே பெண் சக்தியை ஒன்றிணைப்பது தீர்வை நோக்கிய படிநிலை வளர்ச்சியாக அமைகிறது.

‘மானுடத்தின் மகரந்தங்கள்’ நாவலில் பெண் சக்தி திரட்டப்பட்டு வெகுமக்கள் இயக்கமாக மாற்றப்பட வேண்டும் என்று

அறிவுறுத்தப்படுகிறது. பெண்களின் பிரச்சினைக்கான தீர்வில் பெண்களின் பங்கேற்பு முக்கியமானது என இந்நாவல் வலியுறுத்துகிறது.[67]

‘சுழலில் மிதக்கும் தீபங்கள்’ நாவலில் பெண் சக்தி பெரியது என்றும் அது வீட்டுக்குள் முடக்கப்படாமல் சமூகப்பார்வையுடன் வெளியே வரவேண்டும் என்றும் ரத்னா கதாப்பாத்திரம் வழியாக அறிவுறுத்தப்படுகிறது.

‘பெரிய பெண் சக்தி இப்படி வீட்டுக்குள் முடங்கி வீணாகப் போவதைப் பற்றிச் சிந்தியுங்கள். இந்தச் சமுதாயத்தின் குறைபாடுகள், துன்பங்கள் இதெல்லாவற்றிலும் நமக்கு ஒரு பங்கு இருக்கிறது’’[58]

எனப் பெண்கள் ஒன்றிணைதலின் தேவையை இப்பகுதி உணர்த்துகிறது.

பெண்சக்தியை ஒன்றிணைத்தல் குறித்துப் பேசும் இராஜம் கிருஷ்ணன்.

6.8.1 பெண்கள் பிரச்சினைகளுக்காக ஒன்றிணைத்தல்

6.8.2 சமூகப்பிரச்சினைகளுக்காக ஒன்றிணைத்தல்,

ஆகிய இரண்டைப் பற்றியும் விளக்குகிறார்.

### 6.8.1 பெண்கள் பிரச்சினைகளுக்காக ஒன்றிணைத்தல்

பெண்களின் சிக்கல்களுக்குத் தீர்வு காணவும், பாதிக்கப்படும் பெண்களுக்கு உதவவும் பெண்கள் அமைப்புகள் உள்ளன. அறிவுரை வழங்குதல், வழக்கு தொடுத்தல், விவாகரத்து வாங்கிக் கொடுத்தல், புனர்வாழ்வுக்கு உதவுதல் போன்ற பணிகளைச் செய்யும் பெண்கள் அமைப்பின் சிறப்பை ‘மாறிமாறிப்பின்னும்’ என்ற நாவல் உணர்த்துகிறது. கணவனால் துன்புறுத்தப்படும் ரேவதிக்கு உறுதுணையாக இருந்த சுதா ‘சினேகிதி’ எனும் பெண்கள் அமைப்பு குறித்து விவரிக்கிறாள்.

> ‘‘எதுக்கு நீங்க இப்படி வதை படணும்? அதோட அவ பொஸிஷன் என்னங்கறதையும் பக்குவமாத் தெரிஞ்சிக்கனும் ரேவு மாமி எனக்கு உங்களைப் போல வாய்திறக்காமல் கொடுமைகளைச் சகிக்கும்

> பெண்களுக்குன்னு ஏதானும் 'சர்வீஸ்' பண்ணனும்ங்கறது. அதுக்காகவே நான் சிநேகிதிங்கற சங்கத்தில் கூட மெம்பராயிருக்கேன். எங்களைப் போல் படிச்சு வேலை செய்யறவங்க இப்படி மற்ற பெண்களுக்கு உதவணும்னு தான் அந்தச் சங்கம் செயல்படுகிறது. அதனால் நீங்க பயப்பட வேண்டாம்''[59]

என எதிர்குரல் கொடுக்க இயலாத பெண்களுக்காய்க் குரல் கொடுக்கும் அமைப்புகள் பெண்களுக்கான நடைமுறைத் தீர்வுகளை உருவாக்குதலில் முக்கியப் பங்காற்றுவதை நாவல் வெளிப்படுத்துகிறது.

தேசிய அளவிலும் உலக அளவிலும் பெண்கள் ஒன்றுபடும் போதுதான் பெண் விடுதலைக்குரிய இலக்கை எட்ட முடியும் என்ற பெண்ணியவாதிகளின் கருத்தைக் கதையோட்டத்தின் நடுவே இராஜம் கிருஷ்ணன் நிறுவுகிறார். ஊடக ஆபாசத்துக்கெதிரான போராட்டத்தில் பெண்கள் சம உரிமைக்கழகம், பெண்கள் முற்போக்கு இயக்கம், பின் தங்கிய சமூகப் பெண்கள் சங்கம், யுவதிகள் சம்மேளனம், தொண்டூழியப் பெண்கள் அமைப்பு, சிறுபான்மைச் சகோதரிகள் போராட்ட அமைப்பு, மாதர் சேவாசங்கச் சென்னைப்பிரிவு ஆகிய ஏழு அமைப்புகளின் தலைவிகள் கலந்து கொண்டதாகக் 'கோபுர பொம்மைகள்' கதையைத் தொடங்குகிறார். மொழி, இன, மத வர்க்க, சாதிய வேறுபாடுகளைக் கடந்து எட்டு அமைப்புகள் அந்த ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டதாகக் கதை சொல்லப்பட்டுள்ளது. பெண் விடுதலைக்கான போராட்டங்களில் பெண்களின் பங்கேற்பு என்பது தீர்வுகளை நோக்கிய பயணத்துக்குப் பெண்களை அழைத்துச் செல்லும் என அந்நாவல் கருதுகிறது.

'கோபுர பொம்மைகள்' நாவலில் வரும் வசந்தரா, ராதா, தேவகி, மோகனா, சைலஜா ஆகியோர் மக்கட் தொடர்பு சாதனங்களின் ஆபாசத்திற்கெதிரான போராட்டங்களை முன்னெடுத்துச் செல்லுகின்றனர். அபிராமி வாழ்வின் பிற்பகுதியில் இச்சமூகப்

போராளிகளோடு தன்னை இணைத்துக் கொள்கிறார். பிரச்சார அட்டைகள், ஆர்ப்பாட்டம், கண்டன முழக்கம், பிரச்சாரக் கூட்டம், அமைச்சருக்கு மனு கொடுத்தல் போன்ற போராட்ட வழிமுறைகளை இப்பெண்கள் கையாளுகின்றனர். ஏழு பெண்கள் அமைப்புகளை இணைத்து ஊடகங்களின் ஆபாசத்துக்கெதிரான போராட்டத்தை இவர்கள் ஒருங்கிணைக்கின்றனர்.

> “நாம் ஏழு பெண்கள் அமைப்புகள் இன்று ஒரு முக்கியமான பிரச்சினைகளை முன்வைத்து ஆர்ப்பாட்டம் நடத்தி மெமொரண்டம் கொடுக்க இருக்கிறோம். இன்றைக்குப் பத்திரிக்கைகள், தொலைக்காட்சி, சினிமா ஆகிய மக்கள் தொடர்பு சாதனங்கள் பெண்களைக் கடைச்சரக்காக்கி, பெண்கள் மீதான அடக்கு முறைகளுக்கு ஆதரவளிக்கின்றன. அந்தப் போக்கை நாம் வன்மையாகக் கண்டிக்கிறோம்.”[60]

என்ற பகுதி பெண் சக்தியை ஒன்றிணைத்தல் பற்றிப் பேசுகிறது.

### 6.8.2. சமூகப்பிரச்சினைகளுக்காக ஒன்றிணைத்தல்

சமூகப்பிரச்சினைகளுக்கெதிராகக் குரல் கொடுக்கவும், பெண் சக்தியை ஒன்றிணைக்கப்படவேண்டுமென ‘சேற்றில் மனிதர்கள்’ நாவல் கோருகிறது. குடும்ப அட்டைகளுக்குரிய அத்தியாவசியப் பொருட்கள் வழங்கப்படாமையைக் கண்டித்து நடைபெற்ற போராட்டத்தில் லெட்சுமி மற்றும் அவளது பகுதி பெண்கள் கலந்து கொள்ளாததைத் தங்கசாமி இடித்துரைக்கிறார். போராட்டங்களில் பெண்கள் கலந்து கொள்ளாமலிருப்பதின் பின்னணியில் ஆண்கள் இருப்பதாகக் குற்றம் சாட்டுகிறார். பெண் சக்தி ஒன்றிணைத்தல் பற்றிப் பேசும் சம்முகம் போன்ற சமூக ஆர்வலர்கள் கூட மனைவியைப் போராட்டத்துக்கு விடாமலிருப்பதை இடித்துரைக்கிறார்.

> “எல்லாரும் பொம்பிளங்க சேந்தாத்தா சங்கத்துக்குப் பலம்னு பேசுறாங்க ஆனா அவனவன்வூட்டுப் பொம்பிளய வெளில விடாம காவந்து பண்ணிக்கிறான்”[61]

என்பதில் பெண்சக்தியை ஒன்றிணைப்பதைத் தடுக்கும் ஆண்கள் விமர்சிக்கப்படுகின்றனர்.

## 6.9 போராட்டம்

நாட்டு விடுதலையைப் போராட்டம் வழியாகப் பெற்றதைப் போன்று பெண் விடுதலையையும் போராட்டம் வழியாகவே பெறமுடியும் எனப் பெண்ணியவாதிகள் கருதுகின்றனர். பெண்ணுக்கெதிரான அநீதிகள் நாள்தோறும் நிகழ்ந்த வண்ணமிருப்பதைத் தடுப்பதற்குப் பெண்கள் ஒன்றிணைந்து போராட வேண்டும் என ‘மானுடத்தின் மகரந்தங்கள்’ நாவல் அறிவுறுத்துகின்றது. படித்தவர், வேலை பார்ப்பவர்கள் அனைவரும் அப்போராட்டத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என நாவல் எதிர்பார்க்கிறது. சுயநலத்தை முன்னிட்டு பெண்கள் தனித்தனியாய் ஒதுங்குவதால் இச்சிக்கல்களுக்கான தீர்வை உருவாக்கமுடியவில்லை என உரைக்கிறது.

> “போகணும், ஏகோபித்து எல்லோரும் பொங்கி எழுந்து நியாயம் கேட்கணும் வர, வர தினம் இது போல் பெண்பிள்ளை கேசாகவே வருது. ரொம்ப கஷ்டமாக இருக்கு, இப்படி ஒரு பெண்ணுக்குப் பத்திரமில்லாத வகையில் இன்னிக்குச் சமுதாயம் இழிவடைஞ்சிருக்குன்னா, நிம்மதின்னு ஒதுங்கணும்? நீங்கெல்லாம் படிச்சென்ன உத்தியோகம் பார்த்தென்ன”[62]

எனப் போராட்டத்திற்கு நாவல் அழைப்பு விடுகிறது.

‘சுழலில் மிதக்கும் தீபங்கள்’ நாவலில் ஒரு மூதாட்டி கிரிஜாவுக்குப் போரட்டத்தைத் தீர்வாகப் பரிந்துரைக்கிறார்.

> “பொறுக்கலன்னா எழும்பிப் போராடு, தெரிந்து கொள், இரண்டிலொன்று முடிவு செய்துடனும், அந்த முடிவைப்

பத்தி பிறகு அலட்டிக்கப்படாது. அப்படி பிரச்சனை பிரச்சனைன்னு சிச்கலிலிருந்து விடுபட நமக்குச் சக்தி இருக்குன்னு தைரியமில்லாமலேயே உசிரை மாய்த்துக்கறதே, ரொம்பக் கோழைத்தனம் பார்''[63]

பிரச்சனைகளுக்கான தீர்வாகத் தற்கொலையைத் தேர்ந்தெடுப்பது தவறு என்று இதில் உணர்த்தப்படுகிறது. போராடுதல், நம்பிக்கை, தெளிவு ஆகிய உயர் பண்புகளைப் பெற்றுக்கொள்வதே சிக்கல்களுக்கான தீர்வு என்பதை இவ்வறிவுரையிலிருந்து உய்த்துணர முடிகிறது.

''கரிப்பு மணிகள்'' நாவல் பெண்கள் ஒன்றிணைந்து போராட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகிறது. உப்பளத் தொழிலாளர்களுக்கு ஏராளமாக அநீதி இழைக்கப்பட்ட போது இராமசாமி அதற்கெதிராகப் போராட தொழிலாளர்களை ஒன்றிணைக்கிறான். பெண் தொழிலாளர்களும் ஒன்றிணைந்து போராடினால் தான் இலட்சியத்தை வென்றெடுக்க முடியும் என்பதை அனைவருக்கும் அறிவுறுத்துகிறான். செங்கமலத்தாச்சி எனும் அனுபவம் வாய்ந்த பெண்ணிடமும் போராட்டத்துக்கு ஆதரவு கேட்கிறான். ஆண்களும் பெண்களும் ஒன்றிணைந்து கோரிக்கை முழக்கங்களை எழுப்பி ஊர்வலம் செல்லுகின்றனர். வேலை நிறுத்தமும் செய்கின்றனர். உப்பள நிர்வாகம் பனஞ்சோலை அளத்துக்குள் புது ஆட்களைக் கொண்டுவந்து வேலை செய்யும் முடிவை எடுக்கிறது. செங்கமலத்தாச்சி அப்போது முழுமையான பெண் போராளியாகவே மாறிவிடுகிறாள். அவளது முடி பிரிந்து விழுகிறது. தனது சக்தியை எல்லாம் திரட்டிக்கொள்ளுகிறாள். அவள் பனஞ்சோலை அளத்தை நோக்கி ஓடும்போது அள்ளிச் செருகிய முடி அவிழ்ந்து பறக்கிறது. பனஞ்சோலை அளத்தில் புது ஆட்களைக் கொண்டே வரும் செய்தியை வழிநெடுக அறிவிக்கிறாள். உப்பளத்தொழிலாளர்களுக்காய்க் குரல் கொடுத்துக் கொண்டே ஓடுகிறாள். அவளது தோற்றம் ஒரு தீப்பந்தம் புயற்காற்றுச்

சுறாவளியில் பறந்து செல்வது போல் காட்சியளிக்கிறது. அநீதியைத் தட்டிக்கேட்க ஆண்களுக்கும் பெண்களுக்கும் அழைப்பு விடுக்கிறாள். தொழிலாளர்கள் அவள் பின்னால் திரளுகின்றார்கள் என செங்கமலத்தாச்சியின் போர்க்குணத்தைச் சித்தரிக்கும் இராஜம் கிருஷ்ணன் அவளது தோற்றத்தைக் கீழ்க்காணும்மாறு காட்சிப் படுத்துகிறார்.

> "பாண்டியன் அவையில் நியாயம் கேட்கச் சென்ற கண்ணகியோ? பாரதியின் பாஞ்சாலி அவள் தானோ? இந்த அம்மை, இவள் யார்? ஆண்டாண்டுக் காலமாக வெறும் பாவைகளாக, பூச்சிகளாக அழுந்தி இயலாமையின் சின்னங்களாக இருந்த சக்தியின் ஆவேச எழுச்சியோ?"[64]

என நாடகத்தன்மையில் போர்க்குணமிக்கப் பெண்ணை வருணிக்கிறார்.

பெண்கள் தமது சிக்கல்களுக்காக மட்டுமின்றி சமூகத்திலுள்ள அனைத்து அநீதிகளுக்காவும் போராட முன்வரவேண்டும் என இராஜம் கிருஷ்ணன் போராட்டத்துக்கான அழைப்பைப் பெண்ணினத்துக்கு வழங்குகிறார். தண்ணீர்த் தட்டுப்பாடு, விலைவாசி ஏற்றம், வேலையில்லாதத் திண்டாட்டம் எனச் சமூகத்தில் புரையோடிக் கிடக்கும் அநீதிகளுக்கு எதிராகப் பெண்ணினம் ஒன்றிணைய அறிவுறுத்துகிறார்.

தண்ணீர்த்தட்டுப்பாடு போன்ற பிரச்சினைகளுக்கெதிராகப் போராட ஆண் முன்வராமையை அவர் கோடிட்டுக் காட்டுகிறார். தண்ணீர் பிரச்சினையைப் பெண்களின் பிரச்சினையாகக் கருதி ஆண்கள் விலகிச் செல்வதாக அவர் காரணங்காட்டுகிறார். எனவே

> "பெண்கள் சேர்ந்து போராட்டம் நடத்தினாலே சமூக விழிப்புணர்வு ஏற்படும்"[65]

என்ற கருத்தை முன்வைக்கிறார். பெண்களின் ஒன்றிணைந்த போராட்டமே சமூகத்தில் விழிப்புணர்வை உருவாக்கி தீர்வைக் கொண்டுவரும் வலிமை படைத்தது என்ற கருத்து இப்பகுதியின் மையமாக அமைந்துள்ளது. பெண்களின் தீர்வை நோக்கிய

பயணத்தில் ஆணைச்சேர்க்க வேண்டிய தேவையில்லை என்று 'தோட்டக்காரி' நாவல் பேசுகிறது.

> "பெண்ணின் பிரச்சனைகளை இன்னொருவர், ஆண் வந்து விடுவிக்கணும்னு நினைப்பதே பிற்போக்கானது. நாமே நம்மைப் பற்றிச் சிந்தித்து செயல்படணும்"[66]

எனப் பெண்ணுக்காகப் பெண்ணே களமிறங்க வேண்டிய தருணத்தை நினைவூட்டுகிறார். ஆண்களோடு இணைந்து பெண்கள் போராடுவது குறித்து இராஜம் கிருஷ்ணன் பேசும் இடம் உள்ளது.

'சேற்றில் மனிதர்கள்' நாவலில் விவசாயத்துறையில் இழைக்கப்படும் அநீதிகளுக்கெதிரான பேரணி ஒன்று நடைபெறுகிறது.

இதில் ஆண்கள் பெரும்பான்மையாகவும், பெண்கள் சிறுபான்மையாகவும் கலந்து கொள்கின்றனர். ஆனால் போராட்டத்தில் கலந்து கொண்ட மூன்று பெண்களும் தீவிரமான முழக்கங்களை எழுப்புகின்றனர். மாதர்தம்மை இழிவு செய்யும் மடமையைத் தீக்கொழுத்த வேண்டும், அரிசன மக்கள் தாக்கப்படக்கூடாது. விவசாயத் தொழிலாளர்களுக்கு வார விடுமுறை, மருத்துவ வசதிகள் வழங்கப்பட வேண்டும், உரவிலை குறைக்கப்பட வேண்டும் ஆகிய தீர்வுகள் உரத்த குரல்களாக எழுப்பப்படுகின்றன. இதில் கலந்து கொண்ட மாதர்சங்க அம்மாள் ஏராளமான பெண்கள் இத்தகைய போராட்டங்களில் பங்கேற்க வேண்டும் என்னும் ஆவலை வெளிப்படுத்துகிறார். பெண்களின் அணிதிரண்ட போராட்டமே பிரச்சினைகளுக்கான தீர்வை உருவாக்கும் என நாவல் மறைமுகமாக உணர்த்துகிறது.

### 6.10 புரட்சி

வரதட்சணைச் சிக்கலுக்கு எதிராக ஒரு புரட்சி வருவது தவிர்க்க முடியாதது என்று 'மாயச்சுழல்' நூலிடையே நுவலப்படுகிறது. யசோதைக்கும் ராமாமிருதத்துக்கும் இடையே நடந்த உரையாடலில் புரட்சி தீர்வாகச் சொல்லப்படுகிறது. தட்டச்சு நிறுவனம் நடத்தும்

ராமாமிர்தத்தால் எதிர்பார்க்கப்படும் இத்தீர்வு எங்கிருந்து எப்படி உருவாகும் எனக் கூறப்படவில்லை.

> ‘‘இந்தத் தடிப்பயல்களெல்லாம் ‘இத்தனை ஆயிரத்துக்கு நகைபோடு, இத்தனை ஆயிரத்துக்குச் சீரெடு’ என்று பேராசை பிடித்து அலைந்தால் இப்படி உன்னைப்போன்ற பெண்களெல்லாம் மெஷினோடு மெஷினாகத் தேய வேண்டியதுதானே, நிசமாகச் சொல்லுகிறேன். இந்தநிலை அதிகமாகிக்கொண்டே வருகிறது. ஒருபெரிய புரட்சி ஏற்படப்போகிறது பார். நான் கண் மூடுவதற்குள் அதையும் பார்க்கப் போகிறேன். அந்தப் பயல்கள் எல்லாம் சட்டிசுரண்டப் போகிறான்கள்’’[67]

இதில் வரதட்சணை வாங்குபவர்கள் தடிப்பயல்கள், பேராசை பிடித்தவர்கள் எனத் தடித்த சொற்களால் அடையாளப்படுத்தப்படுகின்றனர். இப்பகுதியில் புரட்சி என்னும் தீர்வு மேலோட்டமாக முன்வைக்கப்படுகிறது.

பெண்ணின் வாழ்வில் விடுதலை என்பது தானே வந்து சேரும் ஒன்றல்ல, அது பெண்களின் எழுச்சியாலும், புரட்சியாலும் மட்டுமே உருவாகும் என்பதைக் ‘கூடுகள்’ நாவல் மறைமுகமாக உணர்த்துகிறது. கனகா தன் தாயைப் பற்றிக் குறிப்பிடும்போது,

> ‘‘இந்தக் கூண்டிலிருந்து இன்னொரு கூண்டுக்குச் செல்லும் இன்றைய பெண் மனதளவில் ஏற்றுக்கொள்ள வேண்டிய புரட்சிகளைப் பற்றிச் சற்றும் சிந்தனை செய்தறியாதவள்’’[68]

என்கிறாள். இதில் பிறந்த வீடு, புகுந்த வீடு ஆகிய இரண்டுமே பெண்ணுக்குக் கூண்டாக அமைவது உணர்த்தப்படுகிறது. ஒரு கூண்டிலிருந்து இன்னொரு கூண்டுக்கான இடப்பெயர்ச்சியாகத் திருமணம் அடையாளப்படுத்தப்படுகிறது. இந்த சுதந்திரமின்மையிலிருந்து பெண் வெளியேற ஒருபுரட்சியை நாவல் எதிர்நோக்குகிறது.

## 6.11 பொதுவுடைமை

'மண்ணகத்துப் பூந்துளிகள்' நாவல் சமூகப்பிரச்சினைக்கான தீர்வாகப் பொதுவுடைமையை முன்வைக்கிறது. இந்நாவலில் வரும் சுந்தரம் பொதுவுடைமையின் உயர்வுகளைப் பிரச்சாரம் செய்கிறான். ஏற்றத்தாழ்வு நீக்கி சமத்துவம் மலர ஆண்களும் பெண்களும் இணைந்து பாடுபடுவதற்கு அழைப்பு விடுக்கிறான். அனைவருக்கும் உழைப்பு, அனைவருக்கும் வேலைவாய்ப்பு என்ற கருத்தையும் மொழிகின்றான். வறுமைக்கான காரணமாக ஆதிக்க வர்க்கத்தின் சுரண்டலைச் சுட்டுகிறான் வரதட்சணை, காதல் முறிவு, அதிருஷ்டச் சீட்டு, வட்டிக்கடன், சுரண்டல், கொள்ளையடித்தல், ஏற்றத்தாழ்வு, பால்பேதம், ஆகிய அநீதிகள் அழிய பொதுவுடைமையே தீர்வு என அவன் குறிப்பிடுகிறான்.

> "கூட்டாகத் தொழிலில் உழைக்கிறது. பலனை எல்லாரும் பங்கிட்டுக் கொள்வோம். இதுதான் பொதுவுடைமை. முப்பது கோடி ஜனங்களின் சங்கமம் முழுமைக்கும் பொதுஉடைமைன்னு பாரதி பாடினாரு. அப்படி ஒரு முறை வந்தால், ஆண் பெண் உயர்த்தி தாழ்த்தி இல்ல. சீதனம், பவுன் அதெல்லாம் இல்ல. அவங்க அவங்க யாரைப் பிடிச்சிதோ அவங்களைக் கட்டிக்கலாம்"[69]

எனச் சமூக சிக்களுக்கான தீர்வாகப் பொதுவுடைமை காட்டப்படுகிறது.

இவ்வியலில் பெண்களுக்கு வழங்கப்பட வேண்டிய பல்வேறு கல்வியின் வகைகள் குறித்து கூறப்பட்டுள்ளன. குடும்ப அமைப்புக்குள் செய்யப்படவேண்டிய சீர்திருத்தங்கள் குறித்தும் விவாதிக்கப்பட்டுள்ளன. பெண் விடுதலையுடன் சமூக விடுதலைக்கான தீர்வுகளும் முன்வைக்கப்பட்டுள்ளன. பெண் விடுதலையைப் பெறுவதற்கு பெண்களிடம் ஏற்படவேண்டிய பண்பியல் மாறுதல்கள் குறித்து விரித்துரைக்கப்பட்டுள்ளன. பெண் விடுதலையை மீட்டெடுக்க பெண் சக்தி ஒன்றிணைய வேண்டும் என்ற கருத்தும் வலியுறுத்தப்பட்டுள்ளது. போராட்டம், புரட்சி, பொதுவுடைமை ஆகியவையும் தீர்வுகளாக முன்வைக்கப்பட்டுள்ளன.

**சான்றெண்விளக்கம்**

1. க.பஞ்சாங்கம், பெண்மொழிபுனைவு, ப.7
2. நளினிதேவி, இராஜம்கிருஷ்ணன் புதினங்களில் சமுதாய மாற்றம், ப.107
3. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.97
4. மேலது, ப.27
5. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.11
6. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், பக்.42-43
7. இராஜம்கிருஷ்ணன், கூட்டுக்குஞ்சுகள், ப.182
8. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.278
9. இராஜம்கிருஷ்ணன், அழுக்கு, பக்.44-45
10. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.41
11. இராஜம்கிருஷ்ணன், விலங்குகள், ப.18
12. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.165
13. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.16
14. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், ப.19
15. மேலது, ப.121
16. மேலது, ப. 217
17. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், ப.259
18. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.23
19. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், பக்.187-188
20. இராஜம்கிருஷ்ணன், கோபுர பொம்மைகள், ப.84

21. இராஜம்கிருஷ்ணன், பெண் குரல், ப.209

22. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், முன்னுரை, ப.9

23. இராஜம்கிருஷ்ணன், கூட்டுக்குஞ்சுகள், ப.187

24. இராஜம்கிருஷ்ணன், விலங்குகள், ப.30

25. இராஜம்கிருஷ்ணன், பெண்குரல், ப.73

26. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.27

27. மேலது, ப.27

28. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.240

29. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.28

30. இராஜம்கிருஷ்ணன், கோபுரப் பொம்மைகள், ப.68

31. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.100

32. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.29

33. இராஜம்கிருஷ்ணன், சலனங்கள், ப.84

34. இராஜம்கிருஷ்ணன், ஓசைகள் அடங்கிய பிறகு, ப.54

35. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.68

36. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப் பின்னும், ப.214

37. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.243

38. இராஜம்கிருஷ்ணன், கோடுகளும் கோலங்களும், ப.111

39. இராஜம்கிருஷ்ணன், கோபுரபொம்மைகள், பக்.28-29

40. இராஜம்கிருஷ்ணன், நிழற்கோலம், ப.98

41. இராஜம்கிருஷ்ணன், மாயச்சுழல், ப.16

42. மேலது, ப.51

43. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப்பின்னும், ப.84

44. மேலது, ப.90

45. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.16

46. இராஜம்கிருஷ்ணன், கூட்டுக்குஞ்சுகள், ப.133

47. மேலது, ப.135

48. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.243

49. இராஜம்கிருஷ்ணன், கோபுரப்பொம்மைகள், ப.12

50. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.28

51. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், 243

52. இராஜம்கிருஷ்ணன், கோபுரப் பொம்மைகள், ப.98

53. இராஜம்கிருஷ்ணன், புயலின் மையம், ப.226

54. இராஜம்கிருஷ்ணன், கூட்டுக்குஞ்சுகள், ப.130

55. இராஜம்கிருஷ்ணன், விலங்குகள், ப.114

56. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.263

57. மேலது, ப.233

58. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், ப.4

59. இராஜம்கிருஷ்ணன், மாறிமாறிப் பின்னும், ப.60

60. இராஜம்கிருஷ்ணன், கோபுரப்பொம்மைகள், ப.10

61. இராஜம்கிருஷ்ணன், சேற்றில் மனிதர்கள், ப.158

62. இராஜம்கிருஷ்ணன், மானுடத்தின் மகரந்தங்கள், ப.38

63. இராஜம்கிருஷ்ணன், சுழலில் மிதக்கும் தீபங்கள், பக்.86-87

64. இராஜம்கிருஷ்ணன், கரிப்பு மணிகள், பக்.246-247

65. இராஜம்கிருஷ்ணன், தோட்டக்காரி, ப.32

66. மேலது, ப.43

67. இராஜம்கிருஷ்ணன், மாயச்சுழல், ப.214

68. இராஜம்கிருஷ்ணன், கூடுகள், ப.73

69. இராஜம்கிருஷ்ணன், மண்ணகத்துப் பூந்துளிகள், ப.132

## முடிவுரை

“பெண்ணிய நோக்கில் இராஜம்கிருஷ்ணன் நாவல்கள்” என்னும் தலைப்பில் செய்யப்பட்ட இவ்வாய்வில் ஆறு இயல்களிலும் கண்டறியப்பட்ட உண்மைகள் கீழே தொகுத்துத் தரப்படுகின்றன.

பெண்ணியத்தைக் குறிக்க மகளிரியம், பெண் நிலைவாதம், பெண்ணுரிமை, பெண்ணியல் ஆகிய பெயர்கள் பயன்படுத்தப்பட்டதை வரலாற்றில் இருந்து அறியமுடிகின்றது.

பெண்ணியம் என்பது பெண்களின் தனிப்பட்ட, குடும்ப, சமுதாய, அரசியல், பொருளாதார சூழ்நிலைகளில் செயல்படும் சமத்துவ நெறியாகும்.

தமிழில் வேதநாயகம் பிள்ளை, பாரதியார், பாரதிதாசன், பெரியார், திரு.வி.க போன்ற அறிஞர்களின் பெண்விடுதலைச் சிந்தனைகள் பெண்ணியச் சிந்தனைகளுக்கு முன்னோடியாக அமைந்தன.

பெண்ணியத்தில் முப்பது வகைகள் காணப்படுகின்றன.

மிதவாதப் பெண்ணியம், சோஷலிச பெண்ணியம் தீவிரவாதப் பெண்ணியம் ஆகிய வகைகள் மட்டுமே பெண்ணிய உலகில் பெருமளவில் புரிந்து கொள்ளப்பட்டுள்ளன.

மிதவாதப் பெண்ணியமே முதலில் தோன்றிய பெண்ணியம் ஆகும்.

சோஷலிச பெண்ணியத்தில் பெண்ணியமும் மார்க்சியமும் ஒன்றிணைகின்றன. இப்பெண்ணியம் வர்க்க வேறுபாடு, பால் வேறுபாடு இரண்டையும் ஒழிப்பதில் கவனம் செலுத்தியது.

சோஷலிசப் பெண்ணியம் தமிழில் சமதர்ம பெண்ணியம் என மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

தீவிரப் பெண்ணியம் இரண்டாம் அலைப் பெண்ணியம் என அழைக்கப்படுகிறது.

தீவிரவாதப் பெண்ணியமானது ஆண் நாயகம், குடும்பம், பாலியம், பெண்ணின் வரலாறு ஆகிய நான்கு பொருண்மைகளை விவாதித்தது.

மொகஞ்சதோரா, ஹரப்பா நாகரீக காலத்தில் இந்தியாவில் தாய்வழிச் சமூகம் நிலைபெற்றிருந்ததை அறியமுடிகின்றது.

தொல்காப்பியம் ஆண்களுக்கென்று தனியான இயல்புகளையும், பெண்களுக்கென்று தனியான இயல்புகளையும் கட்டமைத்துள்ளது.

இந்தியச் சமுதாயத்தில் பெண் விடுதலையைக் கொண்டுவர பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், தியசாபிகல் நிறுவனம், இராமகிருஷ்ணமடம் ஆகிய அமைப்புகள் தீவிரமாக செயல்பட்டன.

பெண்ணியம் எனும் கோட்பாடு உருப்பெறாத காலத்தில் தோன்றிய பெரியாரின் சிந்தனைகள் பெண்ணியத்தோடு பெரும்பான்மையும் ஒத்துச்செல்கின்றன.

இராஜம்கிருஷ்ணன் தொடக்ககாலத்தில் லேகினி, காவேரி, கே.மித்ரா ஆகிய புனைப்பெயர்களில் எழுதினார்.

இராஜம்கிருஷ்ணன் 50க்கும் மேற்பட்ட நாவல்களைத் தந்துள்ளார்.

இராஜம்கிருஷ்ணன் கள ஆய்வு செய்து எழுதிய நாவல்கள் அலைவாய்க் கரையில், கரிப்புமணிகள், கூட்டுக் குஞ்சுகள், சேற்றில் மனிதர்கள், குறிஞ்சித்தேன், வளைக்கரம் ஆகிய நாவல்களை எழுதியுள்ளார்.

நாவல், சிறுகதை, குறுநாவல், நாடகம், பயணக்கட்டுரை, மொழிபெயர்ப்பு, திறனாய்வுக் கட்டுரை, வாழ்க்கைவரலாறு ஆகிய வகைமைகளில் இராஜம்கிருஷ்ணன் படைப்புக்கள் வெளிவந்துள்ளன.

இராஜம்கிருஷ்ணனின் தொடக்க கால நாவல்கள் பிரச்சாரத் தன்மையுடனும், நெகிழ்வுத் தன்மையுடனும் காணப்படுகின்றன.

காகங்களைக் குறியீடாகக்காட்டும் காக்கானி நாவலைக் குழந்தை இலக்கியம் என்ற வகைமைக்குள் அடக்கமுடிகிறது.

தூத்துக்குடி வட்டாரத்தைச் சார்ந்த மீனவ இனக்குழு மக்களின் வாழ்வியல் பதிவாக அலைவாய்க்கரையில் நாவல் அமைந்துள்ளது.

குறிப்பிட்ட வட்டாரத்தின் சிக்கலைப் பேசும் பொழுது அவ்வட்டார மக்களின் மொழியை இராஜம்கிருஷ்ணன் நுட்பமாகப் பயன்படுத்தியுள்ளார்.

குடும்ப அமைப்புக்குள் பெண்கள் சந்திக்கும் சிக்கல்களே இராஜம்கிருஷ்ணன் எழுதிய அனைத்து நாவல்களின் அடிக்கருத்தாகும்.

தாய்வழிச் சமூகத்தைக் கொண்டாடுதல், தந்தை வழிச் சமூக அநீதியை விமர்சித்தல், வேதகாலத்தைப் பொற்காலமாகக் காட்டுதல், இலக்கியத்தில் காணப்படும் ஆணாதிக்கச் சிந்தனைகளைத் தகர்த்தல், பெண்படைப்பாளிகளின் இலக்கியப் படைப்புகளை ஆராய்தல், தொன்மங்களில் ஊடாடிக்கிடக்கும் ஆண் மையப் புனைவுகளை மறுபார்வை செய்தல், பெண்களைக் கொச்சைப்படுத்தும் ஊடகங்களைக் கண்டனம் செய்தல், பண்பாட்டு விழுமியங்களைக் கேள்விக்குட் படுத்துதல், குடும்ப அமைப்பின் குறைபாடுகளை ஆராய்தல், சமூக அமைப்புக்குள் பெண் எதிர்கொள்ளும் சிக்கல்களை வெளிக்கொணர்தல், பெண் சக்தியை ஒன்றிணைத்தல் ஆகியவை இராஜம்கிருஷ்ணனின் பெண்ணியத் திறனாய்வுப் போக்காகும்.

தாய்வழிச் சமூகத்தை இராஜம்கிருஷ்ணன் தாயாண்சமூகம் என்றழைக்கிறார்.

இயற்கையுடன் இயைந்த வாழ்வு, வேட்டையாடும்திறன், பெண் தெய்வங்களுக்கு முக்கியத்துவம், கூடல் விழைவை பெண்ணே முன்மொழிதல், கல்வி உயர்வு, குழுவுக்குத் தலைமையேற்றல், பெயர்த்தெடுக்கப்படாமை ஆகியவை தாய்வழிச்சமூகத்தின் சிறப்புகளாகக் காட்டப்பட்டுள்ளன.

பெண்ணின் சொத்துரிமையைப் பறித்தல், கணவன் வீட்டுக்கு மனைவியைப் பெயர்த்துச் செல்லுதல், வரதட்சணை ஆகிய அநீதிகள் தந்தைவழிச் சமூகத்திலிருந்து தோன்றியதாக இராஜம்கிருஷ்ணன் தனது திறனாய்வு நூல்களில் குறிப்பிடுகிறார்.

பெண் தேவதைகளுக்கு தனித்துவமான உயர்ந்த இடம் வழங்கப்பட்டமை, பெண்கல்வி சிறப்புற்றிருந்தமை, கவிதைப் படைப்பாளியாக பெண்கள் இயங்கியமை, போரிடும் உரிமை பெற்றிருந்தமை, ஆணாதிக்க அநீதிகள் உருப்பெறாமை ஆகிய காரணங்களால் வேதகால சமூகம் பெண்களின் பொற்காலமாக அடையாளப்படுத்தப்படுகிறது.

இராஜம்கிருஷ்ணன் திருக்குறள், சிலப்பதிகாரம், பிரதாப முதலியார் சரித்திரம், பாரதியார் கவிதைகள், அக்கினிப் பிரவேசம் ஆகிய படைப்புக்களில் அமைந்த ஆணாதிக்கச் சிந்தனைகளை விமர்சித்துள்ளார்.

இராஜம்கிருஷ்ணனின் திறனாய்வு நூல்களில் வேதகால, சங்ககாலப், பக்தி இலக்கியக்காலப் பெண்கவிஞர்களைப் புகழ்ந்துள்ளார்.

மீரா, அக்கமாதேவி, ஆகிய பிறமொழி பெண் கவிஞர்களின் படைப்புகளும் இராஜம்கிருஷ்ணனால் ஆராயப்பட்டுள்ளன.

மக்கள் தொடர்பு சாதனங்கள் நிலை நிறுத்தும் பெண்ணடிமைத் தனங்கள் இராஜம்கிருஷ்ணனால் கேள்விக்குட்படுத்தப்படுகின்றன.

சமூகம் பெண்களுக்கென்று வைத்திருந்த விழுமியங்களான அச்சம், மடம் நாணம், அடக்கம், கற்பு ஆகியவற்றை இராஜம்கிருஷ்ணன் மறுபார்வை செய்துள்ளார்.

கற்புக்கோட்பாடு மகளிரை ஒடுக்குவதற்காக வந்த நெறிமுறையென்பது இராஜம்கிருஷ்ணனின் கருத்து ஆகும்.

பெண்ணுக்கு அதிக பொறுப்புகளை வழங்குதல், தாய்வீட்டிலிருந்து பெண்ணைப் பெயர்த்தெடுத்தல், பெண்ணின் ஆற்றல் வீணடிக்கப்படுதல், ஆணுக்கு அதீத சுதந்திரங்களை வழங்குதல் ஆகியவற்றைக் குடும்ப அமைப்பின் குறைபாடுகளாய் இராஜம்கிருஷ்ணன் காட்டுகிறார்.

பெண்குழந்தை பிறப்புக்கு வரவேற்பின்மை, பெண்ணாகப் பிறப்பதால் வரும் சிக்கல்கள், வளர்ப்பு முறை வேறுபாடு, சாதனைகள் புகழப்படாமை, முதிர்கன்னிகள் இகழப்படுதல், ஆணுடன் பழகும் உரிமையின்மை, காதலிக்கும் உரிமையின்மை, சுதந்திரமின்மை, காலம் கட்டுப்படுத்தப்படுதல், புழங்குவெளி சுருக்கப்படுதல், வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் உரிமையின்மை, கருப்புநிறப்பெண் புறக்கணிக்கப்படுதல் ஆகியவை திருமணத்திற்கு முன் பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள் ஆகும்.

ஆண் பெண் வளர்ப்பு முறையில் உணவு வேறுபாடு, வேலைப்பழு வேறுபாடு, மதிப்பு வேறுபாடு, சுதந்திரவேறுபாடு ஆகிய

வேறுபாடுகள் காணப்படுவதனை இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் இருந்து அறியமுடிகின்றது.

வேலைக்காரியாக்கப்படுதல், பாலியல்கருவியாக்கப்படுதல், பேச்சுரிமையின்மை, அடக்கப்படுதல், சுதந்திரமின்மை, புழங்குவெளி சுருக்கப்படுதல், காலம்கட்டுப்படுத்தப்படுதல், அடித்துத்துன்புறுத்தப்படுதல், சொற்களால் துன்புறுத்தப்படுதல், திறமைகள் மதிக்கப்படாமை, மேலாண்மைத் திறன் அங்கீகரிக்கப்படாமை, வேலைக்குச் செல்லத்தடை, பிறந்த வீட்டோடு உறவு பாராட்டத்தடை, விருப்புகள் புரிந்து கொள்ளப்படாமை, பொறுப்பின்மை, பணிப்பங்களிப்பின்மை, அரவணைப்பின்மை, நம்பிக்கையின்மை, திருமண விலக்கம் ஆகியவை திருமணத்திற்குப் பின் பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள் ஆகும்.

பெண்ணின் புழங்குவெளி சமையல்அறை, படுக்கை அறை ஆகியவற்றுக்குள் முடக்கப்படுவதை இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் வெளிக்காட்டியுள்ளன.

கணவர்கள் மனவையிடம் பொருள் கேட்டும், நடத்தை மீது சந்தேகம் கொண்டும், காரணமின்றியும் மனைவிகளை உடல்வன்முறைக்கு ஆட்படுத்துவதை இராஜம்கிருஷ்ணனின் நாவல்கள் வழி அறியமுடிகின்றது.

பெண்களை இழிவுபடுத்தும் வசைமொழிகளை வார்த்தைகளால் நிகழ்த்தப்படும் வன்முறை என மதிப்பிடமுடிகிறது.

பெண்சிசுக்கொலை, குழந்தைத் தொழிலாளர் பிரச்சினை, குழந்தைத்திருமணம், பெண்கல்விமறுக்கப்படுதல், வரதட்சணை, இம்சைக்கலாச்சாரம், ராகிங் கொடுமை, பாலியல் சுரண்டல், வன்புணர்வு, பரத்தமை, கைம்பெண் சிக்கல்கள், வேலைக்குச் செல்லும் பெண்களின் சிக்கல்கள், ஊடகச்சீர்கேடுகள், அதிகாரவன்முறை, கலாச்சார நெருக்கடி ஆகிய சமுதாயச்சிக்கல்களை இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் காணமுடிகிறது.

பெண்குழந்தை மீதான வெறுப்பு, கணவனின் எதிர்ப்பு, வரதட்சணை, மருத்துவ வளர்ச்சி ஆகிய காரணங்களால்

பெண்சிசுக்கொலைகள் நிசழ்வதை இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் புலப்படுத்துகின்றன.

இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் தீப்பெட்டித்தொழில், உப்பளத்தொழில் ஆகியவற்றில் குழந்தைத் தொழிலாளர்கள் சந்திக்கும் சிக்கல்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

பொருளீட்டுதல், வீட்டு வேலைசெய்தல், வரதட்சணை, திருமணம், குடும்பச்சூழல், பாலினம், பெண்கல்வியை ஊக்குவிக்காத தாய் ஆகிய காரணங்களால் பெண்கல்வி தடைபடுவதை இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் பதிவு செய்துள்ளன.

திருமண ஆசைகாட்டி ஏமாற்றுதல், திருமணம் செய்து ஏமாற்றுதல், வாழ்வின் மேன்மைகளைத் தருவதாகக் கூறிப் புணர்ச்சிக்கு அழைப்பு விடுத்தல், நம்பிக்கைத் துரோகம் செய்தல் ஆகிய முறைகளில் பாலியல் சுரண்டல் நிகழ்வதாக இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் எச்சரிக்கின்றன.

வலியவர்கள், அதிகாரத்தைக் கையில் வைத்திருப்போர், பாதிரியார்கள், உடன் பணிபுரிவோர், உறவினர்கள், காதலன், நண்பன், கணவன் ஆகியோரால் பாலியல் வல்லுறவு நிகழ்த்தப்படுவதாக இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் காட்டுகின்றன.

பல பெண்களுடன் உறவு வைத்துக்கொள்ளும் சமூக அநீதியைப் பற்றிப் பேசும் இராஜம்கிருஷ்ணன் மேல்தட்டில் நிகழும் பரத்தமையையும், அடித்தட்டில் நிகழும் பரத்தமையையும் வெளிக்கொணர்ந்துள்ளார்.

அணிகலன்களைத் துறக்கச் செய்தல், மஞ்சள் குங்குமம் வைப்பதற்குத் தடை போடுதல், பொட்டழித்தல், கோலத்தைக் குலைத்தல், கணவன்வீட்டு உதவிகள் நிறுத்தப்படுதல், மரணத்திற்கான பழியைச் சுமத்துதல், மறுமணத்தடை ஆகிய அநீதிகளைக் கைம்பெண்களுக்கு எதிராகச் சமூகம் செய்து வருகிறது என்று இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் குற்றம் சாட்டுகின்றன.

பாலியல் சுரண்டல், இயற்கையின் உந்துதல்களுக்கு வடிகாலின்மை, குழந்தைகளைப் பராமரிக்க முடியாமை, கழிப்பறையின்மை, கூலி வேறுபாடு, பொதுநிர்ணயக் கூலி

வழங்கப்படாமை ஆகிய சிக்கல்களை வேலைக்குச் செல்லும் பெண்கள் சந்திப்பதாக இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் காட்டுகின்றன.

மதம், இலக்கியம், கலை, தொன்மம், பண்பாடு, விழுமியம் ஆகியவை கலாச்சாரம் சார்ந்து பெண்ணுக்கு நெருக்கடி தருவதை இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் விமர்சிக்கின்றன.

இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் பெண்களுக்கான தீர்வுகளாக கல்வி உரிமை, பொருளாதாரச் சுதந்திரம், தொழில் சார்ந்த விடுதலை, குடும்ப அமைப்புக்குள் சீர்திருத்தம், சமூக விடுதலை, மரபுகளில் மாற்றம், பண்பியல் மாறுதல்கள், பெண் சக்தியை ஒன்றிணைத்தல், போராட்டம், புரட்சி, பொதுவுடைமை ஆகிய தீர்வுகளை முன் வைத்துள்ளன.

இராஜம்கிருஷ்ணன் உயர்பதவிக்குரியகல்வி, தொழிற்கல்வி, ஆளுமையை வளர்க்கும் கல்வி, அஞ்சல் வழிக்கல்வி, பள்ளிக்கல்வி ஆகியவை பெண்களுக்குத் தேவை என வலியுறுத்தியுள்ளார்.

பெண்கள் பொருளாதாரச் சுதந்திரம் பெற உழைத்தல், தொழில் வாய்ப்பு உருவாக்கப்படுதல், வேலைக்குச் செல்லுதல், சுயதொழில் செய்தல், விவசாயம் செய்தல் ஆகிய வழிமுறைகள் இராஜம்கிருஷ்ணன் நாவல்களில் கூறப்பட்டுள்ளன.

குடும்ப அமைப்பைப் புனரமைத்தல், சமமான பணிப்பங்களிப்பு, இயைந்த வாழ்வு, முடிவெடுக்கும் உரிமை, புழங்குவெளிவிரிவாக்கம் ஆகிய சீர்திருத்தங்கள் குடும்ப அமைப்பிற்குள் செய்யப்பட வேண்டும் என இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் அறிவுறுத்தியுள்ளன.

சமூக விடுதலை உருவாக சாதிவேறுபாடும், மதவேறுபாடும் களையப்படவேண்டும் என இராஜம்கிருஷ்ணன் நாவல்கள் கோருகின்றன.

சமஉரிமை, வரதட்சணை ஒழிப்பு, கைம்பெண் துயர்துடைப்பு, ஆகியவற்றையும் சமூக விடுதலைக்கான கூறுகளாக இந்நாவல்கள் பரிந்துரைக்கின்றன.

இராஜம்கிருஷ்ணன் நாவல்கள், பண்பியல் மாற்றம் பற்றியும் பேசுகின்றன. அகமாற்றத்தை உருவாக்குதல், திரைப்படமோகத்திலிருந்து விடுபடுதல், நல்ல வழிகாட்டிகளைப்

பின்பற்றுதல், அழுவதை நிறுத்துதல், தலைமைத் தன்மையை வளர்த்தல், துணிச்சல் பெறுதல், அநியாயத்துக்கு அடிபணியாமை, தனித்து சாதித்தல் ஆகிய பண்பியல் மாற்றங்களை இந்நாவல்கள் முன்வைத்துள்ளன.

பெண்கள் பிரச்சினைகளுக்காகவும், சமூகப்பிரச்சினைகளுக்காகவும் பெண்கள் ஒன்றிணையும் பொழுது பெண்களுக்கான தீர்வுகள் உருவாகும் என்பது இராஜம்கிருஷ்ணன் முன் வைக்கும் செய்தி ஆகும்.

மொத்தமாகப் பார்க்கும் பொழுது இராஜம்கிருஷ்ணனின் எழுத்து பெண்ணிய எழுத்தாகவும், சமுதாயவியல் எழுத்தாகவும் பரிணாமம் கொண்டுள்ளது. பெண்களின் சிக்கல்களைச் சுட்டுதல், விவரித்தல், விமர்சித்தல், கண்டித்தல், சிக்கல்களுக்குத் தீர்வுகளை உருவாக்குதல் ஆகிய நோக்கங்களைக் கொண்டு இயங்கினாலும் அவை கலை நேர்த்தியை எவ்விடத்திலும் கைவிட்டுவிடவில்லை. எனவே இராஜம்கிருஷ்ணன் நாவல்களை தரமான சமூக நாவல்களாகவும், பெண்ணிய நாவல்களாகவும் மதிப்பிடமுடிகிறது.

## துணை நூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. ராஜம்கிருஷ்ணன் : அழுக்கு
தாகம் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு-1990.

2. .................... : அலைவாய்க்கரையில்
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
முதற்பதிப்பு-1978.

3. .................... : இடிபாடுகள்
தாகம் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு-1994.

4. .................... : ஓசைகள் அடங்கிய பிறகு
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
முதற்பதிப்பு-1982.

5. .................... : கரிப்பு மணிகள்
செல்லப்பா பதிப்பகம்
மதுரை
முதற்பதிப்பு-1979.

6. .................... காக்கானி
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
முதற்பதிப்பு-1983.

7. .................... : கூட்டுக்குஞ்சுகள்
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
இரண்டாம் பதிப்பு-1985

8. .................... கூடுகள்

தாகம் பதிப்பகம்
சென்னை
இரண்டாம் பதிப்பு-1993

9. ..................... : கோபுரப்பொம்மைகள்
தாகம் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு-1993.

10. ..................... : கோடுகளும் கோலங்களும்
தாகம் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு-1998.

11. ..................... : சலனங்கள்
பாரி புத்தகப்பண்ணை
சென்னை
முதற்பதிப்பு-1977.

12. ..................... : சுழலில் மிதக்கும் தீபங்கள்
தாகம் பதிப்பகம்
சென்னை
மூன்றாம் பதிப்பு-1994.

13. ..................... : சேற்றில் மனிதர்கள்
தாகம் பதிப்பகம்
சென்னை
மூன்றாம் பதிப்பு-1990.

14. ..................... : தோட்டக்காரி
தாகம் பதிப்பகம்
சென்னை
இரண்டாம் பதிப்பு-1992.

15. ..................... : நிழற்கோலம்
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்
சென்னை
முதற்பதிப்பு-1967.

16. ..................... : புயலின் மையம்
தாகம் பதிப்பகம்
சென்னை
நான்காம் பதிப்பு-1998.

17. ..................... : பெண் குரல்
பாரி புத்தகப்பண்ணை
சென்னை
மூன்றாம் பதிப்பு-1981.

18. ..................... : மண்ணகத்துப்பூந்துளிகள்
தாகம் பதிப்பகம்
சென்னை
இரண்டாம் பதிப்பு-1990.

19. ..................... : மாயச்சுழல்
மங்கள நூலகம்
சென்னை
முதற்பதிப்பு-1957.

20. ..................... : மானுடத்தின் மகரந்தங்கள்
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
முதற்பதிப்பு-1984.

21. ..................... : மாறிமாறிப் பின்னும்
தாகம் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு-1996.

22. ..................... : விலங்குகள்
பாரி புத்தகப்பண்ணை
சென்னை
முதற்பதிப்பு-1984.